

# பியர்ஸ்

அழகுள்ள மாதர்
வழிவழியாக
ஆண்டுவரும்
அழகுசாதன
செல்வம்!

பியர்ஸ் சோப்—கிளிஸரின் அடங்கிய தூய்மையான அழகுசாதன சோப்—உங்கள் சருமத்திற்கு அனுகுணமான, உங்கள் வனப்புக்குப் பாதுகாப்பான சோப். மணங் கமழும் பியர்ஸ் சோப் சிறு குழந்தையின் பச்சிளஞ் சருமத்திற்கும் உகந்தது!

பியர்ஸ் டால்கம்...பட்டுப் போன்ற மென்மையான, சொக்கும் மணமுள்ள பவுடர்...உங்களை நாள் முழுதும் மாறாத புது மலர்ச்சியுடனும் வனப்புடனும் வைத்திருக்கிறது. எடுப்பான இளமஞ்சள் நிறமும் பச்சை நிறமும் பொன்னிறமும் இணைந்த டின்னில் கிடைக்கும் பியர்ஸ் டால்கமையே வாங்கிக்கொள்ளுங்கள்.







PSTP. 1-50 TM

லண்டனிலுள்ள ஏ. & எப். பியர்ஸ் லிமிடெட் சார்பாக, இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற | விகாரி௵
இதழ் 48 | தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | ஆனிமீ 14உ

# ஜனாதிபதியும் எச்சரிக்கை செய்கிறார்

பாரத நாட்டின் ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத், பழம் பெரும் தேச பக்தர். காந்தி மகானின் உத்தம சீடர்களில் ஒருவராகப் போற்றப்படுபவர். ஆனால் இன்று அவர் வகிக்கும் பதவியிலிருந்து கொண்டு மத்திய மந்திரி சபைக்கும் பிரதம மந்திரிக்கும் எதிராகக் குரல் கொடுத்து எதேச்சையாக, சுதந்திரமாக ஏதும் செய்ய முடியாது. பிரதம மந்திரியுடன் ஒத்துப்போக வேண்டியவரே!

ஆயினும் அவர் இன்று பாரதப் பிரதமர் நேருஜிக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார். ஏனெனில் ஏறத்தாழ ஒரு ஆபத்தான நிலை நாட்டில் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தே அவ்வாறு செய்திருக்கிறார். முன்னாட்களில் தேசத்துக்குச் செய்த தொண்டின் காரணமாக, பாரதமக்களை ராஜன்பாபு நன்றாக உணர்ந்திருக்கிறார். அந்த அறிவின் காரணமாக நில சம்பந்தமாகவும், சமுதாய சீர்திருத்தங்கள் சம்பந்தமாகவும் காங்கிரஸ் கடைப்பிடித்து வரும் கொள்கைகள் மிகவும் ஆபத்தானவை என்று உணர்ந்து ஒன்றல்ல, இரண்டல்ல, பத்தொன்பது பக்கங்கள் கொண்ட கடிதம் ஒன்று பிரதமர் நேருஜிக்கு அனுப்பியிருக்கிறார் என்று சொல்லப்படுகிறது.

ஜனாதிபதி அந்தக் கடிதத்தில் சோஷலிஸக் கொள்கையை அரசாங்கம் ஒப்புக் கொண்டாலும், ''இன்று உடனடியாகச் செய்ய வேண்டியது உணவு உற்பத்தி. இந்த விஷயத்தில் ஈடுபட்டிருக்கும்போது, சமுதாய அமைப்பை மாற்றும் திட்டங்களைக் கலந்தடிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் உணவு உற்பத்தி பெரிதும் பாதிக்கப்படும்'' என்று சொல்லியிருக்கிறார்.

தானிய வியாபாரத்தைச் சர்க்கார் மேற்கொண்டால் அதற்கு வேண்டிய பெரிய உத்தியோக ஸ்தாபனமட்டுமின்றி, இருக்கும் கஷ்டங்களைப் பலமடங்காகப் பெருக்கிப் புதுப் புதுக் கஷ்டங்களையும் உண்டாக்கும் என்றும் கடுமையாக எச்சரித்திருக்கிறார்.

சர்க்கார் வியாபாரம், பலர் உரிமை கொண்டாடும் கூட்டு விவசாயம் ஆகியவற்றைப் புகுத்தினால், அவை மக்கள் மனோபாவத்தையே முற்றும் மாற்றிவிடும். அவரவர் தங்களுக்குச் சொந்தமாக வைத்திருந்த சிறு நிலங்களைச் சர்க்கார் பறித்துக் கொண்டு விட்டால் மனத்தாங்கல் ஏற்படுத்தும், அவர்கள் மன அமைதியையும் வாழ்வையும் முற்றும் மாற்றிவிடக்கூடிய காரியத்தைச் செய்யக்கூடாது என்றும் எச்சரித்திருக்கிறார்.

ராஜாஜி சொல்லி வருவதைத்தான் ஜனாதிபதி ராஜன்பாபு எழுதியிருக்கிறார். சுதந்திரக் கட்சியினர் பூரணமாக நம்பும் விஷயங்களையே எழுதியிருக்கிறார்.

இந்தக் கடித விவகாரம் பத்திரிகைகளில் வெளிவந்த மறுநாள் ஜனாதிபதி பெங்களூரில் இருந்தார். அங்கு பெங்களூர் வைத்தியக் கல்லூரியின் புத்தகாலயத்துக்கு அஸ்திவாரம் அமைக்கச் சென்ற ஜனாதிபதி மிகத் தெளிவாகவும், உருக்கத்தோடும், மனத்தில் கலக்கத்தோடும் பேசினார்.

''விளையாட்டு விஷயத்தில்கூட மக்கள் இன்று சர்க்காரை எதிர்நோக்க வேண்டியிருக்கிறது. இது வளர்ச்சியின் அறிகுறியல்ல, பலவீனத்தின் அறிகுறி. சர்க்கார் மக்களுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் தர, தானே தன் தலையிலே எல்லாப் பொறுப்புக்களையும் இழுத்துப் போட்டுக் கொள்கிறது. உணவைக் கூடத் தானே தருவதாகச் சொல்கிறது! இவை யெல்லாம் நல்ல எதிர்காலத்துக்கான அறிகுறிகளாக எனக்குத் தோன்றவில்லை. மக்கள் தங்களுக்கு வேண்டியவைகளுக்குத் தங்களையே நம்பி வாழவேண்டும் என்று விரும்புகிறேன்'' என்று சொன்னார்.

''நில உரிமையைப் பேணும் சுதந்திரம், தன் குடும்பத்தைத் தான் காப்பாற்றும் சுதந்திரம், தன் நிலத்தில் தான் பாடுபடும் சுதந்திரம், தன் தொழிலைத் தான் நடத்தும்

சுதந்திரம் ஆகிய சுதந்திரங்களைக் காப்பாற்றத்தான் சுதந்திரக் கட்சி தோன்றியிருக்கிறது" என்று சென்ற வாரம் எழுதியிருந்தோம்.

இதே கொள்கையைத்தான் ஜனாதிபதியும் தெரிவித்திருக்கிறார். அவருக்கும் இன்றையக் காங்கிரஸ் கொள்கைகளில் அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது! காங்கிரஸ் ஆட்சி முறை மக்களுக்கு நன்மை பயப்பதாக இல்லை, அடிமைத்தனத்தில் ஆழ்த்துவதாக இருக்கிறது என்று உணர்கிறார் என்பதைத் தெளிவாக்கி விட்டார்.

ஜனாதிபதியின் அபிப்பிராயம் இப்படியென்றால் மற்றொரு பழுத்த காங்கிரஸ்காரரும், பல பொறுப்பான பதவிகள் வகித்து, சீரிய தேசப் பணி புரிந்தவருமான திரு ஆனே அவர்கள் ராஜாஜி தைரியமாகவும் துணிச்சலோடும் ஒரு புதிய அகில இந்தியக் கட்சியாகச் சுதந்திரக் கட்சியை ஆரம்பித்ததற்குத் தமது மனப்பூர்வமான பாராட்டுதலைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்.

"இந்தப் புதுக் கட்சி இந்தியாவை கம்யூனிஸத்திலிருந்து தடுத்துக் காப்பாற்றும். இது தேசமெங்கும் புது விழிப்பை ஏற்படுத்தியுள்ளது. சுயமாக நினைக்கும் சுதந்திரம் பெற்றவர்கள் இந்தக் கட்சி தங்களுக்கு உகந்த கட்சியாக இருப்பதை உணரலாம்!"

இன்று காங்கிரஸில் சிந்தனைச் சுதந்திரமோ, பேச்சுச் சுதந்திரமோ, செயல் சுதந்திரமோ இல்லை.

சிந்தனைக்கு நேருஜி, பேச்சுக்கு நேருஜி, செயலுக்கும் நேருஜிதான்! மாறுபட்ட அபிப்பிராயம் சொல்லி விட்டால், அவ்வளவுதான், அப்படியே நேருஜியின் கோபத்துக்கு ஆளாக வேண்டியது.

இந்த நிலைமையை மனத்தில் வைத்துக் கொண்டு ஸ்ரீ ஆனே அவர்களின் உரையைப் படித்தால் எவ்வளவு பொருள் பொதிந்திருக்கிறது என்பது தெரிய வரும்.

மொத்தத்தில் தேசமெங்கும் சுதந்திரக் கட்சிக்கு உற்சாகமான வரவேற்பு காண்கிறோம். மக்களின் சுதந்திரம் காப்பாற்றப்பட நல்ல வாய்ப்பு இருக்கிறது.

ஜனாதிபதி ராஜன்பாபுவின் மறைமுகமான ஆசி பெரும் பக்கபலமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# நேயர்களுக்கு ஒரு வார்த்தை

அடுத்த ஜுலை முதல் வார இதழிலிருந்து சில புதிய அம்சங்கள் 'கல்கி'யில் வெளிவரப் போகின்றன.

கல்கி பத்திரிகையின் மூலமாகத் தமிழர்களின் இல்லங்களிலெல்லாம் 'பாவை விளக்கு' ஏற்றி வைத்து, கல்கி நேயர்களின் இதயங்களிலே இடம் பெற்று விட்ட திரு அகிலன் இப்போது தமிழ் நாட்டின் சரித்திரச் சூழ்நிலைக்குள் புகுந்து ஒரு அற்புதமான நாவலுடன் மீண்டிருப்பதை நேயர்கள் அறிந்திருப்பார்கள். அவர் எடுத்துக் கொண்டிருக்கும் காலம் தமிழ் நாட்டின் சரித்திரத்திலே ஒரு பொற்காலம். அதைப் படிக்கப் போகும் நமக்கும் ஒரு பொற்காலம் தானே?

வீரத்தில் வேங்கையாக விளங்கிய ராஜராஜனின் மைந்தன் ராஜேந்திர சோழன் கதையில் நடுநாயகமாக விளங்குகிறார். கதாநாயகனோ வேளிர்குலக் கொழுந்தான தென்னவன் இளங்கோவேள். போர்க்களத்திலே தன் காதலியைச் சந்திக்க விரும்பும் அவனைத் திருப்ப முயலுபவர்கள் அருள்மொழி நங்கையும் ரோகிணியும். கல்கி நேயர்களை மகிழ்விக்க அடுத்த இதழிலிருந்து வேங்கையின் மைந்தன் பவனி வரப் போகிறார்!

சர்க்காரில் சாதாரணக் குமாஸ்தாவாக நுழைந்து தமது திறமையால் கலெக்டர் பதவி வரை உயர்ந்து சமீபத்தில் ஓய்வு பெற்ற திரு பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் தமிழ்ப் பற்றைத் தமிழ் மக்கள் நன்கு அறிவார்கள். அவருக்கு இலக்கியத்தில் எவ்வளவு ஆர்வமோ, அவ்வளவு கோவில் சிற்பங்களிலும் சித்திரத்திலும் ஈடுபாடு. அவர் வேங்கடம் முதல் குமரி வரை என்ற தலைப்பில் தென்னாட்டுக் கோயில்களையும் சிற்பங்களையும் பற்றி வாரந்தோறும் எழுதி வருவார். அடுத்த வாரம் வேங்கட மலைக்கு அழைத்துச் செல்கிறார்.

## சுதந்திரக் கட்சி அறிக்கை

தீவிர அனுதாபிகள் உடனே அவரவர்களுடைய ஊரிலும், சுற்றுப்புற பிரதேசங்களிலும் புதுக்கட்சிக்கு அனுதாபம் காட்டக் கூடியவர்களை ஒன்று கூட்டி, முக்கியஸ்தர்கள் சிலரைக் கொண்டு ஒரு காரியக் கமிட்டி நியமித்துக் கொள்ள வேண்டும். நியமித்து அவர்களுடைய பெயர், விலாசம், தொழில் வயது ஆகிய விவரங்களை சுதந்திரக் கட்சி ஆபீஸ், 19, ரேஸ் கோர்ஸ் ரோடு, பெங்களூர். (19, Race Course Road Banglore). என்ற விலாசத்துக்கும் சுதந்திரக் கட்சிப் பதிவாளர், கல்கி, சென்னை-10 என்ற விலாசத்துக்கும் அனுப்பி விட வேண்டும். இவ்வாறு செய்து விட்டால் பிறகு கட்சி அமைப்பு வேலைகளுக்குச் சௌகரியமாக இருக்கும். இந்தக் கமிட்டிகளுக்கு ஜில்லா, தாலுக்கா என்ற எவ்வித பிரதேச வரம்பும் தற்போது வேண்டியதில்லை. அனுதாபிகள் உள்ள இடங்களில் எல்லாம் இத்தகைய கமிட்டிகள் அமைத்துத் தெரியப்படுத்தி விட வேண்டும்.

—சுதந்திரக் கட்சி செயலாளர்கள்

# 'ஹிந்து' கே. சீனிவாசன் மறைவு

ஆங்கில தினசரி "ஹிந்து" ஆசிரியர் திரு கே. சீனிவாசன் தமது 72-வது வயதில் காலமானார் என்ற செய்தி கேட்டு மிகவும் வருந்துகிறோம். பத்திரிகை மரபிலேயே உதித்து, அந்த ரத்தத்திலேயே ஊறி வளர்ந்த திரு கே. சீனிவாசன் தமது கீர்த்தி வாய்ந்த தந்தையார் விட்டுச் சென்ற தேசிய தனமாகிய ஹிந்து பத்திரிகையைத் தேசிய நன்மைக்கும், பாரதப் பண்புக்கும், பத்திரிகை தர்மத்துக்கும் ஏற்ற முறையில் கண்ணியமாகவும், கௌரவமாகவும் நடத்திப் பெருமையடைந்தவர். ஹிந்து பத்திரிகையின் வளர்ச்சியும் பாரத சுதந்திரத்தின் வளர்ச்சியும் சமநடையில் வளர்ந்ததெனலாம். எஸ். ரங்கஸ்வாமியும் ஏ. ரங்கஸ்வாமி அய்யங்காரும் வளப்படுத்திச் சிறப்பித்த ஆசிரியர் வரிசையில் 25 ஆண்டுகளாகப் பணியாற்றி அவர்கள் வகுத்த பாதையினின்று வழுவாது சுதந்திர பாரதத்தின் பல பிரச்னைகளில் தேசிய நலனுக்கு இழுக்கு ஏற்படாதவாறு பொது மக்களின் குரலென இப்பத்திரிகையின் கொடியை ஓங்கிப் பிடித்தவர். தமது கருத்துக்களுக்குச் சர்க்கார் செவி சாய்க்க வேண்டும் என்ற புகழைத் தமது பத்திரிகைக்கு நிலைக்கச் செய்தவர். இன்று தேசியப் பத்திரிகைகளில் முதலிடம் வகித்து, "இந்தச் செய்தி ஹிந்து பத்திரிகையில் வெளி வந்த செய்தி; நம்பத் தகுந்தது; உண்மையானது" என்ற புகழுக்குஉரித்ததாக ஹிந்துவை உயர்த்தி விட்ட நிர்வாகத் திறமை கொண்டவர். அகில உலக பத்திரிகையாளர், செய்தி ஸ்தாபன மகாநாடுகளிலும், உலக அரங்கத்திலும் இந்தியப் பத்திரிகைகளுக்கு உரித்தான சம அந்தஸ்தைப் பெறச் செய்வதில் சலியாமல் உழைத்து வெற்றியும் கண்டவர். அவருடைய சிறப்பான சேவையைப் பாராட்டிப் பாரத அரசாங்கம் அவருக்குப் பத்மபூஷண் விருதையும் அளித்துக் கௌரவித்திருக்கிறது



தொழில்துறையில் வெற்றி கண்டவர் என்பதைத் தவிர கலைப் பற்றும் மனிதப் பண்பும் நிரம்பியவர் திரு சீனிவாசன். அவருடைய அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரமானவர் பலர். பிறர் இடுக்கண்களைத் தீர்த்து வைக்க உதவுவதில் தயங்காதவர். கர்நாடக சங்கீதத்தில் அவருக்குள்ள பற்று இணையற்றது. நுண்ணிய ரசிகர்களில் முன்னணியில் நின்றவர். அகாடமிக்குத் தனிக் கட்டடம் அமைக்கவும் அதற்கு நிதி திரட்டவும் அவர் புரிந்துள்ள சேவை உயர் பண்புடன் கலந்தது. 'வலது கைகொடுப்பதை இடது கை அறியாது' என்ற கொடையின் லட்சணம் திரு சீனிவாசன் அவர்களிடம் நிரம்பவும் உண்டு. மற்றவர்களுக்குத் தாராளமாகக் கொடைகள் வழங்கி அவர்கள் இன்புறுவதைக் கண்டு தாம் உண்மையிலேயே மகிழ்ச்சி கொள்ளும் உயர்ந்த பண்பாளர் திரு சீனிவாசன். அவருடைய மறைவு இந்தியப் பத்திரிகை உலகுக்கு மட்டும் நேர்ந்த நஷ்டமல்ல, கர்நாடக சங்கீதத்துக்கும், தரும தேவதைக்கும் ஏற்பட்ட பெருத்த நஷ்டம். தமிழ்நாடு தனது ஒப்பற்ற புதல்வர் ஒருவரை இழந்து விட்டது. திரு சீனிவாசன் குடும்பத்தினருக்கும், ஹிந்து நிர்வாகத்தினருக்கும் 'கல்கி'யின் மனமார்ந்த அனுதாபத்தை உள்ளன்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# சுதந்திரக் கட்சி

## [சந்தேகங்களும் விளக்கங்களும்]

**பு**து சுதந்திரக் கட்சி தோன்றிய பின் சிலருடைய உள்ளங்களில் சந்தேகங்கள் எழுந்திருக்கின்றன. இவற்றுக்கெல்லாம் சமீபத்தில் ராஜாஜி ஒரு பொதுக் கூட்டத்தில் பதிலளித்தார். சுமார் ஒன்றே முக்கால் மணி நேரம் பேசினார். சென்னை ரஸிக ரஞ்சனி சபை மண்டபத்தில் கூட்டம் பொங்கி வழிந்தது. ஒரு வார்த்தை விடாமல் அக்கூட்டம் ராஜாஜியின் பேச்சைக் கேட்ட மாதிரியிலிருந்து பொதுமக்கள் புதுக்கட்சியினிடம் எவ்வளவு ஆர்வத்துடன் இருக்கிறார்கள் என்பது மிகத் தெளிவாகத் தெரிந்தது.

'சோஷலிஸ சமுதாயம்' என்பது ஏழை பணக்காரன் என்ற ஏற்றத் தாழ்வின்றி வாழும் சமுதாயம். இத்தகைய சமுதாயம் அமைக்க வேண்டும் என்ற லட்சியம் மேல்நாடுகளில் சமீப காலத்தில் எழுந்ததாக இருக்கலாம். ஆனால் நம் நாட்டிலோ அத்தகைய லட்சியம் இன்று நேற்றல்ல, குறளாசிரியர் காலத்துக்கு முன்பிருந்தே இருந்து வந்திருக்கிறது.

பிச்சையெடுத்து வாழ வேண்டிய நிலை ஒருவனுக்கு ஏற்படுமானால், அவனைப் படைத்த ஆண்டவனே அழிந்து போகட்டும் என்று கடுமையாகச் சாபமிடுகிறார் திருவள்ளுவர். லௌகிகத்தை ஒட்டிக் கடவுளின் மீது தம் கோபத்தைத் திருப்புகிறார்.

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்"

சமுதாயத்தில் பணக்காரர்களாக உள்ளவர்கள் பலரோடும் உணவைப் பகுத்து உண்ண வேண்டும் என்றார். அதே சமயம் செல்வம் சேரவும் விடவேண்டும் என்றார். ஊர்க் குளத்தில் நீர் நிறைந்தால், ஊரார்தான் வந்து நீரைப் பருகுகிறார்கள். ஊராருக்குத்தான் பயன்படுகிறது.

செல்வர்கள் தங்களிடம் உள்ள செல்வம், தாங்கள் சம்பாதித்துச் சேமிக்கும் செல்வம் தங்களது என்று நினைக்கலாகாது; ஊராருக்குப் பயன்படத்தான் ஏற்பட்டது என்று வற்புறுத்துகிறார். அப்படி வாழ்வதுதான் அறிவுடைமை என்கிறார்.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு

இதே தருமத்தை ஆயிரம் வருஷங்களுக்குப் பின், கவிச் சக்கரவர்த்தியும் சொல்கிறார்.

தசரத சக்கரவர்த்தி ஆளும் ராஜ்யம் அவனுடைய தனி உடைமையாக இருக்கலாம், இனி ராமன் பட்டத்துக்கு வந்து விட்டால் தனி உடைமை அன்று. பின் என்னவாகும்?

"பூவலயம் இன்று தனி
அன்று பொது என்பார்"

ராமராஜ்யம் பொது உடைமையாகிவிடும் என்று மனமகிழ்ந்தார்.

இவை யெல்லாம் இலக்கியத்தில் மட்டுமன்றி வாழ்வு முறையிலும் இருந்தது என்று ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் பின்வருமாறு விளக்கிச் சொல்வார்கள்:

"வானளாவிய கோவில்களை நமது அரசர்கள் எழுப்பினார்கள்! மாபெரும் மதில்களும், கோபுரங்களும் எழுப்பி ஆண்டவனுக்கு ஆலயங்கள் அமைத்தார்கள். ஆனால் தங்களுக்கென்று ஒரு மாபெரும் மாளிகை அமைத்துக் கொண்ட சின்னம் நம் தமிழ் நாட்டில் எங்காகிலும் பார்க்கிறோமா? இல்லை. ஏன்? கடல் கடந்து சென்று வீரப் புகழை நாட்டி, திரட்டி வந்த செல்வத்தை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டு, தாங்கள் பாமர மக்களைப் போல், தாங்கள் சாதாரணக் குடிகளைப்போல் எளிய வாழ்வையே மேற்கொண்டார்கள்!"

இதைவிட உயர்ந்த சோஷலிஸம் உலகில் வேறு எந்த நாட்டில் காண முடியும்? சிந்தனை உயர்ந்த சிந்தனை; செயல்கள் உயர்ந்த செயல்கள்; வாழ்வு எளிய வாழ்வு.

இதைத்தான் காந்திமகான் வற்புறுத்தினார். அவருடைய தர்மகர்த்தா முறை இதுவே! அவர் கடைப்பிடித்துக் காண்பித்த சோஷலிஸம் இதுவே.

காந்தி மகான் காலத்தில் எத்தனை பேர் தங்கள் ஆடம்பர வாழ்வைத் துறந்து விட்டு, முரட்டுக் கதர் அணிந்து தங்கள் செல்வத்தைத் தேசப் பணிக்கு அர்ப்பணம் செய்யவில்லை!

ஆனால் அந்தக் காந்திமகான் வழிவந்த காங்கிரஸ்காரர்கள் பணக்காரர்களுக்கு வரி விதித்தும், அவர்கள் தொழில்களைத் தாங்கள் மேற்கொண்டும், சொத்துக்களைப் பறிமுதல் செய்தும் அவர்களை ஏழைகளாக்கும் அற்புதப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள். பெரும் பணக்காரர்கள் நிலைமை இப்படி என்றால், நடுத்தர விவசாயிகளின் அதாவது, இரண்டு ஏக்கர் மூன்று ஏக்கர் வைத்திருப்பவர்களின் நில உடைமையைப் பறித்து, கூட்டுறவுச் சங்கத்தில் சேர்த்து விட்டு அவர்களை ஏழைகளாக்கப் பார்க்கிறார்கள். நிலத்தில் உழுது வேலை செய்து பிழைப்பவர்களுக்கும் பிழைப்பில் மண்ணைப் போட்டு யந்திரங்களைக் கொண்டு வந்து பயிர் செய்யப் போகிறார்கள். மொத்த விவசாயமும் சர்க்கார் இலாக்காவின் பொறுப்பானால், உணவு உற்பத்தி சூன்யமாகிப் போய், பணக்காரர், நடுத்

தர வர்க்கத்தினர், ஏழைகள் எல்லோரும் சமமாகப் பஞ்சத்திலும் பட்டினியிலும் கஷ்டப்படும் 'சோஷலிஸத்தை'க் கொண்டு வரப் பார்க்கிறார்கள். இதுதான் காங்கிரஸின் சோஷலிஸப் பாணி சமுதாயம் ஆக இருக்கும்!

இப்படி ஏழைமையில் சமத்துவம் காண முற்படும் சோஷலிஸம் நமக்கு வேண்டாம். இது நாட்டுக்கு ஆபத்தை விளைவிக்கும்; குழப்பத்தை விளைவிக்கும் என்று பறைசாற்றச் சுதந்திரக் கட்சி ஏற்பட்டிருக்கிறது.

சுதந்திரக் கட்சியினர் "செல்வந்தர்களே! நாட்டில் தொழில்களைப் பெருக்கிச் செல்வத்தைப் பெருக்குங்கள்! பண்ணையார்களே! நீங்கள் விவசாயத்தில் கவனத்தைச் செலுத்தி, உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்! ஏழைப் பாட்டாளி மக்களே! நன்றாக உழைத்துச் செல்வத்தைப் பெருக்குங்கள்! கடைசியாக, செல்வந்தர்களே! உங்கள் பொருள், உங்கள் நாட்டின் செல்வம். தெய்வத்தின் செல்வம், ஏழைகளின் செல்வம். ஆகவே, உங்கள் செல்வத்தை ஏழை மக்களின் வாழ்வு வளம் பெற உபயோகியுங்கள்! நமது முன்னோர்களைப் போல் தர்மவாழ்க்கை நடத்துங்கள்" என்றுதான் கோருகிறார்கள்.

இப்படியெல்லாம் பணக்காரர்களைக் கேட்டால் கொடுப்பார்களா? அடித்துப் பிடுங்க வேண்டியதுதான் என்பார்கள் சிலர்.

சர்க்காரின் அதிகாரத்தைவிட ராஜாஜிக்கு மக்கள் பண்பில் நம்பிக்கையிருக்கிறது. நம் நாட்டுப் பண்பாட்டில் நம்பிக்கையிருக்கிறது. அந்தப் பண்பாட்டில் ஊறியவர்களை நல்ல முறையில் நடந்து கொள்ளச் செய்யலாம் என்று சொல்லுகிறார் ராஜாஜி.

சுதந்திரக் கட்சியினர், ஏழைமையைப் பங்கிடும் சோஷலிஸத்தை விடச் செல்வத்தைப் பங்கிடும் தர்மத்தில்தான் நம்பிக்கை வைத்திருக்கின்றனர். அதற்கு நாட்டில் செல்வத்தைப் பெருக்கும் வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்கின்றனர். அதற்கு இடையூறாக எது வரினும் அதை எதிர்க்கவேண்டும் என்கின்றனர்.

சுதந்திரக் கட்சி முதலாளித்துவத்தை ஆதரிக்கவில்லை. நாட்டின் செல்வத்தைப் பெருக்கத் தூண்டுகிறது. இப்பொழுதிலிருந்தே முதலாளிகளை ஏழைகளுக்கு உதவச் சொல்கிறது.

சுதந்திரக் கட்சி முதலாளிகள் கட்சிதான் என்று காங்கிரஸ்காரர் சொல்வதை யாரும் நம்பவேண்டாம். ராஜாஜி இன்றும் ஏழை பங்காளர்தான். முதலாளிகளை ஏழைகளின் கட்சியில் சேர்த்து, ஏழைகள் நிலைக்கு அவர்களை இறக்காமல், ஏழைகளைப் பணக்காரர்கள் நிலைமைக்கு உயர்த்தவேண்டும் என்கிறார்.

* * *

இன்னும் சில சந்தேகங்களை வேண்டுமென்றே சிலர் கிளப்புகிறார்கள். "ராஜாஜி முதன் மந்திரியாக இருந்த போதுதானே தஞ்சைப் பண்ணையாள் சட்டம் கொண்டு வந்தார். அவர் காண்பித்த வழியைப் பின்பற்றித்தானே இந்த நிலச் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்படுகின்றன. அவற்றை இப்பொழுது ராஜாஜி எதிர்ப்பானேன்?" என்று ஒரு சிலரால் கேட்கப்படுகிறது.

---

ராஜாஜி பதவி ஏற்றபோது தஞ்சையில் உழவர்களுக்கும் நிலச் சுவான்தார்களுக்கும் இடையில் கம்யூனிஸ்ட் கொள்கை காரணமாகப் பகை முற்றி யிருந்தது. அதனால் தென்னாட்டின் நெற் களஞ்சியமாக விளங்கிய தஞ்சை ஜில்லாவில் நெற் சாகுபடி பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. நாட்டில் பஞ்ச நிலைமை. இந்த நிலையில், நிலம் படைத்தவர்களுக்கும் நிலத்தில் தங்கி வேலை செய்பவர்களுக்குமிடையில் சுமுகமான உறவு ஏற்படுத்தி, உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காகத்தான் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தார் ராஜாஜி. விளைவில் நியாயமான பங்கைக் கொடுக்கும்படி சொன்னார். இதற்கும் நிலத்தையே கபளீகரம் செய்யும்படியான சட்டம் இப்பொழுது கொண்டுவரப் பார்ப்பதற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. எதற்கும் ஒரு வரம்பு உண்டு. நிலச் சொந்தக்காரனையே அழித்துவிடக் கூடிய திட்டம் நியாயம் அல்ல.

அதுமட்டுமல்ல ; இப்போது கொண்டு வரப்படும் திட்டத்தினால், உணவு உற்பத்தி குறையும். உணவு உற்பத்தியைக் கருதியே ராஜாஜி நியாய வாரச் சட்டம் கொண்டு வந்தார். மீண்டும், உணவு உற்பத்தி (குறையும் என்று) கருதியே இந்த நிலச் சீர்திருத்தத்தை ராஜாஜி எதிர்க்கிறார். அதற்காகத்தான் புதுக்கட்சி.

* * *

இன்னொரு பொருளற்ற வாதம். ரிடையரானவர்கள் சேர்ந்து அமைத்த கட்சி சுதந்திரக் கட்சி. அது மற்றவர்களுக்கு உதவாது என்று சொல்கிறார்கள்.

இதைப் போன்ற பேதமைச் சொல் வேறு கிடையாது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு வயது வரம்பு உண்டு. அவர்கள் 55 வயதானவுடன் ஓய்வு பெறுகிறார்கள். காங்கிரஸ் கட்சியில் சௌக்கியமாக இருப்பவர்களுக்கு மட்டும் வயது வரம்பில்லை!

அனுபவம் பெற்ற ரிடையரானவர்கள், புதுக் கட்சியில் இருப்பதை வரவேற்க வேண்டும். காங்கிரஸில் பதவியை நாடி வந்து ஏமாற்றமடைந்தவர்கள், கோபமடைந்து இந்தப் புதுக் கட்சியை ஆரம்பிக்கவில்லை. காங்கிரஸ் திட்டங்கள் தவறானவை என்று தங்கள் நீண்ட அனுபவத்தின் காரணமாக உணர்ந்து புதுக் கட்சிக்கு ஆதரவு அளிக்கிறார்கள். கூட்டுறவுச் சங்கங்கள் எப்படி நடைபெறுகின்றன என்பதை அனுபவ வாயிலாக அறிந்தவர்கள் விவசாயக் கூட்டுறவு வேண்டாம் என்று சொல்லிப் புதுக்கட்சி ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

ரிடையரானவர்களாக இருப்பதால் புது உத்தியோக ஆசை ஏதுமிருக்காதல்லவா? தேச நலனையே மனத்தில்கொண்டு அவர்கள் கட்சி அமைத்திருப்பதை வரவேற்க வேண்டும். ரிடையரானவர்கள் சேர்ந்திருப்பதாலேயே இந்தக் கட்சிக்கு மதிப்பு அதிகம்!

உண்மையில் தங்கள் கருத்துக்களை வெளியிடத் துடிக்கும் பல இளைஞர்கள், பொது விவகாரங்களில் பங்கெடுத்துக் கொள்ளத் துடிக்கும் அனேக இளைஞர்கள், காங்கிரஸில் இடம் தரப்படாத பல யோக்கியர்கள் இந்தக் கட்சியில் சேர இருக்கிறார்கள். உண்மையில் காங்கிரஸ் எல்லா விதத்திலும் ரிடையரானவர்கள் கட்சியாக இருக்க, சுதந்திரக் கட்சியில் தான் சிந்தனையிலும் செயலிலும் முறுக்கேறியவர்கள் சேர இருக்கிறார்கள்.

* * *

ராஜாஜி ஏமாற்றமடைந்தவர் ; அதனால் புதுக் கட்சி ஆரம்பித்திருக்கிறார் என்று யாரோ சொன்னார். ஏமாற்றமடைந்தவர் என்று எந்தப் பொருளில் அவர் சொன்னார் என்று தெரியவில்லை. காங்கிரஸின் தற்கால நிலைமையைக் கண்டு ராஜாஜி ஏமாற்றமடைந்திருப்பது என்னவோ உண்மை.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைமைப் பதவியிலிருந்து கவர்னர் ஜெனரல் பதவி வரையிலும் எல்லாப் பதவிகளிலும் அவர் இருந்து விட்டார். கடைசியாக இரண்டாம் முறையும் சென்னை முதன் மந்திரி பதவியை ஒப்புக் கொண்டது காங்கிரஸ்காரர்கள் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதன் மேலேதான். ஆனால் எந்தப் பதவியிலிருந்தாலும், பதவிதான் சிறப்புற்றது. அவர் நாட்டு நலனில் மட்டும் தான் அக்கறை கொண்டு செயல் புரிந்து வந்தாரே ஒழிய, பதவியின் நினைப்பேயின்றி வாழ்ந்து வந்திருக்கிறார். இப்பொழுதும் அதே நாட்டு நலனை உத்தேசித்துத்தான், நாடு முழுவதும் தொழிலிலும் பண்ணையிலும் சிரத்தையின்றி நாளை எது வருமோ என்று பயந்து மக்கள் வாழ்வதைக் கண்டுதான் அந்த நோய் நிலைக்கு மருந்தாகச் சுதந்திரக் கட்சியை ஆரம்பித்திருக்கிறார். தேசமெங்கும் புது விழிப்பு ஏற்பட்டு அமோகமாக வரவேற்கிறார்கள். அன்று பொதுக் கூட்டத்தில் ராஜாஜி சொன்னார் : "ஆம், நான் ஏமாற்றமடைந்தவன்தான். இன்றுள்ள காங்கிரஸைக் கண்டு நான் ரொம்பவும் ஏமாற்றம் அடைந்திருக்கிறேன். ஒரு காலத்தில் கதர் அணிந்த காங்கிரஸ்காரன் என்றால் யோக்கியன், நல்லவன், பண்புள்ளவன், தியாக சிந்தையுள்ளவன் என்று மக்கள் கருதினார்கள். இந்தக் குணங்களுக்கு நேர் மாறான குணங்களையே இன்று கதர் அணிந்த காங்கிரஸ்காரர்களுக்கு மக்கள் சூட்டுகிறார்கள். இந்த இழி நிலைக்குக் காங்கிரஸ் வந்து விட்டதைப் பற்றி நான் ரொம்பவும் ஏமாற்றம் அடைந்துதான் இருக்கிறேன்!" என்றார்.

இது எவ்வளவு உண்மை!

# போனசு அறிவிப்பு

'லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன்' 31 டிசம்பர் 1957 அன்றுவரை உள்ள உடைமைகளையும், பொறுப்புகளையும் சேர்த்துக் கணக்கிட்ட முதல் மதிப்பீட்டின் முடிவுகளை அறிவிக்க அகமகிழ்வு கொள்ளுகின்றது. கார்ப்பொரேஷன் வழங்கிய பாலிசிகளோடு, அதற்கு உரித்தாக்கப்பட்ட முன்னாள் இன்ஷ்யூரன்கக் கம்பெனிக்காரர்கள் வழங்கியனவும் இந்த மதிப்பீட்டில் அடங்கும். உபரி ஊதியங்களோடு (போனசுகளோடு) சேர்ந்த தொகையான 1472,81,31,684 ரூபாய்களுக்கு, காப்புறுதி அளிக்கும் 56,83,414 பாலிசிகளும், ஆண்டு ஒன்றுக்கு 7280,120 ரூபாய்களுக்கான 11,539 ஆண்டு ஈவுகளும் (Annuities) இவற்றின்கீழ் வருகின்றன. மதிப்பீடு, 33·04 கோடி ரூபாய்களை மொத்த இலாபமாகக் காட்டுகின்றது.

'லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன்' சட்டம், தேவைப்பட்டவாறு வேறுவேறு விதமான உபரி ஊதியங்களைப் பற்றி (போனசு) உறுதியாக முடிவு செய்யப் பாலிசிகளை வகைப்படுத்த, கார்ப்பொரேஷனுக்கு உரிமை அளித்துள்ளது. விதவிதமான உபரி ஊதியம் (போனசு) வழங்க, கார்ப்பொரேஷன் ஒரு தற்காலிகத் திட்டம் தீட்டி உள்ளது. பல்வேறு இன்ஷ்யூரன்கக் கம்பெனிக்காரர்கள் வழங்கிய பாலிசிகளை அந்த அந்த இன்ஷ்யூரன்கக்காரர்களின் நிதி நிலை ஆற்றலுக்கு ஏற்றபடி, பல்வேறு உபரி ஊதிய (போனசு) விதங்களை உறுதிப்படுத்த 7 பிரிவுகளாகத் தரப்படுத்தி உள்ளது.

**போனசு வழங்குதல்** பல்வேறு உபரி ஊதியத் (போனசு) திட்டத்தின் இறுதி உருவம் முடிவு எடுக்கப்படும் வரை அது கீழே காணும் பட்டியல் விதப்படி, மதிப்பீட்டு நாளுக்குப் பின்னரும், பல்வேறு உபரி ஊதிய (போனசு) இறுதித் திட்டம் அரசினரின் ஒப்புதல் பெறுமுன்னரும் இறப்பாலோ, முதிர்வாலோ (Maturity) ஏற்படுகின்ற உரிமம் (Claims) ஆகின்ற பாலிசிகளின்பேரில் மட்டுமே வழங்கப்படும். கார்ப்பொரேஷன் பல்வேறு உபரி ஊதியங்களுக்கான (போனசு) இறுதியான, முடிவான திட்டத்தை விரைவில் வகுத்து முடிக்கவும், அரசினர் ஒப்புதல் பெறவும் முடியும் என்று நம்புகின்றது. திட்டத்திற்கு முடிவான இறுதி வடிவம் தந்தபின், அரசினர் ஒப்புதல் பெற்றவுடன், அத்திட்டத்தின்படி உபரி ஊதியம் (போனசு) பாலிசிகளுக்கு உரித்தாக்கப்படும். இறுதியாக முடிவு எடுக்கப்படும் பல்வேறு போனசு விதங்கள், இப்பொழுது இறப்பாலோ, முதிர்வாலோ (Maturity) உரிமங்களாகின்ற (Claims) பாலிசிகளின்பேரில் உறுதியளிக்கின்ற விதங்களினின்றும் அதிகமாக வேறுபடமாட்டா என்றும் எதிர்பார்க்கப்படுகின்றது.

பல்வேறு பிரிவுகளுக்கு உரியதான போனசு விதங்கள் கீழே காணும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| பிரிவு | காப்புத் தொகை (Sum Assured) ரூ. ஆயிரத்துக்கு ஆண்டு ஒன்றுக்கு போனசு விதங்கள் | |
|---|---|---|
| | முழு ஆயுள் (Whole Life) | என்டௌமென்ட் (Endowment) |
| 1. சிறப்புப் பிரிவு | ரூ. 21·00 | ரூ. 16·80 |
| 2. பிரிவு 1 | 17·50 | 14·00 |
| 3. பிரிவு 2 | 14·00 | 11·20 |
| 4. பிரிவு 3 | 10·50 | 8·40 |
| 5. பிரிவு 4 | 7·00 | 5·60 |
| 6. பிரிவு 5 | இல்லை | இல்லை |

இதோடு கூட பல்வகைப் பிரிவின் கீழ்வரும் பாலிசிகள், பழைய இன்ஷ்யூரன்கக் கம்பெனியார் இலாபங்களைப் பிரித்துக் கொடுக்க வேறுவேறு முறைகளைக் கையாண்டதற்கு ஏற்றவாறு தனியான முறையில் தீர்மானிக்கப்படும்.

ஒவ்வொரு பிரிவிலும் அடங்கியுள்ள இன்ஷ்யூரன்கக் கம்பெனிகளின் பெயர்களும், பிரிவும் கொண்ட முழு விவரங்களும் முக்கியமான செய்தித் தாள்களில் ஜூன் 20, 21, 22, 23ம் தேதிகளில் வெளியாகியிருக்கின்றன.



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

# இந்திய ஜனாதிபதியின் இலங்கை விஜயம்

ரஜனி

கொழும்பு, ஜூன் 19உ.

இவ்வாரம் இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் இலங்கைக்கு உத்தியோக தோரணையில் ராஜாங்க விருந்தாளியாக வந்திருப்பது ஒரு விசேஷ முக்கியத்துவம் வாய்ந்த சம்பவமாகும். சுமார் முப்பது வருடங்களுக்குமுன்னால் டாக்டர் பிரசாத் சென்னையில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டுக்கு வந்திருந்த போது ஒரு யாத்ரீகராக இங்கு வந்திருந்தார். அப்போது முக்கியமாக, கதிர்காமத்துக்கு மட்டுமே சென்றார். அதன் பிறகும் இந்திய ஜனாதிபதியென்ற முறையிலும் அவர் இங்கு வருவது இதுவே முதன் முறையாதலால் அவருக்கு இலங்கை மக்கள் ஆயிரமாயிரமாகத் திரண்டு வந்து உளம் கனிந்த வரவேற்பு அளித்து உபசரித்தார்கள். டாக்டர் பிரசாத்தை விமான நிலையத்தில் வரவேற்கப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஆயினும் அவர் வந்து இறங்கிய சமயம் இடைவிடாமல் மழை பெய்து கொண்டிருந்தபடியால் வரவேற்பு ஏற்பாடுகளில் சிலவற்றைக் கைவிடவேண்டியதாயிற்று. பலத்த மழை பெய்தும்கூட அதைப் பொருட்படுத்தாமல் ஏராளமான மக்கள் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு இந்திய ஜனாதிபதியை வரவேற்க விமான நிலையத்தில் காத்திருந்தார்கள். விமானம் சரியாகக்காலை 11-30 மணிக்கு ரத்மலானை விமான நிலையத்தில் வந்திறங்கி, டாக்டர் பிரசாத் அதிலிருந்து கீழே இறங்கியதும் "பாபுக்கு ஜே" என்ற கோஷம் வானைப் பிளந்தது. "தங்களதுவரவேற்பில் வருணனும் கலந்து கொள்ள வந்திருக்கிறான். நாடு குளிர்ந்திருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே பண்டாரநாயகாவும் கவர்னர் ஜெனரல் ஸர் ஆலிவர் குணதிலகாவும் ஜனாதிபதியை வரவேற்றார்கள். விமான நிலையத்திலிருந்து பன்னிரண்டு மைல் தூரம் நடந்த ராஜாங்க பவனியில் வழி நெடுகப் பல்லாயிரக்கணக்கான மக்கள் சாரிசாரியாக நின்று 'ஜே'கோஷம் செய்து பாரதத்தின் இணையில்லாத் தலைவருக்கு மரியாதை செய்தனர்.

இலங்கைக்கு வந்த பிறகு முதலாவது வேலையாக டாக்டர் பிரசாத் சர்வதேச பௌத்த கழகத்துக்கு விஜயம் செய்து இந்தியாவின் அன்பளிப்பாக ஒரு அழகான புத்தர் சிலையை வழங்கினார். அப்பொழுது பேசுகையில் பௌத்தம் பிறந்த நாட்டிலே ஒரு சமயமாக வாழாவிட்டாலும் அதன் கோட்பாடுகள் பாரதத்தில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறதென்றும் பௌத்தத்துக்குப் பாரதத்தில் நாளுக்கு நாள் அதிகச் செல்வாக்கு ஏற்பட்டு வருகிறதென்றும் கொந்தளிக்கும் இன்றைய உலகில் மனித ஜாதியின் வருங்காலத் தலைவிதி மயிரிழையில் தொங்கும்போது பௌத்தக் கோட்பாடுகளின் அவசியம் இன்று போல் வேறு என்றும் ஏற்பட்டிருந்ததில்லையென்றும் டாக்டர் பிரசாத் கூறினார். இந்தப் பிரசங்கத்தைப் பற்றி ஒரு பத்திரிகை தலையங்கம் தீட்டியபோது புத்தம் பிறந்த நாட்டிலே இது ஒரு சமயமாக நிலைத்திரா விட்டாலும் அதன் கோட்பாடுகளான பஞ்சசீலத்தை இந்திய அரசாங்கம் தனது அயல்நாட்டுக் கொள்கைக்கு அடிப்படைத் தத்துவமாகக் கொண்டிருக்கிற தென்றும் சென்ற இரண்டாயிர ஆண்டுகளாகப் பௌத்தத்தைப் போற்றி வளர்த்து வருவதாகப் பெருமையுடன் சொல்லிக் கொள்ளும் இலங்கையிலே கொலைகள் நடக்காத நாளில்லையென்றும் அரசாங்கமே சாராயத்தை வடித்து விற்பனை செய்து குடிப்பழக்கத்தை வளர்க்கிறதென்றும் எழுதியிருந்தது.

கொழும்பு ராமகிருஷ்ண மிஷனின் புதிய கட்டடத்துக்கு டாக்டர் பிரசாத் அஸ்திவாரக் கல் நாட்டியபோது எந்த ஒரு இயக்கமும் சுலோகங்களினாலும் கோஷங்களினாலும் மட்டும் வலுப்பெற்று வாழ்வதில்லை யென்றும் இயக்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் இதய சுத்தியே இயக்கத்துக்கு உண்மையான சக்தியளிப்பவையென்றும் ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்தவர்களின் தன்னலமற்ற தியாகப் பண்பு அந்த மிஷனை உலகப் பிரசித்தி பெற்றதாகச் செய்திருக்கிறதென்றும் கூறிவிட்டு, இலங்கையில் ராமகிருஷ்ண மிஷன் சிறப்பாகச் சமூக சேவை செய்து வருவதற்குத் தமது பாராட்டைத் தெரிவித்துக் கொண்டார்.

புராதன இந்தியாவில் பிரசித்தி பெற்று விளங்கிய பௌத்தப் பல்கலைக் கழகங்களான நாளந்தா, தக்ஷசீலம் ஆகியவைகளைப் போல இலங்கையிலும் சிறந்த பௌத்தப்பல்கலைக் கழகங்களாக விளங்க இரண்டு பௌத்தக் கல்வி நிலையங்களை அரசாங்கப் பல்கலைக் கழகங்களாக்கியிருக்கிறது. அவைகளி லொன்றான வித்தியாலங்கார பரிவேண பல்கலைக் கழகத்தை டாக்டர் பிரசாத் உத்தியோகபூர்வமாக அங்குரார்ப்பணம் செய்து வைத்தார். அப்பொழுது இந்து சமயத்தையும் பௌத்த சமயத்தையும் பற்றி அவர் ஒரு அற்புதமான சொற்பொழிவு நிகழ்த்தினார். ஒரே மரத்தின் பல கிளைகளிலே பல நிறமுள்ள இலைகள் தோன்றுகின்றன. ஆனால் மரம் ஒன்று. கிளைகளும் இலைகளும்தான் வெவ்வேறாக இருப்பதைப் போலத் தோன்றுகின்றன. மரத்துக்கு நீரூற்றிப் பாதுகாப்பதைப் பொருத்திருக்கிறது கிளைகளும், இலைகளும் செழித்து வளருவது. அதேபோல் சமயத் தத்துவங்களின் அடிப்படை ஒருமையை

உணர்ந்து நடப்பதைப் பொறுத்திருக்கிறது வாழ்க்கையை வளப்படுவது. இலங்கையர்கள் நல்ல பௌத்தர்களாக விளங்கினால் அவர்கள் இந்தியாவையும் இந்து சமயத்தையும் நன்கு உணர்ந்துகொள்ள உதவியாயிருக்கும் என்றார்.

அன்று மாலை இந்திய ஹைகமிஷனர் தமது இல்லத்தில் ஒரு வரவேற்பு உபசாரம் நடத்தியபோது, அதற்குப் பிரதம மந்திரி, கவர்னர் ஜெனரல், மந்திரிகள், பார்லிமெண்டின் இரு சபைகளையும் சேர்ந்த அங்கத்தினர்கள், பல்வேறு இந்தியச் சங்கங்களின் பிரதிநிதிகள், நகரப் பிரமுகர்கள் முதலான பலரும் வந்திருந்து இந்திய ஜனாதிபதிக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்கள். இங்குள்ள இந்திய — இலங்கைப் பிரமுகர்கள் அனைவரையும் ஒரே இடத்தில் அன்று காணக் கூடியதாயிருந்தது.

கண்டியில் புத்த பகவானின் புனித தந்தமிருக்கும் ஆலயத்துக்கு டாக்டர் பிரசாத் விஜயம் செய்த போது புனித தந்தம் அவரது பார்வைக்குக் காண்பிக்கப்பட்டது. சாதாரணமாக மகாராஜாக்களைத் தவிர மற்றவர்களுக்கு இந்தப் புனிதச் சின்னம் காண்பிக்கப்படுவதில்லை. அதிலும் பௌத்த சமயத்தைச் சேர்ந்த தேசாதிபதிகளுக்கு மட்டுமே புனிதச் சின்னம் வெளியில் எடுத்துக் காட்டப்படுவது வழக்கம். இலங்கையின் புராதன தலைநகரமும் அழிந்து போன நிலையிலிருப்பதுமான பொலன்னருவை, பழைய அனுராதபுரம் ஆகியவற்றையும் ஜனாதிபதி பார்வையிட்டார். ராஜன்பாபுவின் இந்த விஜயம் இந்நாட்டு மக்களின் மனத்திலிருந்து என்றுமே மறக்க முடியாத ஒரு சந்தோஷ நிகழ்ச்சியாகி விட்டது.

## பௌத்தம் வந்த திருநாள்

ஜூன் 20-ம் தேதி சனிக்கிழமை "போஸன்" பண்டிகையை இலங்கை பௌத்தர்கள் பக்தி சிரத்தையுடன் கொண்டாடினார்கள். சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அசோகச் சக்கரவர்த்தியின் மைந்தரான மஹிந்தர் என்பவரால் பௌத்த சமயம் இலங்கைக்கு முதன் முதலாகக் கொண்டு வரப்பட்டதைக் குறிப்பதே போஸன் என்ற பண்டிகை. கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் இலங்கையில் தேவனம்பியதீசன் என்ற ஒரு சிங்கள அரசன் ஆண்டு வந்தான். அப்பொழுது அசோகன் உலகெங்கும் பௌத்த சமயத்தைப் பிரசாரம் செய்யச் சந்நியாசிகளை அனுப்பியதைப் போல் இலங்கையில் பௌத்த சமயத்தைப் பிரசாரம் செய்யத் தமது சொந்த மைந்தரையே அனுப்பி வைத்தார். அவர் மூலமாகத் தேவனம்பியதீசன் என்ற மன்னன் ஒரு பௌத்தனாகிப் பௌத்தத்தை ராஜாங்கமாகப் பிரகடனம் செய்தான். அன்று முதல் பௌத்தம் இலங்கையில் நிலைபெற்று வளர்ந்து வருகிறது. இந்த வைபவத்தை நினைவுகூரும் வகையில் போஸன் பண்டிகையைப் பிரதிவருடமும் சிங்கள பௌத்தர்கள் கொண்டாடி வருகிறார்கள். ஆகாய மார்க்கமாக மஹிந்தர் வந்திறங்கியதாகக் கருதப்படும் மலைச் சிகரத்துக்கு மஹிந்தலை என்ற பெயர் வழங்கி வருகிறது. அங்கு மஹிந்தருக்கு ஒரு ஆலயமும் பல ஆயிரம் ஆண்டுகளாக இருந்து வருகிறது. போஸன் பண்டிகையன்று பௌத்தர்கள் தூய வெண்ணிற ஆடையணிந்து ஆயிரம் பதினாயிரமாக மஹிந்தலைக்குச் சென்று வணங்கி விட்டு வருவார்கள்.

ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத்துக்கு இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ கண்டேலியா ஒரு உபசார விருந்தளித்த பொழுது டாக்டர் பிரசாத் பல இலங்கைப் பிரமுகர்களுடனும் அளவளாவினார். கவர்னர் ஜெனரல் ஸர் ஆலிவர் குணதிலகா, வீரகேசரி மானேஜிங் டைரக்டர் திரு ஆர். ஏ. நடேசன் ஆகியவர்களுடன் டாக்டர் பிரசாத் வீற்றிருக்கிறார்.



# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 88

சூதாட்டத்தைப் பற்றிச் சொல்லுகிறார் முனிவர்.

வேண்டற்க வென்றிடினும்
  சூதினை வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி
  யற்று.

வென்று விட்டால் நல்லதாயிற்றே என்று எண்ண வேண்டாம். சூதாட்டத்தில் வென்றது மீன் பிடிப்பவன் எறிந்த தூண்டிலின் இரும்புக் கொக்கியை மீன் விழுங்கியதுபோலவே யாகும். சூதில் வென்றது ஒருவனை மேன்மேலும் சூதாட்டத்தில் சிக்க வைத்து அழிக்கும்.

சூதினை வேண்டற்க. வென்றிடினும் வென்ற பொருள் மனிதனை அழிக்கும் கருவியே ஆகும். பொன் - இரும்பு. பொன் என்பது உலோகங்களுக்குப் பொதுப் பெயர்.

* *

சூதாட்டத்தில் இழந்தாலுங்கூட அதை மனிதன் பற்றிக்கொண்டு அழிவு தேடுகிறான். இது எதைப் போல என்றால், நோயாளி உயிரை விரும்பிப் பற்றிக் கொண்டு நோயை அனுபவிப்பது போல் என்கிறார். எவ்வளவு துன்பமாயினும் உயிர் நீங்கினால் சாவில் துன்பம் தீரும் என்பது தெரிந்தாலும், உயிரை விட ஒப்ப மாட்டான் நோயாளி. அதைப் போலவே சூதாட்டத்தில் பொருள் இழந்தவனும் அதை விடமாட்டான். மேன்மேலும் துன்பத்தை வரவழைத்துக் கொள்கிறான்.

இழத்தொறூஉம் காதலிக்கும்
  சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று
  உயிர்.

தோற்கத் தோற்கச் சூதிலே ஆசைப்படுவது போல் மேன்மேலும் துன்பம் அனுபவித்தாலும் மக்கள் உயிரைக் காதலிப்பார்கள்.

காதற்று-காதலை உடைத்து

சூது சூதைக் காதலிக்கும், உயிர் உயிரைக் காதலிக்கும் என்று சூதையும் உயிரையும் முறையே சூது ஆடுகிறவனையும் உயிர் வைத்துக் கொண்டு அலையும் மகனையும் குறிக்கும் ஆகுபெயர்களாக வைத்துச் சொல்கிறார்.

உயிரில் பற்று வைப்பதைச் சூதாட்டத்தில் பற்று விடாமைக்கு உபமானமாகச் சொல்லாமல், அதைத் தலைகீழாக மாற்றிச் சூதாட்டப் பற்றை உயிரில் வைக்கும் பற்றுக்கு உபமானமாகச் சொல்லுகிறார். இது பெரிய கவிஞர்கள் கையாளும் ஒரு தனிமுறை. எல்லாராலும் இது முடியாது.

# வம்புச் சாவடி

தொத்தி

சென்னையில் பள்ளிக்கூட சீசன் ஆரம்பமாகி விட்டது.

வழக்கம்போல் இந்த வருடமும் பள்ளிக்கூடங்களில் நெருக்கடி தாளவில்லை. தங்கள் குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஒவ்வொரு பள்ளிக்கூடமாக இடத்துக்கு அலையும் பெற்றோர்களைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது. பள்ளி வாசல்களில் நின்று ஏமாற்றமடைந்த பெற்றோர்கள், காங்கிரஸ் சர்க்காருக்கு அளிக்கும் அர்ச்சனைகளை அவசியம் கல்வி மந்திரி மாறுவேடத்தில் வந்தாவது கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

தெரிந்துகொண்டால், சென்ற 12-வருட காங்கிரஸ் ஆட்சியில் கல்விப் பெருக்கின் லட்சணம் எந்த மட்டில் முன்னேறியிருக்கிறதென்பதைப் பெற்றோர்களின் அர்ச்சனைகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இடம் கிடைக்காமல் தமது மகளை வீட்டுக்கு அழைத்துச் சென்ற ஒரு நண்பரை வழியில் சந்தித்தேன். "ஏன் சார் இடம் கிடைக்கவில்லையா?" என்று கேட்டு விட்டேன்

அவருக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே! "அடுத்த தேர்தல் வரும்போது கட்டாயம் மண்ணைப் போடுகிறேன், பாரும்! கல்விக்காக மூன்று கோடி ஜனத்தொகையுள்ள ராஜ்யத்திலே இருபதுகோடி வரை பணம் செலவு செய்வதாகக் கணக்குக் காட்டுகிறார்கள். இவ்வளவு பணம் செலவாகியும், வாத்தியார்கள் அரைப் பட்டினியும், முழுப் பட்டினியும் கிடக்கிறார்கள். பள்ளிகளும் பெருகவில்லை. இருக்கும் பள்ளிகளை விஸ்தரிக்க நிதி இல்லை என்கிறார்கள். இந்த வருடம் எஸ். எஸ். எல். ஸி. படிப்பின் யோக்கியதையைப் பாரும்! ராஜ்யத்தில் 100-க்கு 45 வீதம் மாணவர்கள் தான் தேர்வு பெற்றிருக்கிறார்கள்! என்ன ஐயா இவர்கள் நிர்வாகம் நடத்திக் கிழிக்கிறார்கள்...!" என்று அடுக்கத் தொடங்கினார்.

"நீங்கள்தானே தேர்ந்தெடுத்துப் பதவியில் அமர்த்தினீர்கள்? இப்போது வருந்திப் பயனில்லை. வினை விதைத்தால் வினையை அனுபவித்துத்தான் தீர வேண்டும்?" என்றேன்.

"இன்னும் எத்தனை வருடங்களுக்கு இந்தக் கல்விக் கஷ்டங்களை நாங்கள் அனுபவிப்பது?"

"அநேகமாக இரண்டரை வருடங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கலாம். அதன் பிறகு இந்த நிலைமை நீடிப்பதும், நீடிக்காமலிருப்பதும் மக்களின் தலைவிதியைப் பொறுத்திருக்கிறது!" என்றேன்

"அதெல்லாம் சரி, இந்தக் குழந்தைக்கு எப்படியாவது ஒரு இடம் வாங்கித்தர உம்மால் முடியுமா? அதுவும் பெரிய வகுப்புகளுக்குக் கூட அல்ல. முதல் படிவத்துக்குத்தான். தாம்பரத்திலிருந்து இந்தப் பேட்டைக்கு ஜாகையை மாற்றி விட்டதால் நான் இங்கேயே ஏதாவது ஒரு பள்ளியில் சேர்த்தாக வேண்டும். குழந்தையை நான் எப்படித் தாம்பரத்துக்குத் தனியாக அனுப்புவேன்?" என்று வருந்தினார் நண்பர் நாயுடு

நண்பர் நாயுடு ஒருவர் தான் இந்தப் பாடுபடுவதாக நினைக்க வேண்டாம். ஆயிரக்கணக்கான பெற்றோர்கள் இதே மாதிரிதான் இடம் தேடி ஒவ்வொரு பள்ளிக்கூடமாகச் சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறார்கள்.

மந்திரிகள் எங்கெல்லாமோ சுற்றுப் பிரயாணம் செய்கிறார்களே தவிர, இந்தப் பள்ளிக்கூடங்களின் பக்கம் இந்தச் சீசனில், எட்டிப் பார்ப்பதே கிடையாது!

கேரளத்தில் ஆரம்பமாகியுள்ள 'பள்ளிக்கூட சீசனிலோ இந்தமாதிரி யெல்லாம், பிள்ளைகளுக்கு இடமில்லை என்ற பேச்சே கிடையாது! பள்ளிக்கூடங்களை மூடுவதா திறப்பதா என்ற விஷயம்தான் அங்கே அமர்க்களப்படுகிறது.

பள்ளியில் இடமில்லை என்பது, கல்வி தேவதைக்கு இந்த ராஜ்யத்தில் இடமில்லை என்று கூறுவதைப் போலத்தான் இருக்கிறது!

---

**பிரார்த்தனைக் கூட்டம்**

கிண்டி ராஜபவனம்

## காந்தி மண்டபத்தில்

26 - 6 - 59 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு

திரு டி. கே. மதுரை அவர்கள் குழுவினர் நாதஸ்வர இன்னிசை

தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள், சாரதா வித்தியாலய போதனாமுறைப் பயிற்சிப் பள்ளி மாணவிகள் நடத்தும் கீதை பாராயணம், ராமநாம பஜனை

திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாஸ்வாமி பாகவதர் அவர்களின் 'குசேல உபாக்கியானம்' ஹரிகதை.

# கல்கி

# மாவட்டச் சிறுகதைப் போட்டி

முதற் பரிசு ரூ. 200.      இரண்டாவது பரிசு ரூ. 100

★

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ்நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின்மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும், எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வதாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

மூன்றாவது போட்டி

## நீலகிரி மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் நீலகிரி மாவட்டத்தின் சூழ்நிலை எல்லா வகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். நீலகிரி மலைப் பிரதேசத்தைச் சேர்ந்த ஊர்கள், பழக்க வழக்கம், தொழில், வாழ்வு போன்றவற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப் போட்டியில் இடம் பெறும்.

2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.

3 ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகள் அனுப்பலாம்.

4. பரிசுக்கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் 'கல்கி' ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது

5. பரிசுபெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துக்'கல்கி'யில் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.

6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்கவேண்டும்.

7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8 நீலகிரி மாவட்டப் போட்டிக்கான கதைகள் ஜூலை மாதம் 31-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும்

9 போட்டி முடிவு ஆகஸ்டு மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.

10. கதைகளின் உறைகளிலும், கதைகளின் தலைப்புக்களிலும் "கல்கி நீலகிரி மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு:— நீலகிரி மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

ஆசிரியர், கல்கி

# வட்டமேஜை

## திறமைக்கு இடமில்லை!

வெகு காலமாக நடுத்தர மக்கள் ஆவலுடன் ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த எண்ணம் 'சுதந்திரக் கட்சி' ஆரம்பித்ததிலிருந்து பூர்த்தியாகிவிட்டது. சுதந்திரக் கட்சியை ஆரம்பித்து வைத்தவர், வேதவித்தும், தெய்வ பக்தி நிரம்பியவரும், முருகனின் வேல் போல் கூரிய புத்தியை உடையவரும், ஞான குணசீலருமான ஸ்ரீ ராஜாஜியவர்கள். அதனால் இந்தக் கட்சி நியாயத்துக்கும் தனி மனிதனின் உரிமைக்கும் பாடுபட, வளர்பிறைச் சந்திரன் போல் வளர்ந்து எங்கும் ஒளிபரப்பும்.

நான் ஆண்டவனிடம் ஸ்ரீ ராஜாஜிக்கு நீண்ட ஆயுளையும், சக்தியையும் கொடுக்குமாறு பிரார்த்தித்து வருகிறேன்.

தற்சமயம் நான் வேலையில்லாதவன். இதுதான் என் போன்ற தொழில் நுணுக்கமறிந்த மக்கள் இந்தச் சர்க்காரில் அடைகின்ற சுகம். நான் இதைச் சுயநலத்தோடு எழுதவில்லை. என்னைப் போல், குறிப்பிட்ட தொழிலில் தேர்ச்சி பெற்றவர்கள் இந்தியாவில் வெகு சிலர் தான். நியாயமாக என்மாதிரி என்ஜினியர்களுக்கு வேலைக்குப் பஞ்சம் இருக்கக் கூடாது. ஆயினும், நமது கண்மூடி சர்க்காரின் விவேகமற்ற ஊழல் மலிந்த நடவடிக்கைகளினால், இறக்குமதிக் கண்ட்ரோல்களினால் என்னைப் போல் நல்ல நிலையில் இருந்தவர்களுக்கு வேலையில்லாமல் போய்விட்டது. இது எங்கள் கம்பெனிக்காரர்களின் குற்றமில்லை. அவர்கள் என்ன செய்வார்கள்? விற்கப் பொருளும் இல்லை; இடைஞ்சல்களும் பல.

இருபது வருஷ அனுபவத்தினால் தொழில் ஏதாவது செய்து பிழைக்கலாம் என்றால், இந்தக் காங்கிரஸ் சர்க்காரில் அது முடியாது. அப்படித் தொழில் ஆரம்பித்து என் கையில் கடைசியாக இருந்த ரூ. 10,000 மும் நஷ்டமாகி விட்டது. ஒரு வேலையும் கிடைக்கவில்லை. இதை எதற்காகத் தங்களுக்கு எழுதினேன் என்றால், என்னைப்போல் எத்தனை பேர்கள் இப்படிக் கஷ்டப்படுகிறார்கள் என்பது தங்களுக்குத் தெரிவதற்காகவேதான்.

"திறமை மிக்க தொழிலாளிகளும், இன்ஜினியர்களும் நம் நாட்டில் மிகக் குறைவு" என்று பாரதப் பிரதமர் நேருஜி சொல்லி வருகிறார். ஆனால் தொழிலில் தேர்ச்சி பெற்றவனுக்கு வேலையில்லை. பணமோ கோடிக்கணக்காகச் செலவழிக்கப்படுகிறது. மூகம்மது துக்ளக் ராஜ்யம் கூடத் தேவலாம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

திருச்சி
10—6—59

டி. எஸ். கே. மூர்த்தி

## 'சுதந்திரக் கட்சி'

ஜூன் 21-ந் தேதி 'கல்கி' இதழில் வெளியாகியிருக்கும் தங்கள் தலையங்கம், பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதொன்றாகும். ராஜாஜி அவர்கள் ஆசியுடன் பிறந்திருக்கும் 'சுதந்திரக் கட்சி' என்ற குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து நாட்டைச் சுபிட்சப் பாதையில் கொண்டு சேர்க்கும் என்பதை, நாட்டு முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட எல்லோரும் ஒப்புக் கொள்வர். சுதந்திரக் கட்சியின் தோற்றம், தற்போது மிக அவசியமானது என்பதைத் தக்க சான்றுகளுடன் விளக்கியிருக்கிறீர்கள். சுதந்திரம் வந்த பின்னர், நாட்டில் பல ஊழல்கள் மலிந்துவிட்டன. பதவிப் பித்தர்கள் எதற்கெடுத்தாலும் விமான மூலம் பறந்து செல்கின்றனர். ஏழையின் வரிப்பணம்தானே விரயம் ஆகின்றது. அஹிம்சை, நற்பண்பு, தேசத் தொண்டு முதலியவற்றைக் கடைப்பிடித்து வந்த காந்தீயக் காங்கிரஸ், இப்பொழுது பதவிப் பித்து தலைக்கேறி, தகாத வழிகளில் ஈடுபடுகிறது. கேரளம் இதற்கு ஓர் தக்க சான்று.

கூட்டுப் பண்ணை நம் நாட்டுக்கு உதவவே உதவாது. காங்கிரஸ் சீர்திருத்தங்கள் மக்களுக்குத் தீமையையே விளைவிக்கும். சுதந்திரக்கட்சி, ஓர் நல்ல எதிர்க்கட்சியாக உருவாகி, நாட்டுக்கு நன்மை பயக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கோயம்புத்தூர்
18—6—59

நா. கி. கணபதி

## குறைந்தபட்சத் தேவைகள்

இன்று எலிமெண்டரி ஹையர் கிரேடு ஆசிரியரின் சம்பளத் திட்டம் ரூ. 35-1-50; இதுதான் அரசாங்கப் பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் ஊதியம்; இதுவே அவ்வித ஆசிரியரின் உயர்ந்த சம்பளத் திட்டம். ஆனால் சர்க்கார் மானியம் பெறும் அவ்வகை ஆரம்ப ஆசிரியர்களுக்கு 30-½-33 திட்டத்தில் 'கிராண்டு' வழங்கப்படுகிறது. உயர்ந்த திட்டப்படி கிடைப்பதானாலும் பஞ்சப்படி உட்பட ரூபாய் அறுபத்தாறுக்கு மேல் இல்லை. இந்தச் சொற்ப வருவாயைக் கொண்டு சமூகத்தில் மற்றவர்க

னோடு கண்ணியமாக வாழவும், மன நிம்மதியுடன் சிறுர்களைச் சீர்ப்படுத்தும் தொண்டில் முழு கவனத்தோடு ஈடுபடவும் எவ்வாறு இயலும்?

ஆரம்ப ஆசிரியரின் அடிப்படைச் சம்பளம் மாதம் ரூபாய் நூறுக்குக் குறையவே கூடாது. இதற்குத் தக்கபடி மற்ற நிலைகளில் உள்ள மற்ற ஆசிரியர்களின் சம்பளத் திட்டங்களும், யோக்கியதாம்சத்தைப் பொறுத்து, திருத்தியமைக்கப்பட வேண்டும். இவ்விஷயத்தில் எந்த நிர்வாகத்தின் கீழ் சேவை புரியினும் ஒருவர்க்கொருவர் பெறும் ஊதிய அளவில் வித்தியாசம் பாராட்டப்படக் கூடாது.

மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு வழங்கப்படும் விகிதத்தில் எல்லா ஆசிரியர்களுக்கும் பஞ்சப்படி, வீட்டு வாடகைப் படி, மருத்துவ வசதி முதலிய யாவும் அளிக்கப்பட வேண்டும்.

எய்டெட் பள்ளிகளில் நோயுற்ற ஆசிரியர் லீவு பெற வேண்டின் அவருக்கு அரைச் சம்பளத்திலேயே லீவு கொடுக்கப்படுகிறது. எக் காலத்தில் உதவி மிகத் தேவையோ அப்பொழுது வரும் வருவாயும் குறைக்கப்படுவது அநீதியிலும் அநீதியாகும். நோயுற்ற காலத்தில் பெறும் லீவுக்கு முழுச் சம்பளம் வீதம் கொடுக்கப்படவேண்டும். இவ்வித லீவு ஒருவருடைய உத்தியோக காலத்தில் குமார் ஒரு வருஷம் வரை, ஆண்டொன்றுக்கு 15 நாட்கள் வீதம் சேர்த்து வைக்கவும் அநுமதிக்கப்பட வேண்டும். தவிரவும், முழுச் சம்பளத்துடன் ஆண்டொன்றுக்குப் பதினைந்து நாட்கள் வீதம், தற்போது ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுக்கு வழங்கப்படுவது போல, 'உரிமை லீவு' கொடுக்கப்பட வேண்டும்.

தற்போது அமுலில் உள்ள பென்ஷன் திட்டம் மிக மிகக் குறைவு; அக் குறைவான பென்ஷனுக்கும் முப்பதாண்டுகள் வேலை செய்ய வேண்டும்; அதிலும் எல்லோருக்கும் மாதச் சம்பளத்தில் கால் பங்கு பென்ஷன் இல்லை; பென்ஷன் மாதச் சம்பளத்தில் அரைப் பங்குக்கு உயர்த்தப்பட வேண்டும்; இருபத்தைந்தாண்டுகள் தொண்டு போதுமானதென்று வைத்து ரூ/50 என்ற திட்டத்தில் பென்ஷன் வழங்கப்பட வேண்டும். இதனோடு தற்போதுள்ள பிராவிடெண்டு பண்டு திட்டச் சலுகையும் ஆசிரியர்களுக்கு அளிக்கப்பட வேண்டும்.

ஜீவாதாரமான தேசியப் பணியில் ஈடுபட்டுத்தொண்டாற்றும் ஆசிரியர்களுக்கு, கவலையற்ற வாழ்வுக்கு இன்றியமையாத குறைந்த பட்சத் தேவைகளாகிய இவற்றைச் செய்துதர வேண்டுவது தேசிய அரசாங்கத்தின் முதற் கடமையாகும்.

சென்னை
28-4-59

ப. ராமமூர்த்தி

# ஆகாச வெடி!

"போதிய ஆட்கள் கிடைக்காதபடியால், திருவாரூர்த் தேரைப் பெரிய டிராக்டர்களைக் கொண்டு இழுக்கலாமா வென்று யோசித்து வருகிறோம்."

—கனம் பக்தவத்ஸலம்

போதிய ஆட்கள் கிடைக்காத சமயத்தில் டிராக்டர்களையே இழுக்கும்படி நேர்ந்தால் என்ன செய்வார்களோ?

★

"கோவை நகரசபை உயர்நிலைப் பள்ளி 125 மாணவரை எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு அனுப்பியதில் 15 பேர்தான் பாஸ் செய்திருக்கிறார்கள்."

— செய்தி

"நகரசபைப் பள்ளிகளில் பத்துப் பதினைந்து பேர் கூடத் தேர்வு பெறுகிறார்களா?" என்று ஒருவர் வியக்கிறார்.

★

"பஸ் ஸ்டாண்டுகளுக்கு, மந்திரி ஸ்ரீ வெங்கடராமன் திடீர் விஜயம் செய்து பிரயாணிகளின் கஷ்டங்களை விசாரித்தார்."

—சென்னைச் செய்தி

பஸ் ஸ்டாண்டுகளில் மந்திரியைவிட பஸ்ஸைக் கண்டால்தான் ஆச்சரியப்பட வேண்டும் என்கிறார் ஒருவர்.

"மரியாதையான தன்மையைப் பாராட்டிச் சென்னை நகர போலீஸ்காரர் ஒருவருக்குப் போலீஸ் அதிகாரி பத்து ரூபாய் சன்மானம் அளித்தார்."

— செய்தி

மரியாதைக்கு அளித்த பணம் தானே என்று அதைத் திருப்பி வாங்கிக் கொண்டிருக்க மாட்டார்கள் என்று கருதுகிறோம்.

★

"ஆரணியாறு தண்ணீரைப் பகிர்ந்து கொள்வதைப் பற்றி, ஆந்திரா சென்னைப் பிரதிநிதிகள் பல மணி நேரம் பேசியும் முடிவு ஏற்படவில்லை."—சென்னைச் செய்தி

தொண்டைத் தண்ணீரைச் செலவிட்டாவது பல மணி நேரத்துக்குப் பின் ஒரு முடிவுக்கு வந்தார்களோ!

★

"உதவாக்கரை என்று ஒதுக்கப்பட்ட பொருள்களைக் கொண்டு கான்பூர் அரசாங்க விமானத் தொழிற்சாலை ஒரு விமானத்தைத் தயாரித்திருக்கிறது." —செய்தி

உதவாக்கரைப் பொருள்களால் செய்யப்பட்ட விமானத்தை உதவாக்கரை மந்திரிகள் சவாரிக்கு அளித்துவிட வேண்டாம்!

# படித்துப் பாருங்கள்

## Sotto Voce

சில புத்தகங்களை ஒரு தடவைக்கு மேல் படிக்க முடியாது. வேறு சில புத்தகங்களை எத்தனை தடவை படித்தாலும் அலுக்காது. புதிது புதிதான கருத்துக்கள் வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கும். அந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தது ஸ்ரீ விக்னேசுவராவின் 'ஸோட்டோ வோஸ்'. அறிவுக்கு ஒரு விருந்து.

ஹிந்து பத்திரிகையில் நீண்ட காலம் பிரதம துணை ஆசிரியராக இருந்து, ஹிந்து பத்திரிகையின் கீர்த்திக்குக் காரணபுருஷராக விளங்கிய ஸ்ரீ ரகுநாதய்யர் அவர்கள் விக்னேசுவரா என்ற புனை பெயரில் சுவதந்திரா பத்திரிகையில் வாரந்தோறும் எழுதி வந்த கட்டுரைகளின் தொகுப்பு இந்த நூல். ஸ்ரீமான் ரகுநாத அய்யர் ரொம்பவும் படித்தவர். கல்விக் கடல் என்றெல்லாம் நாம் அடிக்கடி கேள்விப்படுவதுண்டு அவை யெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மை என்பதை இந்நூல் விளக்குகிறது. சமஸ்கிருத இலக்கியத்திலிருந்தும், ஆங்கில இலக்கியத்திலிருந்தும், கிரேக்க ரோம புராதன கதைகளிலிருந்தும், இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டி விளக்கும்போது "இவ்வளவும் எப்பொழுது படித்தார்? எப்படி ஞாபகம் இருக்கிறது?" என்ற பிரமிப்புத்தான் யாருக்கும் ஏற்படும்!

நீர் நிறைந்த நிச்சலனமான ஏரியில் ஒரு சிறு கல்லைத் தூக்கிப் போட்டால், முதலில் 'களுக்' என்ற சப்தம் கேட்கும். பின்னர் மெல்லிய அழகான வட்ட வட்டமான அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக எழும் அழகிய காட்சியைப் பார்க்கிறோம். அதைப் போலவே ஒரு வாரத்தில் நிகழும் ஒரு நிகழ்ச்சி, திரு ரகுநாதய்யரின் உள்ளத்தில் பலப் பல அழகிய எண்ண அலைகளை எழுப்புகின்றது. அந்த அலைகள் அழகான சிறு கட்டுரையாக வெளிப்படுகிறது. தடாகத்தில் எழும் அலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பதில் எப்படி அலுப்புத் தட்டுவதில்லையோ, அப்படியே இந்த அறிவுத் தடாகத்திலிருந்து எழும் அலைகளைப் படிப்பதில் நமக்கும் அலுப்புத் தட்டுவதில்லை!

ஆங்கிலத்தில் பெரும் புலமை பெற்ற ஆங்கிலேயர்களே, விக்னேசுவராவின் ஆங்கில நடையைக் கண்டு வியப்பார்கள். ஆங்கில பாஷையை எப்படிப் பயின்றிருக்கிறார் என்று அதிசயிப்பார்கள். ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள மொழியாயினும், அது தாங்கி வழங்கும் விஷயம் முற்றும் பாரதப் பண்பாட்டைப் பற்றியதே. வேதகால ரிஷிகள் வழங்கிய ஞானத்தையும் நம்முடைய ஆசார விவகாரங்களையும் வலியுறுத்துவதாகத்தான் இருக்கும் விக்னேசுவராவின் கட்டுரைகள். ஆங்கில பாஷையைக் கரைகண்ட பின்னரும், பாரத மண்ணில் நன்றாகக் காலூன்றி நிற்கலாம் என்பதற்கு எடுத்துக் காட்டு இந்நூல். ஆங்கிலம் நமது பாஷைகளில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப்பட்டால், பாரதம் தன் தனிப் பண்பை இழந்துவிடும் என்று சொல்பவர்களுக்கு ஸ்ரீ விக்னேசுவராவின் இந்தக் கட்டுரைத் தொகுப்பு அவர்கள் பேதமையை எடுத்துக் காட்டும் கைவிளக்காகும்.

இந்திய சுதந்திரப் போராட்ட சரித்திரத்தில், இந்திய பத்திரிகையுலகில் திரு காஸா சுப்பாராவ் அவர்களுக்கு ஒரு நிரந்தரமான இடமுண்டு. அவர் ஒரு வீரர். உள்ளத்திலும் எழுத்திலும் அவருடைய வீரம் தொனிக்கும். அவர் "சுவதந்திரா" என்ற பெயரில் 1946ம் ஆண்டு ஒரு வாரப் பத்திரிகையைத் தொடங்கினார். அந்தப் பத்திரிகையில் ஸ்ரீ ரகுநாத அய்யர் வாரந்தோறும், "தனக்குள் சொல்லிக் கொள்வது" என்று தலைப்பிட்டு அந்த அந்த வாரச் செய்திகளில் ஒன்றிரண்டை விமர்சனம் செய்வார். அப்படி 1946ம் ஆண்டுமுதல் அக்டோபர் 1948ம் ஆண்டு வரை வாரந்தோறும் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு இது. புத்தகத்தின் பிற்பகுதியில் மேனாட்டவர்களுக்கும் இந்நாட்டவர்களுக்கும் உபயோகப்படும் வகையில் குறிப்புரைகள் உள்ளன.

பிரசுரம்: பி. ஜி. பால் அண்டு கோ., 4. பிரான்ஸிஸ் ஜோசப் தெரு, சென்னை-1 சாதாரணப் பதிப்பு விலை: ரூ. 4; உயர்ந்த பதிப்பு விலை: ரூ 5. —எஸ். வி. எஸ்.

## கோபுர தீபம்

பாரதத்தின் சுதந்திரப் போரிலே பல மாணவர்கள் பங்கெடுத்துக் கொண்டு பணி புரிந்திருக்கிறார்கள். அத்தகைய மாணவர்களிலே பாளையங்கோட்டைக் கல்லூரியில் படித்து வந்த சுந்தரம் என்னும் வாலிபனும் ஒருவன். உணர்ச்சி வெறியில் அவன் போலீஸ் இன்ஸ்பெக்டர் என்ன, மாவட்ட அதிகாரியையே தீர்த்துக் கட்ட முற்படுகிறான். இன்ஸ்பெக்டரைக் கொலை செய்யப் போன இடத்தில் அவனது கல்லூரித் தோழியும், காதலியுமான பத்மா குறுக்கிட்டுத் தடுத்து விடுகிறாள். இன்ஸ்பெக்டரின் அண்ணன் மகள் அவள், அவரது ஆதரவில் வளர்பவள். இரண்டாம் முறை மாவட்ட அதிகாரியின் முகாமிலே குண்டு வீசிக் கொல்ல முயன்ற போது, கூட்டாளிகளில் ஒருவனான சம்பிரராஜன் போலீஸாரின் கையில் சிக்கி விடுகிறான்.

எனவே, அவன் தலைமறைவாக ஓடி ஒளிந்து வாழும்படியான நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. கங்கை கொண்டான் கிராமத்துத் தேச பக்தர் ஒருவர் வீட்டில் தங்குகிறான். அப்பொழுது அம்மை போட்டு விடுகிறது. சுசிலா என்னும் இளம் விதவை—அந்தத் தேச பக்தரின் தங்கை தனது சிசுருஷையினால் அவன் மனத்தில் நிலையானதொரு இடம் பெற்றுவிடுகிறாள்.

போலீஸார் விடாமல் துரத்தவே, அம்மை போட்ட உடனேயே ஓடும்படி நேரிடுகிறது. கடைசியில் போலீஸார் கையில் சிக்கி அம்மையின் காரணமாக ஆஸ்பத்திரிக்கு அனுப்பப் படுகிறான். அங்கே நர்ஸாக வேலை பார்க்கும் கனினி—கல்லூரி வாழ்விலே அவனுக்கு அறிமுகமானவள்—அவனுக்குப் பணிபுரியும் பாக்கியம் பெறுகிறாள்.

இளம் பிராயத்திலே, அவன் குடும்பத்தை மேற்பார்வை பார்த்து வந்த இருவடியா பிள்ளையின் மகள் கோமதி அறியாப் பருவத்திலேயே அவனிடம் மனத்தைப் பறிகொடுத்து விடுகிறாள்.

இப்படியாக நான்கு பெண்களின் உள்ளத்திலே நிலையான இடம் பெற்று விட்ட பொழுதிலும், சுதந்திரத்தையே தன் குறிக்கோளாகக் கொண்டு, உடல், பொருள், ஆவி எதையும் பொருட்படுத்தாமல் ஆஸ்பத்திரியிலிருந்தும் தப்பி விடுகிறான் சுந்தரம்.

திருச்செந்தூர் கடற்கரையில் போலீஸ் அவனைப் பிடிக்க வரும்போது, அவர்கள் கையில் பிடிபடக் கூடாது என்ற நோக்கத்தோடு கடலில் குதித்து உயிரைத் தியாகம் செய்துவிடுகிறான். நான்கு பெண்களுக்கு மட்டும் அல்ல; நவீனத்தைப் படிப்பவர்களின் மனத்திலெல்லாம் ஒளி பரப்பும் 'கோபுர தீப'மாகத் திகழ்கிறான்.

படிக்கப் படிக்கத் தெவிட்டாமல் வெகு சுவாரஸ்யமாகச் செல்லும் இக்கதையைப் பழகு தமிழில், தெள்ளிய நடையில் ஸ்ரீ நா. பார்த்தசாரதி புனைந்துள்ளார். சிறந்த சிற்பியின் கைபட்டால் காட்டு ஆமணக்குக் கட்டையும் கவினுறும் சிற்பமாக உருப்பெறக்கூடும் என்னும் உண்மைக்கு எடுத்துக் காட்டாக நிற்கிறது 'கோபுர தீபம்'! இத்தனை அச்சுப்பிழைகள் ஏற்படாமல் தவிர்த்திருக்கலாம்.

ஆசிரியர்: நா. பார்த்தசாரதி; பிரசுரம்: வள்ளுவர் பண்ணை; 187, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 5-0-0.

## மூவரை வென்றான்

பல ஊர்களின் பெயரைக் கேட்கிறோம்; அதிசயப்படுகிறோம். 'இந்த ஊருக்கு இந்தப் பெயர் வரக் காரணம்?' என்ற கேள்வி நம்மை யறியாமலே எழுகிறது. சிற்சில சமயம் அந்த ஊருக்கு அந்தப் பெயர் ஏற்பட்ட காரணத்தை அறிந்து கொள்ளாத வரை தூக்கமே வருவதில்லை.

இக்கதைத் தொகுதியின் ஆசிரியரது மனத்தையும் அத்தகைய கேள்விகள்

உளுப்பவே, அவர் அநிசயித்த ஊர்களின் வரலாற்றை அறிய முயன்றிருக்கிருர். அதன் பலனுக நம் தமிழ் மக்களுக்கு ஐந்து கதைகள் கிடைத்துள்ளன. எத்தகைய வீரம் விளைந்த தீரர்கள் வாழ்ந்துள்ளனர் என்னும் விவரத்தையும் அறிகிறேம்.

வரலாற்றுச் சித்திரத்தைப் பின்னணியாகக் கொண்ட இக்கதைகளை ஆவலைத் தூண்டும் வண்ணம் அழகுபடச் சித்திரித்துக் கொண்டு போகிருர்.

வீரமல்லன் என்னும் மறவர் குலத்து வீரனுக்கு வீரமானியமாகக் கிடைத்த கிராமத்துக்குத்தான் 'மூவரை வென்ருன்' என்னும் காரணப் பெயர் ஏற்பட்டது. தெற்கே இரண்டரை மைல் தொலைவில் உள்ள நத்தம்பட்டி ஜமீன்தாருக்கும் வீரமல்லனுக்கும் கன்மாய் காரணமாகத் தகராறு ஏற்பட்டது. மூன்று நாழிகைக்குள், தன் கிராமத்தில் நுழைந்து விட்டால், தன் கிராமத்தை நத்தம்பட்டி ஜமீன்தாருக்கு ஜாரி செய்து விட்டுச் சந்நியாசம் கொள்வதாகவும், முடியாவிட்டால் நத்தம்பட்டியைத் தனக்கு ஜாரி செய்து விட்டு நத்தம்பட்டி ஜமீன்தார் சந்நியாசம் கொள்ள வேண்டும் என்றும் நிபந்தனை விதித்தான்.

தேவதானம், சாப்டூர் ஆகிய இரு ஜமீன்களின் உதவியைப் பெற்றும் கூட, வீரமல்லனின் கிராமத்திய நத்தம்பட்டி ஜமீன்தார் நுழைய முடியவில்லை. வீரமல்லனின் வீரமும் யுக்தியும் மூவரையும் புறமுதுகிட்டு மீளச் செய்தது என்னும் வரலாற்றை அழகாகச் சித்திரிக்கிறது 'மூவரை வென்ருன்' என்னும் கதை.

'வெள்ளைத்தேவன் பாறை' என்னும் கதையிலே, பாப்பையன் என்பவன் வெள்ளையத் தேவனின் முதுகில் அம்பைத் தொடுத்தான். ஆனல் அந்த வீரனின் சிலையை வடித்து, அதைத் தெய்வமாக வழிபடும் படியாயிற்று என்னும் அற்புத வரலாற்றை வெகு சுவாரஸ்யமாகச் சித்திரிக்கிருர் ஆசிரியர்.

இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கும் ஐந்து கதைகளும் மூவரை என்ன, படிப்பவர்கள் அனைவரின் மனத்தையும் வெல்பவைகளாகவே அமைந்துள்ளன.

ஆசிரியர் : கா. பார்த்தசாரதி பிரசுரம். வள்ளுவர்பண்ணை : பிராட்வே.சென்னை-1 விலை ரூ. 2-0-0

# திருவான்மியூர் தேவாலயம்

சென்னை அடையாற்றுக்குத் தென்திசையில் இரண்டு மைலுக்கு அப்பால் திருவான்மியூர் என்ற பாடல் பெற்ற தேவாலயம் இருக்கிறது. தொண்டை நாட்டைச் சார்ந்த செங்கற்பட்டு மாவட்டத்தின் கடற்கரையோரமுள்ள பாடல் பெற்ற பழம்பதிகள் மூன்று. நடுவில் திருமயிலை, வடக்கில் திருவொற்றியூர், தெற்கில் திருவான்மியூர். இராமாயணம் பாடியருளிய வால்மீகி முனிவர் சிவ தரிசனம் பெறும் பொருட்டுத் தவம் புரிய, திரிபுரசுந்தரி சமேதராய் மருந்தீசப் பெருமான் அவருக்குக் காட்சி தந்தருளிய திருப்பதி இது. அதனுல்தான் திருவான்மியூர் என்ற பெயர் பெற்றது. நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும், திருப்புகழ் அருணகிரி அடிகளாரும், பாடிப்பரவிய பழம்பதி : பாம்பன் குமர குருபர சுவாமிகள் சமாதி பெற்றுள்ள திருத்தலம். ஆண்டுதோறும் பங்குனியில் திருமயிலையில் நடைபெறும் அதே காலத்தில் இங்கு பதினெரு நாட்கள் பிரம்மோற்சவம் வெகு சிறப்பாக நடைபெறும். 10-ம் நாள், 11-ம் நாள் திருவிழாக்கள் வெகு விமரிசையாக நடைபெறும். தென்னுடு முழுவதிலுமிருந்து திரளான மக்கள் வந்து தியாகராச நடனத்தைக் கண்டு களிப்பர். அதைத் தவிர ஒவ்வொரு மாதமும் பௌர்ணமிதோறும் தியாகேசர் நடனத் திருக்கோலக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அவ்வளவு சிறப்பாகத் திகழ்ந்த இந்தத் திருக்கோயில் சீர்ணமடைந்து கொண்டே வருகிறது. சுமார் பன்னிரண்டு வருஷங்களாகத் திருவிழா நடைபெறுவது அடியோடு நின்று விட்டது. வருஷத்தில் எட்டு மாதங்கள் பௌர்ணமி நடனமே நடைபெறுவதில்லை. முன்னுள்ள பதினறுகால் மண்டபமும் பழுதடைந்து வருகிறது. பல அறக் கட்டளைகளும் மறைந்து போயின. இன்னும் சில ஆண்டுகளில் பெரும்பகுதி பழுதடைந்து பாழடைந்திடுமோ என்ற ஐயப்பாடும் ஏற்படுகிறது.

இத்தேவாலயத் திருப்பணியைச் சீர்ப்படுத்தவும், உற்சவங்களை மீண்டும் ஒழுங்காக நடைபெறச் செய்யவும் ஆன வழி வகைகளை ஆராய்ந்து ஆவன செய்ய மருந்தீசர் தேவாலயத் திருப்பணிக் கழகம் என்ற ஒரு கமிட்டி விரைவில் அமைக்க ஏற்பாடு நடைபெறுகிறது.

ஆலயம் பதினுயிரம் நாட்டி ஆண்டவனின் திருப்பணிக்கு அள்ளிக் கொடுத்துச் சிவ புண்ணியப் பேற்றைப் பெற முனைந்து நிற்கும் செல்வம் படைத்த வள்ளல் பெரு மக்களுக்குத் தமிழ்நாடு பேர் பெற்றது.

அத்தகைய சிவநேசச் செல்வர்கள் இத்தேவாலயத் திருப்பணிகள் செய்யவும் நின்றுபோன பிரம்மோற்சவம் மேலும் தொடங்கப் பெற்று, தொடர்ந்து நடைபெறச் செய்யவும் விரைந்து முன் வந்து உதவ வேண்டும்.

திருவான்மியூர்
1—5—59

கி. முத்துகண்ணப்பன் எம்.எல்.ஸி.

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 43. கோபிகா கீதம்

கண்ணன் திடீரென்று மறைந்ததும், தலைவனைப் பறி கொடுத்த பெண் யானைக் கூட்டமெனக் கோபியர் பரிதவித்தனர். கண்ணனுடைய நடையிலும், நகைப்பிலும், பார்வையிலும் இனிய மொழியிலும் லீலையிலும் இன்பச் சேஷ்டைகளிலும் மயங்கிக் கண்ணன் காண்பித்த விளையாட்டுக்களைத் தாங்களே நடிக்கலாயினர். கண்ணனோடு "தன் மயமாய்" ஒன்றென மாறிய மங்கையர் "நானே கண்ணன்" என்று பாவித்தனர். கூடிக் கலந்து அவன் புகழைப் பாடினர். மதியிழந்தவரைப் போல் கண்ணனைத் தேடிக் காட்டில் திரிந்தனர். "கண்ணன் எங்கே?" என்று மரங்களை வினவினர். "அச்வத்தமே! ஆலமரமே! எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்ட நந்த கோபன் குமரன் இவ்வழி சென்றனனா? அசோகமே! நாகமே! சம்பகமே! சிறிய மாதரைத் தணிய வைக்கும் புன்னகை முகத்தினன், பலராமனுக் இளையோன் போவதைப் பார்த்தீர்களா? கோவிந்தன் தாள்களை நாடும் துளசியே! வண்டுசூழ் துளசிமாலை பூண்ட அச்சுதன் உன்னால் பார்க்கப்பட்டானா? மாலதியே! மல்லிகையே! போகும் வழியில் கண்ணன் உங்களைத் தொட்டு ஆனந்தம் அளித்தனனா? மற்றவருக்கு உதவி புரிய முன் வந்த கதம்ப மரமே! நீப மரமே! யமுனைக் கரையில் வளர்ந்திருக்கும் மற்ற மரங்களே! மனத்தைப் பறி கொடுத்த எங்களுக்குக் கண்ணன் சென்ற வழியைக் காட்டுவீர். பூமியே! என்ன தவம் செய்தனை, கண்ணன் தாள்பட்டு ஆனந்தம் அதிகரித்துப் புல் என்ற தோற்றத்தில் உனக்கு மெய் சிலிர்த்ததா? இப்பொழுது தான் கண்ணன் உன்மீது அடி வைத்தனனா, இல்லை, முன் வாமனன் வைத்த காலை நினைத்து இன்னமும் களிப்புறுகின்றனையா? 'பெண் மான்களே! காதலியுடன் கண்ணன் இவ்வழி சென்று உம் கண்ணைக் குளிர வைத்தனனா? குங்குமம் கலந்த மல்லிகை மணம் வீசுகின்றதே! (இப்பெண் ராதை என்று வேறு புராணங்கள் கூறுகின்றன.) ஒரு கரத்தில் தாமரை ஏந்தி மறு கரத்தைத் தன் நாயகியின் தோள்மீது வைத்துக் கொண்டு உங்களை அன்புடன் கண் நோக்கினனா? தோழிகளே! இந்தக் கொடிகளையும் கேட்போம். மரமென்ற நாயகனைத் தழுவி நிற்கின்றன. கண்ணன் கைபட்ட களிப்பில் துளிர் விட்டிருக்கின்றன."



இவ்விதம் மதி இழந்து பித்துப் பிடித்தவரைப் போல் கோபிகள் கண்ணனைத் தேடி அலைந்தனர். கண்ணன் குழந்தைப் பருவத்தில் செய்த லீலைகளைத் தாமும் செய்தனர். வண்டியைப் போல் மண்டியிட்டுக் கொண்டிருந்த ஒரு கோபியை மற்றொருத்தி காலால் உதைத்தாள். இரண்டு கோபிகள் கண்ணனாகவும், பலராமனாகவும் நடித்தார்கள், மற்றவர் இடைச் சிறுவரென நடித்தார்கள். ப்ரலம்பன் முதலிய அரக்கரைக் கொன்றனர்! ஒருத்தி கண்ணனைப்போல் ஆனினத்தைக் கூப்பிட்டுக் குழலூத, மற்றவர் சுற்றி நின்று கைகொட்டி ஆமோதித்தனர். ஒரு கோபி "நான் கண்ணன். உங்களை நான் காப்பாற்றுகிறேன். மழைக்கும் புயலுக்கும் அஞ்சாதீர்" என்றுரைத்தாள். ஒரு கோபி மற்றொருத்திமீது காலை வைத்துக் கொண்டு, "கொடியோரைக் கொல்லவே நான்





வந்துளேன். ஆகவே கொடிய பாம்பே, நீ அகலுவாய்'' என்றாள். ஒருத்தி மற்றக் கோபிகளை மாடு மேய்க்கும் சிறுவர்களெனக் கருதினாள். ''கண்களை மூடிக் கொள்ளுங்கள். இதோ இந்தக் காட்டுத் தீயில் நின்று உங்களைக் காப்பாற்றுகிறேன்'' என்றாள். ஒரு கோபி உரலைப் போல் உட்கார்ந்து கொண்டாள். மற்றொருத்தி தாயாக நடித்தாள். மாலையினால் மூன்றாவது கோபி ஒருத்தி முதல் கோபியோடு அணைத்துக் கட்டினாள். கட்டப்பட்டவள் பயந்தவள் போல் பாசாங்கு செய்தாள்.

இவ்வாறு கண்ணன்போல் விளையாடியும் மரம் செடிகளிடம் கண்ணனைக் குறித்து வினவியும் கோபிகள் பிருந்தாவனத்தில் திரிந்து வருகையில், ஓரிடத்தில் கண்ணனின் அடிச்சுவடுகளைக் கண்டனர். ஆனால் அவைகளுக்கு இடையே ஒரு பெண்ணின் கால் சுவடுகளையும் பார்த்து வியப்புற்றனர். ''இது யாருடைய காலடியாக இருக்கக் கூடும்? கண்ணனோடு கை கோத்துக் குதூகலமாகச் சென்றது யாரம்மா? அவள் செய்த பெருந் தவம் நாம் செய்யவில்லையே. ஐயோ! இவ்விடத்தில் அவனுடைய காலடி காணவில்லையே! இங்குதான் கண்ணன் அவளுக்குப் புல்கூடக் குத்தக்கூடாதென்று தூக்கிச் சென்றிருக்க வேண்டும். பார்த்தீர்களா, ஆயர் மங்கையரே! இவ்விடத்தில் கண்ணனுடைய கால் அடி பூமியில் ஆழ்ந்து பதிந்திருக்கிறது. அவளைத் தூக்கிய பாரம்தான் அதற்குக் காரணம்'' என்று பலவாறு பொறாமை மேலிட்டுப் புலம்பினார்கள்.



கண்ணனுடன் தனிமையில் சென்ற கோபியோ (இவள்தான் ராதை என்பது சில உரையாசிரியர் கொள்கை) தனக்குக் கிடைத்த பாக்கியம் தாங்காது திமிரடைந்தாள். அனைவரையும் விட்டு என்னோடன்றோ கண்ணன் வந்தான் என்று எண்ணினாள். காட்டில் கொஞ்ச தூரம் சென்றதும், அவள் கண்ணனிடம், ''என்னால் நடக்கவே முடியவில்லை. சிறிது தூக்கிச் செல்வாய்'' என்றாள். சரி என்று கண்ணன் அவளைத் தன் தோளில் ஏறும்படி கூறினான். அவள் கண்ணனுடைய தோளில் ஏற எண்ணியதும் கண்ணன் மறைந்து விட்டான். ''அன்பனே, கண்ணா, எங்கே சென்றாய், உன் பணிப் பெண்ணாகிய என்னைக் கைவிடலாகுமா?'' என்று கரைந்தாள்.

இந்த நிலையில் மற்றக் கோபிகள் அவளைச் சந்தித்தனர். நடந்ததைக் கேட்டு வியந்தனர். எல்லோரும் ஒன்றுசேர்ந்து கண்ணனைத் திரும்பவும் தேடலாயினர். நிலாவும் மறைந்தது. கானகத்தில் இருள் சூழ்ந்து கொண்டது. அவனிடம் மனத்தை இழந்து, அவனையே புகழ்ந்து பேசி, அவனைப் போல் நடித்து, அவனாகவே தம்மையும் எண்ணி, தங்கள் வீட்டை மட்டுமின்றித் தம் உடலையே மறந்து விட்டனர். அனைவரும் யமுனைக் கரையில் அமர்ந்து கொண்டு கண்ணனைக் குறித்துப் பாடினார்கள்.

பாகவதத்தைப் ''பக்தி வயல்'' என்ற பேருடன் எழுதி வருகிறோம். கண்ணனிடம் எத்தனையோ ஆடவரும் பெண் மக்களும் பக்தி செலுத்தி வந்தனர். ஆனால் கோபிகளுக்குக் கண்ணனிடமிருந்த பக்திக்கு எல்லையும் இல்லை, ஈடும் இல்லை என்பது நமது பெரியோர் கருத்து. நாரத பக்தி சூத்ரத்தில் பக்தி எவ்விதம் இருக்க வேண்டும் என்ற கேள்விக்கு, ''கோபிகளுடைய பக்தியைப் போல்'' என்று பதில் கூறப்பட்டுள்ளது. தன்னிலை மறந்து அன்பே உருவெடுத்து நாயகன் என்ற பாவத்தில் கோபிகள் கண்ணனை நாடினர். இவ்விடத்தில் கோபிகள் முன் பிறவியில் முனிவராக இருந்து இராமனை அடைய முடியாதவரென்றும், சிலர் தேவமாதர் என்றும், சிலர் மறையே மனித



வடிவில் வந்ததாகவும் அறிய வேண்டும். பாகவதத்தில் கோபிகள் கண்ணனைக் குறித்துப் பாடிய "கோபிகா கீதம்" என்பது பக்திக்கும் பாகவதத்துக்கும் நடுநாயகம் போன்றது. அதன் அருமையைப் பஜனை செய்வோர் அறிவார்கள். அந்தப்பாட்டின் சில அடிகளைப் பஜனை செய்வோர் பாடும் மெட்டுக்குப் பொருந்தும்படி கீழே மொழிபெயர்த்திருக்கிறோம்.

### கோபிகா கீதம்

*ராகம் - எதுகுல காம்போதி*
*தாளம் - சாபு*

1. நீ பிறந்தஆயர்பாடி மேன்மையடைந்ததே —
கண்ணா
தானுமங்கு தங்க மலர்மாதும் வந்தனள்

2. இங்குமங்கும் தேடுகின்ற சேடிமார்களை—
கண்ணா
கைவிடாது நேரில்வந்து தோன்றவேணுமே

3. கார்முடிந்த நீரில் வாழும் பூவெழில்
தன்னை—கண்ணா
வாங்கிநிற்கும் கண்படைத்த காதல்
நாயகா

4. கூலியின்றிக் கூடவந்த பேதை
மாதரை — கண்ணா
கண்களாலே கொல்வதுந்தன் கருணை
யாகுமோ?

5. நச்சுநீர். பெரும்புயல். அரக்கர்
பாம்பெலாம் - கண்ணா
துன்புறுத்த வந்துமெம்மைக் காக்க
வில்லையா ?

6. அந்தராத்ம ரூபியான லோகநாதனை—
கண்ணா
ஆயர்மைந்தனென்று நாங்கள் நம்ப
லாகுமோ ?

7. சரணடைந்த மாந்தரைத் தற்காத்த
நின்கரம் - கண்ணா
சிரசில் வைத்து எம்மையும் நீ அருள
வேணுமே.

8. முறுவல் செய்து எங்களை மயக்க
வந்தவா — கண்ணா
தாமரை முகத்தைக் காண மையல்
கொண்டுளோம்

9. காளியன் மீதாடிநோந்த அழகு
கால்களை—கண்ணா
மார்பில்வைக்க வேண்டுமென்று
ஆசை கொண்டுளோம்

10. இன்மொழியாய்! பங்கயத்துச்
செங்கண் மன்னவா - கண்ணா
அதரமென்றஅமுதினை அளித்தருள்வாயே

11. பாபம்நீக்கும் நின் கதைகள்
பாடுவோர்களை—கண்ணா
அறம்புரிந்தும் புண்ணியரென்று புகழ
வேண்டுமே.

12. சிரித்துநோக்கி ஆசைவார்த்தை
ஆடிஎம்மையே - கண்ணா
சிந்தையைக் கவர்ந்துவிட்டுச் செல்வ
தாகுமா ?

13. மலரைவென்ற தாள்கள் நோகக்
கானகத்திலே - கண்ணா
புல்லும்பூண்டு தைத்திடவே நீயலாகுமா ?

14. மண்படிந்த மேனியோடு மாலை
வேளையில் - கண்ணா
குழலையூதி ஓடிவந்தெம் மனம் கவர்ந்தனை

15. பணிந்தவரின் பிறவி நீக்கும் நின்
பொற்பாதங்கள் - கண்ணா
எங்கள்மீது பட்டிடின் பேரின்பமாகுமே.

16. குழலடைந்த அதரமென்ற இன்ப
அமுதினை - கண்ணா
நாங்களும் அடைந்திடவே அருள
வேண்டுமே

17. காட்டிலே நீ மாடுமேய்க்கச் சென்ற
போதிலே - கண்ணா
அரைக்கணமும் எங்களுக்கோர்
யுகமதாகுதே

18. காட்டில் நின்று நீ திரும்பி வீடு
வருகையில் - கண்ணா
கண்ணிமை கணம் மறைக்குதென
வருந்துவோம்

19. நள்ளிரவில் நாடிவந்த பேதை
மாதரை - கண்ணா
கள்ளமாகக் கைவிடுதல் நியாயமாகுமா ?

20. தனிமையிலே ஆசைகாட்டிப்
புன்சிரிப்புடன் - கண்ணா
மனம்மயக்கிச் சித்தம் கொள்ளை
கொண்ட கள்வனே

21. ஆயர்பாடி மாந்தருக்கு மட்டுமின்றியே
- கண்ணா
பிறந்தவர் அனைவருக்கும் நன்மை
நல்கினாய்

22. உந்தன்மீது மையல்கொண்ட
எங்களுக்குமே - கண்ணா
அமுதுந்தனிப்பையோல் ஆனந்தமாகுமே.





எங்கு செல்கினும்
கண்ணேக்கவரும்

# மபத்லால்

பாப்ளின்கள்
லாங்கிளாத்கள்








பாப்ளின்கள்
ராஜ்யோக் 2x2
குது ராஜ்
பஸந்த் ராஜ்
நைன் கினீ
குட்வில்

லாங்கிளாத்துகள்
ஹெலிகாப்டர்
ஸாப்ட் & ஸ்டிராங்
டிமாண்ட் டிராப்ட்
எம்பிரா கேட்
(குழந்தைகளுக்கும்
பெண்டிருக்குமான
புத்தம் புதிய துணி ரகம்)

மபத்லால் பைன்
ஸ்பின்னிங் & மான்யுபாக்சரிங்
கம். லிமிடெட்
நவ்ஸாரி

# தங்க நகரம்

அகிலன்

## 7. இன்ப நகரம்

மல்லிகாவுக்கு ஏற்பட்ட விபரீதமான சந்தேகத்தைக் கேட்டவுடன் சந்திரன் விழுந்து விழுந்து சிரித்தான். "'நாம் உயிரோடு இருக்கிறோமா' என்று கேட்கிறாயே! உயிரோடு இல்லாவிட்டால் இப்படி நீ என்னிடம் கேட்க முடியுமா?" என்று கூறி மேலும் சிரித்தான்.

மெல்லத் தன் தங்கையை அழைத்துக் கொண்டு போய், ஒரு கடையில் தெரிந்த பெரிய கண்ணாடியில், அவள் உருவத்தையும் தன் உருவத்தையும் காண்பித்தான். அப்போதுதான் அவளுடைய சந்தேகம் தீர்ந்தது.

ஆனாலும் கண்ணாடியில் தெரிந்த தங்களுடைய உருவங்களைக் கண்டவுடன் அவர்களுக்கே திகைப்பு ஏற்பட்டது. 'அடடா! ஒரு நாளைக்குள் இவ்வளவு கோரமாக மாறி விட்டோமே! அரண்மனைக் குழந்தைகள் என்று சொன்னால் இனி யார்தாம் நம்புவார்கள்? எங்களைத் திருடன் கொலை செய்து விட்டதாகப் பத்திரிகைகளில் வேறு செய்தி வந்து விட்டது!'



சந்திரனுக்கே நம்பிக்கை தளர்ந்து கொண்டு வந்தது.

"வா, மல்லிகா! கடைசி கடைசியாக இன்னொரு முறை முயற்சி செய்வோம். முடிந்தால் அரண்மனைக்குள் நுழையப் பார்ப்போம். முடியாவிட்டால் வேறு எங்கேயாவது போவோம்" என்றான் சந்திரன்.

பழையபடி இருவரும் அரண்மனை வாசலுக்கே போனார்கள். அந்தப் பாஷை புரியாத சிப்பாய்தான் இப்போதும் அங்கே நின்றான். ஆகையால் அவர்கள் உள்ளே போகவில்லை; மறைவான ஓர் இடத்தில் நின்று கொண்டிருந்தார்கள்.

ஒரு மணி நேரத்துக்கு மேல் கால் கடுக்க நின்றார்கள். "உள்ளேயிருந்து கார் வந்தால் நீ சொல்லு; நான் வெளியே இருந்து உள்ளே நுழைகிறதா என்பதைப் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்றான் சந்திரன்.

கார் வரும் சத்தம் கேட்டது. வெளியே இருந்து தான் வந்தது.

கார் அரண்மனை வாசலுக்கு வெகு சமீபமாக வந்து விட்டது.

சந்திரன் குடு குடுவென்று மல்லிகாவை இழுத்துக் கொண்டு வந்து காருக்கு நேர் குறுக்கே நிறுத்தினான். தானும் காரில் அடி படப் போகிறவன் போல் முன்னால் ஓடி நின்றான். காரும் வந்து அவர்கள் மேல் மோதியது. அவர்களைக் கீழே தள்ளியும் விட்டது. ஆனால் அவர்கள் மேல் ஏறவில்லை; அவர்களைப் பலமாகக் காயப் படுத்திக்கொண்டு உள்ளே போகவில்லை.

காரிலிருந்து ராஜாவே பதறிக் கொண்டு இறங்கி வந்தார். அவருடன் பட்டத்து ராணியும் வந்தாள். கீழே கிடந்த குழந்தைகளை ஆளுக்கொருவராய்த் தூக்கிப் பார்த்தார்கள். நன்றாக உற்றுப் பார்த்தார்கள். சந்திரனும் மல்லிகாவும்!

"நாங்கள் சாகவில்லை, அப்பா! எங்களை ஒருவனும் கொல்லவில்லை. எங்கள் உடுப்பைத்தான் ஒருவன் திருடிக் கொண்டான். அவனை விட்டு விடுங்கள்" என்றான் சந்திரன்.

இருவருக்கும் இலேசான காயம்; இருவரும் அப்படியே பெற்றோர்களைக் கட்டிக் கொண்டார்கள். ராஜாவும் ராணியும் கண்களில் கண்ணீருடன் குழந்தைகளை உச்சி முகர்ந்தார்கள்.

"இனிமேல் உங்களிடம் சொல்லிக் கொள்ளாமல் நாங்கள் எங்கும் போக மாட்டோம், அப்பா!" என்று கதறினான் சந்திரன். மல்லிகாவும் தாங்கள் செய்த தவறுக்காக அழுதாள்.

ஆனால் ஏழைகளின் துன்பத்தை ஒருநாள் அனுபவித்த சந்திரன் அதை மறக்கவே இல்லை. அவன் தங்கை மல்லிகாவும் அப்படியே அதை மனத்திற்குள் வைத்திருந்தாள். ஏழைகள் உலகம் எவ்வளவு பயங்கரமானது! எத்தனையோ துயரங்கள் அவர்களைப் பாடாய்ப் படுத்திக் கொண்டிருப்பதை அவர்கள் கண்ணால் கண்டார்கள். அவர்களே அத்துன்பங்களில் சிலவற்றை அனுபவித்தும் விட்டார்கள்.

மத்தியில் இருபது வருடங்கள் ஆகி விட்டன. அண்ணனும் தங்கையும் மேல் நாடுகளுக்குப் படிக்கப் புறப்பட்டார்கள். அவர்கள் அங்கே என்ன படித்தார்கள் தெரியுமா? ஏழைகளுக்கு எப்படி உதவி செய்வது என்பதைப் படித்தார்கள். கை கால் இல்லாதவர்களுக்கும், குருடர்களுக்கும், நோயாளிகளுக்கும் எப்படி வாழ்வு அளிப்பது என்பதைக் கற்ருர்கள். எல்லோருக்கும் எப்படி வேலையும் கூலியும் கொடுப்பது என்பதைக் கண்டார்கள்.

அமெரிக்காவில் குருடர்கள் வேலை செய்தார்கள். பழம் எண்ணிப் போடும் வேலை; அச்சுக் காகிதத்தை மடக்கும் வேலை; புத்தகங்கள் அடுக்கும் வேலை; டைப் அடிக்கும் வேலை—இதைப் போன்ற பல வேலைகள். அதன் மூலம் வந்த பணத்தால் அவர்கள் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். குருட்டுப் பாடகர்கள், வாத்தியம் வாசிப்பவர்கள் எல்லாம் அங்கே மகிழ்ச்சியுடன் இருந்தார்கள்.

காலில்லாத நொண்டிகள் அங்கே உட்கார்ந்து கொண்டு செய்யும் பல வேலைகளைச் செய்தார்கள். குமாஸ்தா வேலை; வியாபாரம்; கணக்கு இன்னும் பற்பலவேலைகள்.

கையில்லாத முடவர்கள் காலால் செய்யக்கூடிய வேலைகளைச் செய்தார்கள். ஊமையர்களுக்கும், செவிடர்களுக்கும் அங்கே அவரவர்களுக்குத் தகுந்த வேலைகள் இருந்தன. அவற்றையெல்லாம் கவனித்து வந்தான் சந்திரன்.

சந்திரனுக்கும் மல்லிகாவுக்கும் படிப்பு முடிந்த பிறகு தங்க நகரமே ஒரு புதிய இன்பநகரமாக மாறியது. அந்த நகரத்திலும், அதைச் சுற்றிப் பல நூறு மைல்களுக்கும் ஒரு பிச்சைக்காரன் கூடக் கிடையாது. பசியினால் வாடக்கூடியவர்கள் யாருமில்லை. எல்லோரும் வேலை பார்த்தார்கள்; கூலி பெற்ருர்கள். மிகவும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள்.

முடவனுக்கு வேலை,
குருடனுக்கு வேலை,
ஊமையனுக்கு வேலை,
நொண்டிக்கு வேலை,
எல்லோருக்குமே வேலை!

வேலை செய்ய முடியாத நிலையில் உள்ள நோயாளிகளுக்கு ஆஸ்பத்திரியில் வைத்திய உதவி இலவசமாகக் கிடைத்தது. அத்துடன் வயிறு நிறைய உணவும் அவர்களுக்குக் கிடைத்தது. இவ்வளவுக்கும் பணம் வேண்டாமா? அரண்மனைப் பணம் முழுவதையும் இதற்கே செலவிட்டான் சந்திரன். அதைத் தவிர தன் ராஜ்யத்திலிருந்த எல்லாப் பணக்காரர்களிடமும் சொல்லிப் பணத்தைக் கொண்டு பல தொழில்கள் ஆரம்பிக்கச் செய்தான். வரும் லாபத்தில் ஒரு பகுதியை மக்கள் நலநிதிக்காக வரியாக வசூல் செய்தான்.

ஒரு புதிய, மகிழ்ச்சி பொங்கும் ராஜ்யத்தையே சந்திரன் ஏற்படுத்தி விட்டான். அவனுக்கு உதவியாக இருந்தாள் அவன் தங்கை மல்லிகா.

பிச்சைக்காரர்கள் தங்க நகரத்தில் கிடையாது; அதே போல் உழைக்காமல் ஏழைகளை ஏமாற்றி உறிஞ்சும் அட்டைகளான சோம்பேறிகளும் அங்கு கிடையாது. வேலையில்லாமல் சோம்பித் திரியும் கூட்டமும் இல்லை. அந்த ஊரில் எப்போதும் மகிழ்ச்சிதான்; சிரிப்புத்தான்; உழைப்பும் ஓய்வுந்தான்—எங்கே நீங்களும் சிரியுங்கள்!



சிரித்து விட்டுச் சிந்தித்துப் பாருங்கள்: சந்திரனும் மல்லிகாவும் அப்படித் தங்கள் நாட்டை உயர்த்த முடியுமானல் நாமும் ஏன் நம் நாட்டை உயர்த்த முடியாது?

(முற்றும்)

---

[இதை வெளியிட்டுக் கொள்ள அனுமதி கொடுத்த திரு வே. கூ. நடேசன் அவர்களுக்கு நன்றி. புத்தகம் கிடைக்குமிடம்: தமிழ் நிலையம், புதுக்கோட்டை.]



# மீன் உணவு

## புசித்துப் பாருங்கள்

½ பவுண்டு வேக வைத்த மீன், ½ பைண்ட் பால், 3 தேக்கரண்டியளவு ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன் ப்ளவர், ஒரு அவுன்ஸ் வெண்ணெய், ஒரு மேஜை கரண்டி நறுக்கிய பார்ஸ்லி, வேக வைத்து பிசைந்த உருளைக் கிழங்கு, எலுமிச்சம் பழச்சாறு.

மீனின் தோலையும், முள்ளையும் களைந்துவிட்டு, லேசான தணலில் வேக வைக்கவும். ஒரு பாத்திரத்தில் வெண்ணெயை உருக்கி, ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை சேர்த்து நன்றாகக் கிளறவும். தணலிலிருந்து எடுத்துவிட்டு பாலைக் கலந்து நன்றாகக் கலக்கவும். திரும்பவும் அடுப்பில் வைத்து கொதிக்கும் வரை கிளறிவிட்டு, பிறகு 3 நிமிட நேரம் திரும்பவும் கொதிக்க வைக்கவும். மீன், பார்ஸ்லி, எலுமிச்சம் பழச்சாறு இவைகளைச் சேர்த்து கவனமாகப் பக்குவப்படுத்தவும். சூடு வெளியேறாத பாத்திரத்தில் இதை வைத்து, பிசைந்து வைத்த உருளைக் கிழங்கை மேலே பரப்பி, கொஞ்சம் மார்கரெயினையும் தூவி மூடி விடவும். பின்பு சாதாரண தணலில் 20 நிமிட நேரம் பக்குவமாக தயார் செய்துகொள்ளவும்.



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

இந்தியாவில் ஏஜென்டுகள் : பாரி அன்டு கோ. லிட்.

**ப்ரௌன் அன்டு போல்ஸன் கார்ன்ப்ளவர் பேட்டன்ட் ஆக அங்கீகரிக்கப்பட்டது.**

இதன் பரிசுத்தத் தன்மைக்கு இப்பரிசோதனையைச் செய்து பாருங்கள் :-

இரண்டு மேஜைக் கரண்டியளவு ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை கொதித்து ஆற வைத்து குளிர்ந்த ஜலத்தில் நன்றாகக் கலக்குங்கள். 24 மணி நேரம் இவ்விதம் வைத்த பிற்பாடும்கூட கெட்ட வாசனை உண்டாகாமல், மாசற்றதாகவும், பெக்டீரியா முதலிய அசுத்த அணுக்களால் சேதப்படாமலும் இருப்பதைக் காண்பீர்கள். மற்ற ப்ரௌன் அன்டு போல்ஸனின் உயர்தர சாதனங்கள் என்னவென்றால்: ரெய்ஸ்லி, கஸ்டர்ட் பௌடர், ப்ளேவர்ட் கார்ன்ப்ளவர்.



இங்கிலிஷ், ஹிந்தி, அல்லது தமிழ் பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அழகான சமையல் புஸ்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனை பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்து விடவும்)

தபால் செலவிற்காக 15 நயா பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இதோடு அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/செல்வி.........................................

..................................................................

விலாசம்...................................................

டிபார்ட்மென்ட் :. KLK 15

கார்ன் ப்ராடெக்ட்ஸ் கோ.

(இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்

தபால் பெட்டி : 994, பம்பாய் 1

# கண்கள் உறங்காவோ?

மாயாவி

அத்தியாயம் 12

## புகைப்படமும் பகைப்புலனும்

பெற்ற மக்கள் கண்ணீர் விடுவதைக் கண்டால் எந்தப் பெற்றோரின் உள்ளந்தான் பேரதிர்ச்சி அடையாது? வேடிக்கையாகப் பேசிக் கொண்டு உள்ளே வந்த சச்சிதானந்தத்தின் உள்ளத்தை ஒரு விநாடியில் வெதும்பிப் போகச் செய்து விட்டது வீணாவின் கண்ணீர்!

"ஏம்மா! அழுதுக் கிட்டிருக்கிறே?" என்று அவர் அவளிடம் பாய்ந்தோடி வந்தார்.

"ஒன்றுமில்லை அப்பா; ஏதோ பழைய நினைவு" என்று கூறிய வீணா சேலைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"பழைய நினைவா?" சச்சிதானந்தத்துக்குச் சட்டென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. மகள் முகத்தைப் புதைத்திருந்த மேசையை நோக்கினார். அங்கே அவர் எதிர்பார்த்தது இருந்தது.

அது ஒரு புகைப் படம். பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் வீணாவின் திருமணம் நடந்த அன்று எடுக்கப்பட்டது. அதில் குழந்தைத் தம்பதிகளான மயில் வண்ணனும் வீணாவும் மணமாலையும் கழுத்துமாக அமர்ந்திருந்தனர்.

"அடடா! இது உன் கையில் அகப்பட்டுடுத்தா?" என்று அவர் அப்புகைப் படத்தை எடுத்துக் கொள்ளப் போனார். ஆனால் வீணா அதற்குள் அதைக் கையில் எடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு, "இது என்னிடமே இருக்கட்டும், அப்பா!" என்றாள்.

"சரிதான் போ. இது உன் கையில் இருந்தால் பார்த்துப் பார்த்து அழுதுக் கிட்டிருக்கத்தான் பொழுது சரியாக இருக்கும். வேண்டாம், அம்மா! கொடுத்துடு" என்று சச்சிதானந்தம் கெஞ்சினார்.

"அழ ஒன்றும் மாட்டேன். எதற்காக அழவேண்டும்? நாம் அழுவதால் இறந்து போனவர்கள் திரும்பி வந்துவிடவா போகிறார்கள்?"

"பின்னே இப்போ ஏன் அழுதுக்கிட்டிருந்தியாம்?"

"ஐயோ! நான் இந்தப் படத்தைப் பார்த்து விட்டு அழவில்லை, அப்பா!"— வீணா சிரிக்க முயன்றாள்.

"பின்னே...?" சச்சிதானந்தம் பெரிய கேள்விக் குறியுடன் மகளின் முகத்தை நோக்கினார்.

வீணா தயங்கினாள். அவளால் தந்தையின் கேள்விக்கு விடையளிக்க முடியவில்லை. அவளுடைய அழுகையின் காரணம் இந்தப் படமில்லைதான். சற்றுமுன் கூடத்தில் அத்தையும் தானுவதியும் தன்னைப் பற்றியும் சுந்தரத்தைப் பற்றியும் பேசிக் கொண்ட பேச்சுக்கள்தாம் அவளை அழச் செய்து விட்டன. ஆனால் அவள் அதைத் தந்தையிடம் கூற விரும்பவில்லை. ஆகையால்தான் தயங்கினாள்.

அவளுடைய தயக்கத்தைப் பார்த்து விட்டுச் சச்சிதானந்தம் சோகச் சிரிப்பு ஒன்று சிரித்தார். "எனக்குத் தெரியும், வீணா! எல்லாத்தையும் மறந்துட்டு இருக்கிற எனக்கே இதைப் பார்த்த போது துக்கம் பொங்கிக் கொண்டு வந்து விட்டதே! உனக்கு வராதா, அம்மா!" என்றார் அவர்.

"அது இந்தப் படத்தை நான் முதல் தடவையாகப் பார்த்ததால் எழுந்த சோகம், அப்பா!"

அவள் கூறியது உண்மைதான். தனக்கு அறிவு வந்த பிறகு இன்றுதான் அவள் இப்படத்தைப் பார்த்தாள். இப்படம் பிடிக்கப்பட்ட போது அதில் மூன்று பிரதிகள் தயாரிக்கப்பட்டன. ஒன்று மன்னர் மோகனசிங்கின் அரண்மனையிலும், மற்றொன்று சச்சிதானந்தத்தின் பங்களாவிலும், மூன்றாவது தைலம்மாளும் சடையப்பரும் அன்று வசித்து வந்த காசிப்பூர் வீட்டிலும் தொங்கவிடப்பட்டிருந்தன. அப்பொழுதெல்லாம் அம்மூன்று குடும்பத்தினரும் இப்படத்தைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தனர். ஆனால் விதி அவர்கள் மகிழ்ச்சியை நீர்க் குமிழியாக்கி உடைத்து விட்ட போது தைலம்மாள் தன் வீட்டில் தொங்கிய படத்தையும் அதைப் போலவே உடைத்து எறிந்து விட்டாள். மற்றவர்களும் இனி அது வீணாவின் கண்களில் படுவது நல்லதில்லையெனக் கழற்றி வைத்து விட்டனர். பிற்காலத்தில் அவள் அறிவடைந்து தன் நிலையை உணர்ந்து கொண்ட போதுகூட யாரும் இந்தப் புகைப்படத்தை அவள் கண்களில் காட்டவில்லை. அப்படி ஒன்று எடுக்கப்பட்டதைக்கூட அவளுக்கு அறிவிக்கவில்லை. ஏனென்றால் அன்றும் இன்றும் என்றுமே மயில் வண்ணனின் நினைவு அவள் மனத்தில்படிந்து வேதனைப் படுத்தக் கூடாது என்று அவர்கள் கருதி வந்தார்கள்.

அதே கருத்தைத்தான் இப்பொழுதும் சச்சிதானந்தம் கொண்டிருந்தார். ஆகலால் அவர் சொன்னார்: "ஆமாம், நீங்க பெண்பிள்ளைங்க இப்படித்தான் சொல்லுவீங்க. பிறகு தினம் இதைப் பார்த்து ஒப்பாரி வைச்சுக்கிட்டிருப்பீங்க."

அவர் இதை அனுபவத்திலிருந்துதான் கூறினார். காசிப்பூரில் இருந்த வரை அவர் இந்தப் படத்தை வெளியே எடுக்கவில்லை. ஆனால் இங்கே நிரந்தரமாக வந்து விட்ட பிறகு இதை, வீணாவின் குழந்தைப் பிராயத்தில் எடுக்கப்பட்ட வேறு சில படங்களுடன் கூடத்தில்தான் மாட்டி வைத்திருந்தார். முதல் நாள் இது கண்களில் பட்டபோது தைலம்மாள் பெரிதாக ஒப்பாரி வைத்து அழுதாள். நெடுங் காலத்துக்குப் பிறகு மறைந்த மகனின் மணக் கோலத்தைப் பார்த்ததால் அழுகிறாள் என்று எண்ணி, அன்று அவர் அவளுக்கு ஆறுதல் கூறி அழுகையை அடக்கினார். ஆனால் தொடர்ந்து இதே கதையாகி விட்டது. வீட்டு வேலை இல்லாத போதெல்லாம் அவள் படத்தண்டை வந்து நின்று வாயிலும்வயிற்றிலும் அடித்துக்கொண்டு பிலாக்கணம் பாடி வந்தாள். சச்சிதானந்தம் படத்தைக் கழற்றி உள்ளே வைத்து விடுவதாகப் பயமுறுத்திக்கூடப் பார்த்தார். ஆயினும் அவளுடைய அழும் வழக்கம் நிற்கவில்லை. கடைசியில் ஒரு நாள் அவர் அப்படிச் செய்தே விட்டார். தைலம்மாள் வீட்டில் இல்லாத சமயத்தில் படத்தைக் கழற்றித் தமது அறையிலிருந்த பழைய தஸ்தாவேஜுப் பெட்டி ஒன்றில் ஒளித்து வைத்து விட்டார். படத்தை அகற்றிவிட்ட பிறகுகூட இரண்டொரு நாட்கள் அது மாட்டப்பட்டிருந்த இடத்தில் வந்து நின்று அவள் அழுது கொண்டுதான் இருந்தாள். ஆனால் பிறகு அது படிப்படியாகக் குறைந்து போய் விட்டது.

உயிருக்குயிரானவர்கள் இறந்து விட்டால் அவர்கள் நினைவையும் மனத்திலிருந்து அறவே துடைத்துவிட வேண்டுமென்று சச்சிதானந்தம் சொல்லவில்லை. ஆனால் அதற்காக ஆயுள் உள்ள அளவும், அவர்கள் நினைவை யூட்டும் எதைப் பார்த்தாலும் அழுது கொண்டிருப்பது அவருக்குப் பிடிக்கவில்லை. தைலம்மாள் இந்த விஷயத்தில் இன்னும் ஒரு படி மேலே கூடப் போய் விட்டாள். வீணாவை யாராவது அவளுடைய மருமகள் என்று குறிப்பிட்டால்கூட அல்லவா அவளுக்குக் கோபமும் சோகமும் ஏற்பட்டு வந்தன!

அவளுக்காகவே அவர் அன்று பெட்டியிலிட்ட இப் படத்தை மறுபடியும் ஒரு தடவை கூட எடுத்துப் பார்க்கவில்லை. கடந்த எட்டு ஆண்டுகளாக இது அந்தத் தஸ்தாவேஜுப் பெட்டியில்தான் உறங்கிக் கொண்டிருந்தது. ஆனால் முந்தா நாள் வீணா வரப் போவதாகத் தந்தி வந்ததும், அவருடைய மனத்தில் பழைய நினைவுகள் அலைமோதிக்கொண்டு எழுந்தன. அப்பொழுது அவருக்கு இப் படத்தின் நினைவும் வந்தது. இதைப் பார்க்க வேண்டுமென்ற அவா ஏற்பட்டது. பிற்பகலில், சாப்பாட்டுக்குப் பிறகு, தைலம்மாள் உறங்கிக் கொண்டிருந்த சமயம் பார்த்து அறைக்கு வந்து, இதை எடுத்து வைத்துக் கொண்டு, விசனமும் மகிழ்ச்சியும் கலந்த ஒரு விநோத மனோ பாவத்துடன் நெடு நேரம் பார்த்துக்கொண்டே இருந்தார். சோதனைபோல் அச் சமயத்தில், தூங்கிக் கொண்டிருந்த தைலம்மாள் எழுந்து, ஏதோ கேட்பதற்காக அவரைக் கூப்பிட்டுக் கொண்டு வந்து விட்டாள். சச்சிதானந்தம் சட்டெனப் படத்தை மேசை டிராயருக்குள்ளே வைத்து மூடினார். பிறகு அவர் வேறு வேலைகளில் ஈடுபட்டு விட்டார். இதை மேசையினுள்ளே வைத்திருந்தது அவருக்கு மறந்தே போய் விட்டது.

நேற்று மாலையில் வீணா இந்த அறையைத் தன் உபயோகத்துக்கு வைத்துக் கொள்ளலாமா என்று கேட்டபோது கூட, "வைச்சுக்கிடேன், அம்மா! கட்டில், மேசை, நாற்காலி எல்லாம் போட்டே இருக்குது. திண்ணையைப் பார்க்க இருக்கிற சன்னலைத் திறந்து போட்டுக் கிட்டால் காற்று வாரிக்கிட்டுப் போகும்" என்று பலப்பல கூறினாரேயன்றி அப்பொழுதும் புகைப்படத்தின் நினைவு அவருக்கு வரவில்லை. வந்திருந்தால் இதை அவள் கைக்குக் கிட்டும் வண்ணம் வைத்திருப்பாரா? இது அவளிடம் பழைய நினைவுகளைக் கிளப்பி விடும்; துயரடையச் செய்யும் என்பது அவருக்குத் தெரியாதா?

வீணா கூடத் தற்செயலாகத்தான் இதைக் காண நேரிட்டது. பொழுது விடிந்ததும் விடியாததுமாக அந்தத் தடியன் தானாவதி திருப்பள்ளி எழுச்சி பாடிக் கொண்டு அவள் வீட்டை முற்றுகையிட்டு விட்டான். தூங்கி எழுந்ததும் அவன் முகத்தில் விழித்து, அவனுடைய அசட்டுப் பிதற்றல்களைக் கேட்டுக் கொண்டிருக்க விருப்பமின்றி, அவன் திரும்பிச் செல்லும் வரையில் அறையை விட்டு வெளியே போவதில்லையென்று அவள் மேசை முன்னிருந்த நாற்காலியில் அமர்ந்து விட்டாள்.

ஆனால் தானாவதி லேசில் கிளம்புகிறவனாகத் தென்படவில்லை. அவள் தந்தையும் அத்தையும் ஒருவர் பின் ஒருவராக அவன் வாயைக் கிண்ட ஆரம்பித்து விட்டனர். வீணா எத்தனை நேரந்தான் அறையில் வெறுமனே உட்கார்ந்திருக்க முடியும்? மேசைக்குள்ளே அப்பாவின் புத்தகம் ஏதாவது இருந்தால் எடுத்துப் படித்துக் கொண்டிருக்கலாமென்று அவள் அதன் இழுப்பறையைத் திறந்தாள். அதில் இந்தப் புகைப்படம் இருந்தது.

எத்தனைதான் தன் நிலையை உணர்ந்து தைரியமாக இருந்தபோதிலும், முதல் தடவையாகத் தனது திருமணக் கோலத்தைப் படத்தில் பார்த்ததும் அவள் உள்ளத்தில் சொல்லொணாக் குமுறல் ஏற்படத்தான் ஏற்பட்டது. தன் வாழ்க்கை சென்றிருக்க வேண்டிய இன்பப் பாதையையும், இன்று அது போய்க் கொண்டிருக்கும் துன்பப் பாதையையும் அப்பொழுது அவளால் சீர் தூக்கிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

அப்படிச் சீர் தூக்கிப் பார்த்துக் கொண்டிருந்தபோது திடீரென்று அவளுக்கு அந்தப் படம் எப்பொழுதும் தன்னிடம் இருக்கவேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. ஆம், வருங்காலத்தில் தனக்கு எத்தனையோ சோதனைகள் ஏற்படப் போகின்றன என்பதற்கு, இந்த ஊரில் அடியெடுத்து வைத்த அன்றே பல சூசகங்கள் தென்பட்டு விட்டன. அந்தச் சோதனைகளுக்குத் தான் இரையாகி விடாதிருக்க, தன் நிலையை எப்பொழுதும் உணர்த்திக் கொண்டிருக்கும் சின்னம் அவசியமென்று அவளுக்குப் பட்டது. அதற்கு இந்தப் புகைப்படத்தை விட உயர்ந்த சாதனம் வேறு உண்டா?

ஆனால் அவள் தந்தையோ வேறு எது எதையோ எண்ணிக் கலங்கிக் கொண்டு, இது அவளிடம் இருக்கக்கூடாது என்கிறார். எனவே இதன் தேவையைக் கூடமாக விளக்கினாலாவது அவர் மன நிம்மதியோடு இதைத் தன்னிடம் இருக்க அநுமதிப்பாரா? பார்க்கலாமென்று வீணா அதற்கேற்ற விதத்தில் பேச்சைத் தொடர்ந்தாள்.

“என்னையும் கிராமாந்தரத்துப் பெண்களில் ஒருத்தியாக நினைத்து விடாதீர்கள், அப்பா. நான் படித்த பெண்; பட்டம் பெற்றவள்; பதவி வகிக்கப் போகிறவள். தவிர, அவரை இழந்ததால் அடைய வேண்டிய வேதனைகளையெல்லாம் என் மனம் ஏற்கெனவே அடைந்து விட்டது. இப்பொழுது அதற்குத் தேவையானதெல்லாம் ஒரு நீடித்த விழிப்புத்தான், அப்பா! உங்களிடம் மனம் விட்டுக் கூறுகிறேன். இன்னும் சில நாட்களில் நான் ஒரு புது உலகில், தொழில் உலகில் புகப் போகிறேன். அப்பொழுது என் நிலையை எனக்கு எப்பொழுதும் உணர்த்திக் கொண்டிருக்க ஏதாவது ஒன்று வேண்டும். இந்தப் புகைப்படம் அதைச் செய்யுமென்றுதான் என்னிடம் வைத்துக் கொள்ள விரும்புகிறேன்.”

வீணாவின் இந்த நீண்ட பேச்சு சச்சிதானந்தத்தின் மனநிலையைத் திசை திருப்பியது. அவர் சிறிது நேரம் அவள் கூறியதை அலசிப் பார்த்தார். ஆம், மகள் மேற்கொள்ளப் போகும் வைத்தியத் தொழிலில் அவள் பலரோடு பழகி, பலரது பலவிதமான வாழ்க்கை அந்தரங்கங்களை அறிந்து கொள்ள வேண்டியிருக்கும். அவளுடைய இளம் மனத்திலே அப்பொழுது எத்தனையோ கீறல்கள் விழக்கூடும். அந்தக் கீறல்கள் பெரும் புண்ணாகி அவளையே விழுங்கி விடாதிருக்க ஓர் எச்சரிக்கை வீணாவுக்குத் தேவைதான். அந்த எச்சரிக்கையை அளிக்கும் கருவியாக இந்தப் புகைப்படம் விளங்குமென்றால், இது அவளிடம் இருக்க வேண்டியதும் அவசியந்தான் என்று அவருக்குத் தோன்றிற்று.

இந்த முடிவுக்கு வந்துவிட்ட பிறகு அவர் மகளை வற்புறுத்தவில்லை. “இது உன்னைத் துயரத்தில் ஆழ்த்தாது; உன் தொழிலையோ, வாழ்க்கையையோ பாதிக்காது என்றால் வைச்சுக்கோ, வீணா! ஆனால் தப்பித் தவறிக்கூட இது உன் அத்தை கண்ணிலே பட்டுவிடக் கூடாது. அவள் பார்த்துவிட்டால் அவ்வளவுதான், இந்த வீட்டையே இரண்டாக்கி விட்டுத்தான் நிற்பாள்” என்றார்.

“மாட்டேன், அப்பா. இதன் சட்டம் அட்டை எல்லாவற்றையும் எடுத்து விட்டுப் படத்தை மட்டும் என் கைப்பையில் வைத்துக் கொள்வேன்” என்று கூறிவிட்டு வீணா அப்படத்தைக் கண்களில் ஒற்றிக்கொண்டு டிராயருக்குள்ளே வைத்து மூடினாள்.

“சரி, வா அம்மா! மணி ஏழாகப் போகிறது. இன்னும் பல்கூடத் தேய்க்காமல் இருக்கிறாயே!” என்று கூறி விட்டுச் சச்சிதானந்தம் அறையை விட்டு வெளியே வந்தார். ஆனால் சட்டென்று ஏதோ நினைவுக்கு வரவே நின்று மகளை நோக்கித் திரும்பி, “ஆஸ்பத்திரிச் சாமான்களெல்லாம் வந்துடிச்சாம், வீணா. ஸ்டேஷன்மாஸ்டர் நம்ம தாணுவதிகிட்டே சொல்லி அனுப்பியிருக்கிறார்” என்றார் மகிழ்ச்சியுடன்.

“அதற்கென்ன? ரயில் ரசீதைத்தான் நேற்றே உங்களிடம் கொடுத்திருக்கிறேனே! மாடசாமியை வண்டியுடன் அனுப்பி, கவனமாக ஏற்றி வர ஏற்பாடு செய்யுங்கள்” என்று கூறியவாறு வீணாவும் வெளியே வந்து அறைக் கதவை மூடிவிட்டுத் தந்தையைப் பின்பற்றிக் கூடத்துக்கு நடந்தாள்.

கூடத்து ஊஞ்சலில் தாணுவதி கால்மேல் கால்போட்டுச் சம்மணமிட்டு உட்கார்ந்து, வலது பாதத்தை ஆட்டிக் கொண்டிருந்தான். வீணாவைக் கண்டதும் அவன் பல்லை இளித்தவாறு எழுந்து, “வணக்கம், டாக்டர் அம்மா. சுகமாத் தூங்கிக்கிட்டு இருந்திருப்பீங்க. மாமா வந்து தூக்கத்தைக் கலைச்சுட்டாரு. என்ன நான் சொல்றது நெசந்தானே?” என்றான்.

வீணா வெறுமனே அவனுக்குப் பதில் வணக்கம் மட்டும் தெரிவித்து விட்டு, “மாலா எங்கே, அப்பா?” என்றாள்.

இரண்டு கைகளிலும் இரண்டு காப்பித் தம்ளர்களைத் தாங்கியவாறு அடுக்களையிலிருந்து வந்து கொண்டிருந்த தைலம்மாள் வீணாவின் கேள்விக்குப் பதில் அளித்தாள். “அவள் என்ன பட்டணத்திலே வளர்ந்த பெண்ணா, பத்து மணி வரையிலே தூங்கிக்கிட்டிருக்க? கோழி கூப்பிடுமுன்னே அவள் எழுந்திரிச்சு, வீட்டுச் சோலிகளை முடிச்சுப் போட்டு, குளிக்கத் தண்ணி எடுத்துக்கிட்டு வர ஆற்றுக்குப் போயிருக்கிறா!” தைலம்மாவின் மனத்திலிருந்த கடுப்பு அவளுடைய சொற்களில் மட்டுமன்று. அவள் காப்பித் தம்ளர்களை ஊஞ்சலில் ‘ணங்’கென்று வைத்த வைப்பிலும் வெளிப்பட்டது.

“வீணாவும் அப்பொழுதே எழுந்திருச்சிட்டா, அக்கா! வைத்தியப் புத்தகம் எதையோ எடுத்துப் படிச்சுக்கிட்டு இருந்தாள்” என்று மகளின் சார்பில் ஒரு பொய்யைச் சொன்னார் சச்சிதானந்தம்.

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்திசஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

எங்கள் மாதாந்திர சுற்றுப் பிரயாணம் வழக்கம்போல் நடைபெறுகிறது. தங்கும் இடம், நேரம் வழக்கம்போல். ஆயுர்வேத முறைப்படி எல்லா வியாதிகளுக்கும் சிகித்ஸை அளிக்கப்படும். விவரங்களுக்கு எமக்கு எழுதவும்:

**எங்கள் ஸ்பெஷல் மருந்துகள்**

1. குமாரசஞ்சீவி - வாயு பவுடர். குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கக் கூடியது.
2. குக்குட சஞ்சீவி - கக்குவான் இருமல் மருந்து.
3. மயூர சஞ்சீவி - மாந்த எண்ணெ.
4. நாக சஞ்சீவி - பிரளி வாயு எண்ணெ.
5. கண்டசக்தி ரஸாயனம் - தொண்டை சதை வளர்ச்சியை ஆபரேஷனில்லாமல் குணப்படுத்தக் கூடியது.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை, கரூர்

கிளை ஆபீஸ்கள்

1. கணேஷ் பில்டிங்ஸ், 2/2. லிங்க் ரோடு
மல்லேஸ்வரம், பெங்களூர் - 3

2. 94. டவுன் ஹைஸ்கூல் ரோடு
கும்பகோணம் (தஞ்சை ஜில்லா)

---

## புளோரோஸோன்

கருமையான சரீரத்தை வெண்மையாக்குகிறது



புளோரோஸோன் உங்கள் சருமத்தை இதேபோல் வெண்மையாக்கி, முகப் பருக்கள் முதலிய சருமக் கோளாறுகளை அறவே போக்கி, மேனிக்கு மலர்போன்ற மென்மையையும், நீடித்த அழகையும் அளிக்கும்.

புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4.25 சக்தி மிகுந்த புளோரோஸோன் க்ரீம் ஒரு ஜாடி விலை ரூ. 5.50

வி. பி. சார்ஜ் தனி

கெமிஸ்டுகளிடமும் ஹைஜினிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட், த. பெ. 1192 பம்பாய்-1 விலாசத்திலும் பெறலாம்

*Florozone*

MIRACLE BEAUTY BLEACH

*Distributors for Madras:*
R. L. GOWDER & Co., 59, Bunder St., Madras

---




## படை சிரங்கு

(ECZEMA)

முதலிய சர்ம வியாதிகளுக்கு

## லிச்சென்ஸா

உபயோகியுங்கள்

எங்கும் கிடைக்கும்

ஸிலோன் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

மகாராஜா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிமிடெட்

54, பேங்க்ஷல் தெரு, கொழும்பு

"ஆமாம். தூங்கி எழுந்திருச்சு ஒரு பொம்புள்ளை பல்லு விளக்க வேண்டாம்; முகம் கழுவ வேண்டாம்; புத்தகம் படிச்சுக்கிட்டிருக்கட்டும். புத்தகம். கிராமத்துக்காரங்க நல்லபொண்ணு என்பாங்க."

"அடா! நீங்க என்ன அத்தை அவங்களை ஓரேயடியா விரட்டறீங்க. பட்டணக் கரையிலே இருந்தவங்க; கிராமத்துக்கு வந்திருக்கிறாங்க. ஊர் வளமை புடிச்சு வரக் கொஞ்ச நாள் ஆகத்தான் ஆகும். என் டாக்டர் அம்மா, நான் சொல்றது சரிதானே?" என்று தானாவதியும் ஓர் அசட்டுச் சிரிப்புடன், வீணாவுக்குப் பரிந்து பேசினான்.

வீணா ஒன்றுமே சொல்லவில்லை. தலையைக் குனிந்தவாறு கொல்லைக் கிணற்றடிக்குச் சென்று விட்டாள்.

அவள் சென்ற பிறகு, "காப்பியைச் சாப்பிடு, தம்பி!" என்றார் சச்சிதானந்தம்.

"காலங் கார்த்தாலே ஒங்க வீட்டுக்கு வந்தா அத்தை கையாலே காப்பி தவறாமல் கிடைச்சிடுது. இதுக்காகவாச்சும் நிதம், நிதம் பொழுது விடிஞ்சதும் இங்கே வந்தாக்கூடத் தேவலாம்" என்று ஏதேதோ உளறிக் கொண்டு தானாவதி காப்பியை எடுத்துப் பருகினான்.

"நீயும் சாப்பிடு, தம்பி; ஆறிப் போயிடப் போகுது" என்றாள் தைலம்மாள்.

"எனக்கு இப்போ வேண்டாம் அக்கா" என்று கூறிய சச்சிதானந்தத்தின் பதிலில் வேதனை நிரம்பி வழிந்தது.

"ஏன், தம்பி? கலந்து கொண்டாந்துட்டேன்; வேண்டாங்கிறியே!"

சச்சிதானந்தம் அவளுக்குப் பதிலும் சொல்லவில்லை; காப்பியையும் பருகவில்லை. தானாவதி காப்பியைக் குடித்து முடிக்கும் வரையில் காத்திருந்தார். பிறகு அவனிடம், "சரி தம்பி. உங்களுக்கு எத்தனையோ வேலை. போயிட்டு வாங்க. ஆஸ்பத்திரிச் சாமான்களைப் பற்றிக் கவலைப் பட்டுக்கிடாதீங்க. நானே வண்டி அனுப்பிடறேன்" என்றார் ஆளைக் கிளப்பும் தோரணையில்.

ஆனால் தானாவதி அவ்வளவு சுலபமாகக் கிளம்பி விடுவானா? "பார்த்தீங்களா, பார்த்தீங்களா? அத்தை கொண்டாந்த காப்பியின் மணத்திலே வந்த காரியத்தை மறந்துட்டேனே!" என்று கையை வேகமாக உதறினான்.

"என்ன தம்பி?" என்று கேட்டாள் தைலம்மாள்.

"ஆஸ்பத்திரிச் சாமான்கள் வந்திருக்கிற விசயத்தை டாக்டர் அம்மா கிட்டே நேரிலே சொல்லிட்டுப் போகணுமின்னு காத்துக்கிட்டிருந்தவன், அவங்க வந்தபோது சொல்ல மறந்துட்டேனே!"

"அதை நான் சொல்லி விட்டேன், தம்பி!" என்றார் சச்சிதானந்தம்.

"இருந்தாலும் நான் சொல்லவேணுமுங்களா? இந்த மாதிரித்தான் மாமா, நினைச்சுக்கிட்டிருக்கிற விசயமெல்லாம் சட்டுச் சட்டுன மறந்து போயிடுது. அது ஏன் மாமா அப்படி மறந்துடுது? அதைக் கூட டாக்டர் அம்மா கிட்டே கேட்கணும். அவங்க இங்கிலீசு வைத்தியத்திலே மறதிக்கு ஏதாவது மருந்து இல்லாமலா இருக்கும்?"

சச்சிதானந்தம் சிரித்துக் கொண்டே, "இதுக்கு இங்கிலீசு வைத்தியம் தேவையில்லை, தம்பி. கை வைத்தியத்திலே குணமாயிடும்" என்றார்.

"தொடங்கிட்டீங்களா, மாமா மறுபடியும் என்னைக் கேலி பண்ண?"

"கேலியில்லை, தம்பி. நிசமாத்தான் சொல்லுறேன். உன் மறதிக்கு மருந்து மணந்தான்—திருமணம். காலா காலத்திலே ஒருத்தியைக் கட்டிக்கிடு; எல்லாம் சரியாகி விடும்."

தானாவதி நீண்ட பெருமூச்சு ஒன்று விட்டான். அவனுடைய சால்வை முழ உயரம் எழுந்து விழுந்தது. "கோட்டாப் பண்ணுறேளாக்கும். பண்ணுங்க மாமா, பண்ணுங்க. ஆனா பார்த்துக்கிட்டே இருங்க. இந்தத் தானாவதிச் சிங்கம் இப்படிப் பசுப் போல இருந்தாலும் திடுமின்னு ஒரு நாள் நீங்கயெல்லாம் திகைக்க நிக்கும்படியா ஒரு ரம்பையைக் கவ்விக்கிட்டு வந்து நிற்கப் போகுது!"

"என்னடா தம்பி, வெட்டிப் பேச்சுப் பேசிக்கிட்டிருக்கிறே. எனக்குச் சோலி இல்லையா? காப்பியைக் குடிச்சுட்டுத் தம்ளரைக் கொடு; நான் போகணும்" என்று தைலம்மாள் இப்பேச்சுப் பிடிக்காமல் சச்சிதானந்தத்தை முடுக்கினாள்.

"அதுதான் சொன்னேனே, அக்கா; எனக்கு இப்போ காப்பி வேண்டாம்; எடுத்துக்கிட்டுப் போ."

## ✲ அருள் வாக்கு ✲

உலகில் எந்தச் சின்னத் துக்கம் வந்தாலும் நாம் அழுகிறோம். கஷ்டப்படுகிறோம். எப்படிப்பட்ட துக்கம் வந்தாலும், அவமானம் வந்தாலும் அவற்றால் மனம் சலிப்படையாமல், தளர்ச்சி அடையாமல் என்றும் உறுதியுடனிருப்பதற்குப் பல பயிற்சிகள் வேண்டும். உடம்பை வளர்ப்பதற்குத் தண்டால், பஸ்கி போடுகிறோம். இவற்றையெல்லாம் செய்வதற்கு மிகவும் நியமத்துடன் இருந்தால்தான் உடம்பு வளருகிறது. அதேபோல் ஆத்ம சக்தியை அதிகரிப்பதற்கும் பல கடுமையான பயிற்சிகள் அவசியமாகின்றன. அவற்றை வேதம் கூறுகின்றது. வேதம் கூறுகிறபடி கர்மானுஷ்டானங்களைச் செய்வதன் பயன் எந்த விதமான துக்கமோ, காமமோ, கோபமோ, சலிப்போ எந்தத் துர்க்குணங்களும் நம்மைப் பாதிக்காது; என்றும் ஆனந்தக் கடலில் திளைக்க முடியும் என்பதில் ஐயமில்லை.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

"ஏண்டா வேண்டாம்? என்னடா செய்யுது உனக்கு? உடலு - கிடலு சரியில்லையா?"

"உடலெல்லாம் சரியாகத்தான் இருக்குது; மனசுதான் சரியில்லே."

"மனசு சரியில்லையா? மனசு சரியில்லாமல் போக என்னடா ஆயிடுச்சு இப்போ?"

சச்சிதானந்தம் சிறிது நேரம் தயங்கினர்; பிறகு மனசைத் திடப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தார். "நான் சொல்ல வேண்டாமின்னுதான் பார்த்தேன், தைலம்மா. ஆனல் நீ என்னைச் சொல்ல வைச்சுக்கிட்டே இருக்கிறே! வீணுகிட்டே எப்போதும் வெடுவெடுன்னு விழுந்துக்கிட்டே இருக்காதே! அது பாவம் வெக்கிச்சுப் போயுடுது!"

"அடி ஆத்தே!" தைலம்மாள் கையைத் தட்டிக் கன்னத்தில் வைத்துக் கொண்டாள். "என்னடா தம்பி, அப்படி வெடு - வெடுன்னு பேசிட்டேன், உன் மகள் வெக்கிச்சுப் போகும்படியா?"

"ஆமாம், தூங்கி எழுந்து வந்த பெண்ணுக்கு, இப்போ செய்தியே இதைவிடப் பெரிய அர்ச்சனை வேறே இருக்குதா?"

"கேட்டீங்களா, தானுவதித் தம்பி. நான் என்னவோ இவன் மகளைத் திட்டிப் போட்ட கணக்கிலே இல்லா பேசுறுன்; அது வாழாமப் போன பொண்ணு. கிராமத்துக்கு ஏற்றபடி நடந்துக்கிடணு மின்னு நான் சொல்லாம வேறே யாருடா தம்பி சொல்லுவாங்க?"

"நீ சொல்லு, அக்கா. ஆனல் அதற்குச் சமய சந்தர்ப்பம் வேண்டாமா? இப்படியா எழுந்து வந்த உடனே வெளி ஆளை வைச்சுக்கிட்டு அர்ச்சனை பண்ணுறது! அவள் வயசான பெண் இல்லையா? படிச்ச பெண் இல்லையா?"

தானுவந் குறுக்கிட்டான். "மாமா! சரியாப் போச்சு போங்க. என்ன மாமா இது. நீங்க என்னைப் போய் வெளி ஆளாக்கிட்டீங்க!"

சச்சிதானந்தமும் தமது மன வருத்தத்தில் சமய சந்தர்ப்பம் அறியாமல்தான்



பம்பாய் திரு டி. கே. ராமசுப்பிரமணியம் அவர்களின் புதல்வி சௌ. லீலாவுக்கும் திரு என். பாலசுப்பிரமணியன் பி. இ.க்கும் அதி விமரிசையாக விவாகம் நடந்தது.



வலிவலம் கல்கி ஏஜண்ட் திரு திருவேங்கடத்துக்கும் திரு வைத்திலிங்க செட்டியாரின் புதல்வி சௌ. ஜயாவுக்கும் திருவாரூரில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.



லயோலா கல்லூரி ஆசிரியர் திரு ஜாயிஸ் அவர்களின் சகோதரர் திரு பி. டி. அந்தோணி ராஜா திருமதி ஸ்டெல்லா சாந்தாவை மணம் புரிந்து கொண்டார்.



பம்பாய் திரு பி. எஸ். கல்யாணகிருஷ்ணு அவர்களின் புதல்வி சௌ. சீதாவுக்கும் திரு கே. எஸ். கிருஷ்ணனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

பேசி விட்டார். தானுவதியின் முன்பே அவளை அந்நியனெனக் குறிப்பிட்டு விட்டார். ஆயினும் அவர் சமாளித்துக் கொண்டு, "உன்னைச் சொல்லலே தம்பி. நீதான் நம்ம ஆள் ஆச்சே! இன்னைக்கு நீ இருந்தாய்; சாயாப் போச்சு. நாளைக்கு இன்னொருத்தர் இருக்கும்போது இவள் இப்படிப் பேசினுல் வீணுவுக்கு எப்படி இருக்கும்?" என்ருர் சாதுர்யமாக.

"ஆமாம், அத்தை. மாமா சொல்றது சரிதான். நீங்க 'கண்டிசனு' இருங்க; வேண்டாம் என்கலே. ஆனு ஒங்க கண்டிசனையெல்லாம் நம்ம ஆட்கள் இருக்கும் போது வைச்சுக்கிடுங்க. ஏன் மாமா, நான் சொல்றது கெசந்தானே?"

"ஆமாம்; அதோடு அவள் வாழ்விழந்தவள் என்பதையும் நினைவிலே வைச்சுக்கோ, தைலம்மா! பெற்றவள் உயிரோடு இருந்தும் இருபத்து மூனு வருஷங்களாக இரவல் அன்பிலே காலந் தள்ளி விட்டு, சொந்தக்காரங்க அன்புக்கு ஏங்கி இங்கே வந்திருக்கிறவள் அக்கா, என் மகள். அவளிடம் உன்னுல் அன்பு காட்ட முடியவில்லேயென்ருல், காட்ட வேண்டாம். ஆனுல் அவளைத் துன்பப்படுத்தாதே, அக்கா! ஏங்கிக் கிடக்கும் அவள் மனசை சோகப் பண்ணுதே, அக்கா!" சச்சிதானந்தத்தால் தமது மன எழுச்சியை அடக்கிக்கொள்ள முடியவில்லே. அவர் கண்களில் நீர் முட்டிக் கொண்டு வந்தது.

"அடடா! இது என்ன மாமா அழுதுட்டுங்க; மனசைத் தேற்றிக்கிடுங்க, மாமா. அத்தைக்கு அவங்க மருமகள் மேலே பிரியமில்லேயா, என்ன?" என்று தானுவதி அவர் தோள்மீது கை வைத்துத் தேற்றினுன்.

"பார்த்துக் கிட்டீங்களா, தானுவதித் தம்பி. இப்போ நான் இவள் மகளை என்ன சொல்விட்டேன்னு இப்படி அழுருன்? எனக்கு வேண்டியது தாண்டா தம்பி, வேண்டியதுதான். இனிமே நான் ஒன் மகள் பேச்சை எடுத்தா என்னு கேளு" என்ருள் தைலம்மாள்.



பம்பாய் பார்க்டேவிஸ் கம்பெனியின் உதவி ஜெனரல் மானேஜர் திரு ஆர். நாராயண ஐயரின் புதல்வி சௌ. சாரதாவுக்கும் திரு சுப்பிரமணியனுக்கும் விவாகம் நடந்தது.



திரு ஏ. வி. கிருஷ்ணசாமி ஐயரின் புதல்வன் திரு ரங்கநாதனுக்கும் சௌ. சாவித்திரிக்கும் திருமணம் திருக்கோளம்பூதூரில் வெகு சிறப்பாக நடைபெற்றது.



பாம்பே ஸ்டோர்ஸைச் சேர்ந்த திரு வி.துரை பி. இ., எஸ். டி. உதவி என்ஜினியர் திரு என். வீரராகவனின் புதல்வி சௌ. பத்மாவை மணம் புரிந்து கொண்டார்.



பெரம்பூர் இண்டக்ரல் கோச் பாக்டரி சிப்புராகரன் இன்ஸ்பெக்டர் திரு பி. பிச்சாண்டி அய்யர் அவர்களின் புதல்வர் திரு சங்கரனுக்கும் சௌ. சரஸ்வதிக்கும் திருமணம் நடந்தது.

"என்ன இது அக்காளும் தம்பியும் சண்டை போட்டுக்கிட்டு இருக்கிறீங்க?" என்று வாசலில் ஒரு குரல் கேட்டது. கூடத்திலிருந்த மூவரும் திரும்பிப் பார்த்தனர். புஷ்பவனம் பிள்ளை முறுவலித்தவாறு உள்ளே வந்து கொண்டிருந்தார்.

"வாங்க தம்பி; உட்காருங்க" என்று அவரை வரவேற்றார் சச்சிதானந்தம். தைலம்மாள் உள்ளே சென்றாள்.

"தானாவதித் தம்பி எங்கே வந்துச்சு?" என்று ஊஞ்சலில் அமர்ந்ததும் புஷ்பவனம் கேட்டார்.

"மாமா! இனிமே இந்தச் சிங்கம் சச்சிதானந்த மாமா வீட்டுக்கு வந்திச்சுன்னு ஏன் வந்திச்சுன்னு கேட்காதீங்க. மாமா மகள் டாக்டருக்குப் படிச்சுப் போட்டு வந்திருக்கிறாங்க. நம்ம ஊரிலே ஆசுபத்திரி வைக்கப் போறாங்க. அந்த வேலையெல்லாம் நான் கவனிக்காம வேறே யாரு மாமா கவனிப்பாங்க? ஏன் சச்சிதானந்த மாமா, நான் சொல்றது நெசந்தானே?"

"வீணாவின் ஆஸ்பத்திரிச் சாமான்கள் வந்துடிச்சாம் தம்பி. தானாவதி நேற்று ஸ்டேஷனுக்குப் போயிருந்தானாம். முருகேச முதலியார் செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறார்."

"அப்படியா? வந்துடிச்சாமா? அப்போ ஆஸ்பத்திரியைத் தொடங்க நாள் பார்த்துட வேண்டியதுதான்" என்று கூறிய புஷ்பவனம், தானாவதியை நோக்கி, "தம்பி! நீ வீட்டுக்குத்தானே போறே? வழியிலே நம்ப அம்பலவாணக் குருக்கள் வீட்டிலே இருந்தா, பஞ்சாங்கத்தை எடுத்துக்கிட்டுச் சித்தே இங்கே வரச் சொல்றியா?" என்றார்.

"எதுக்கு, மாமா? ஆசுபத்திரி தொடங்க நாள் பார்க்கத்தானே? அப்படீன்னா சொல்றது என்ன? இப்பவே போய்க் கையோட இழுத்துக்கிட்டு வந்துடறேன்." தானாவதி வேகமாக ஊஞ்சலிலிருந்து எழுந்து சென்றான்.

அவன் போன பிறகு புஷ்பவனம் சச்சிதானந்தத்தை வெகுவாகக் கோபித்துக் கொண்டார். "என்ன அத்தான்! கொஞ்சங்கூட விஷயம் தெரியாதவரா இருக்கிறீங்க நீங்க? சின்னப் பொண்ணுங்க இருக்கிற வீட்டிலே இந்த விடலையைக் கூப்பிட்டு வைச்சுக்கிட்டு என்ன பேச்சு வேண்டிக் கிடக்குது!"

"நான் அவனைக் கூப்பிடலே, தம்பி. அவனாக இல்லே. 'குட்சி'லே சாமான் வந்திருக்கிறதைச் சொல்லி விட்டுப் போக வந்தான்!"

"சரி, வந்தாச்சு; சொல்லியாச்சுன்னு வாலிலே ஓலையைக் கட்டி விரட்டிட வேண்டாம்? இதைப் பாருங்க, அத்தான். இந்தத் தானாவதிக்குக் குல்லாப்போட்டுக்கிட்டிருக்கிற வேலையை இனிமேல் ஏட்டைக் கட்டி வைச்சுடுங்க. ஒண்ணுக்கு ரெண்டு சின்னப் பொண்கள் ஆயிடுத்து வீட்டிலே; நினைப்பிருக்கட்டும். அது தான் போகட்டும். அவனை வைச்சுக்கிட்டுத்தானா நீங்க அக்காளும் தம்பியும் சண்டை போட்டுக்கிட்டு இருக்கணும்?"

"சண்டை ஒண்ணும் இல்லே, தம்பி! என்னவோ ஆற்றாமல் வந்தது; ரெண்டு வார்த்தை பேசி விட்டேன்!" சச்சிதானந்தத்தின் முகத்தை மீண்டும் துயர் வந்து மூடியது.

"என்னங்க சங்கதி?"

"தைலம்மாள் வீணாவைக் காணவொட்டாமல் கரிக்கிறாள், தம்பி. நேற்று அவள் வந்தது முதல் தேள் கொட்டறாப் போல் கொட்டிக்கிட்டே இருக்கிறாள்!"

"தைலம்மாதானே? அவள் யாரைத் தான் கொட்டாமல் விட்டுவச்சிருக்கிறா?"

"எதுக்கும் ஒரு கணக்கு வேண்டாமா, தம்பி. வீணா வீடு வாசலுக்குத் தவிச்சுப் போய் வந்திருக்கிறாள். வார்த்தைக்கு வார்த்தை அவளை 'அறுத்தவள்—அறுத்தவள்' என்று சுட்டிக் காட்டிக் கொண்டே இருந்தால்...?"

"அது இந்தக் கிராமாந்தரத்திலே வழக்கந்தானே, அத்தான். தைலம்மா மட்டுமென்ன? எந்தப் பெண் பிள்ளைதான் 'ஆகாமப் போன' பெண்களைப் பெண்களாக மதிக்கிறாங்க. 'இங்கே அப்படித்தான் பேசுவாங்க; அதையெல்லாம் காதிலே போட்டுக்கிட்டு வருத்தப் படாதே'ன்னு வீணா கிட்டே சொல்லி வையுங்க. ஆமாம், அவள் எங்கே, காணோம்?"

"பல் விளக்கிக் குளிக்கக் கொல்லைக் கிணற்றடிக்குப் போயிருக்கிறாள். நம்ம சுந்தரங்கூட அவளும் இன்னைக்குப் புங்கனூற்றுக் காலனிக்குப் புறப்பட்டுக்கிட்டிருக்கிறாள், தம்பி. சீப் இன்ஜினீயரைப் பார்க்கணுமாம்; டிஸ்பென்சரி தொடங்குகிற விஷயத்தைச் சொல்லணுமாம்; காலனியிலே வசதியான இடம் பிடிக்கணுமாம். போயிட்டு வரட்டும். அவள் வேலையை அவளே பார்த்துக்கிட்டா நமக்கு நல்லதுதானே."

"ஆமாம்; நேற்று நான் இருக்கும் போதுதான் சுந்தரமும் அவளும் பேசி முடிவு செய்தாங்க. ஆனால் இன்னைக்கு வீணாவைக் கூட்டிக்கிட்டுப் புங்கனூற்றுக் காலனிக்குப் போக வேண்டாம் என்று சுந்தரத்தின் அம்மா சொல்கிறாள்."

"ஏன், தம்பி? வீணா ராத்திரி முதலே பறந்துக்கிட்டிருக்காளே!"

"அதுதான் சொன்னேனே, அத்தான் நம்ம கிராமத்துப் பெண் பிள்ளைகளின் போக்கே மோசமின்னு."

"எனக்கு விளங்க வில்லையே!"

"அதென்னமோ முதல் முதலிலே வேலை ஒப்புக் கொள்ளப் போறானாம்; அப்போ வாழாத பெண் ஒருத்தியைக் கூட்டிக்கிட்டுப் போகக் கூடாதாம்!"

"என்ன?"

இந்த வார்த்தையைச் சச்சிதானந்தம் கூறவில்லை. குளித்து விட்டு வந்து தாழ்வாரத்தில் ஈரத் தலையை ஆறப் போட்டவாறு இவர்கள் உரையாடலின் இறுதிப் பகுதியைக் கேட்டு நின்ற வீணாவின் உள்ளந்தான் கூறிற்று! (தொடரும்)

# எச்சரிக்கை!

உங்கள் குழந்தையின் இன்றைய

ஜலதோஷம் நாளை ப்ளு பிராங்கைடிஸ்

அல்லது நிமோனியாவாக மாறலாம்

கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உங்கள் குழந்தையின் சளி உபாதைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பெற்ற இந்த சக்திவாய்ந்த மருந்தைத் தடவுங்கள்.

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விஷப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை—தோன்றின உடனே விக்ஸ் வேப்போரப்பை அவனது மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உங்கள் சிறுவன் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் அவன் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுகிறான்.

விக்ஸ் வேப்போரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்

**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப் வெளிவிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகளே, மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளியையும் வலியையும் நீக்க, உங்கள் குழந்தை சுவாசிக்கிறான்.

**2** சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.



விக்ஸ்வேப்போரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் உங்கள் குழந்தையின் மார்பகத்தில் அடைப்பை உடைத்தெறிந்து உங்கள் சிறுவன் துரிதமாக குணமடைகிறான்

புதிய பச்சை டப்பி




பெரிய நீல ஜாடி




# விக்ஸ் வேப்போரப்

மார்பிலும், தொண்டையிலும் முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது.

VR. 5

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 108. சூலைக்குச் சித்தர் அருளியது

கல்யாணக்ஷாரம் ரொம்ப நல்ல மருந்துதான். பரிணாம சூலையில் நிச்சயமாகவும் பலனளிப்பதுதான். செய்து கொள்வது சற்றுச் சிரமமானதால், இதைவிடச் சுலபமான ஒன்றிரண்டு முறைகளைத் தெரிவிக்க வேணுமல்லவா?

தனித்த திப்பிலியின் சூரணத்தில் இரண்டு மூன்று சிட்டிகையளவைச் சிறிது தேன் விட்டுக் குழைத்துக் காலை மாலை சாப்பிட்டு வந்தால் பரிணாம சூலை குணமாகும்.

பாஸ்கரலவணத்தை மட்டும் தனியாகவோ அல்லது சிறிது வராடிகா [சோழி] பஸ்மத்துடனோ நெய்விட்டுக் குழைத்துச் சாப்பிட்டு வருவதும் சிலருக்குப் பரிணாமசூலையில் பலனை யளிக்கிறது.

இனி தமிழ் நூல்களின் வாயிலாகச் சித்தர் அருளிய முறைகளில் சிலவற்றையும் தெரிவிக்கிறேன்.

1. அக்கரகாராதி சூர்ணம்:—அக்கரகாரம், சுக்கு, திப்பிலி, செஞ்சந்தனம், கிராம்பு, ஜாதிக்காய், குங்குமப்பூ, இவைகளின் பொடி வகைக்கு ஒரு பங்கு. [கிடைக்குமானால்] அபினி அரைப்பங்கு. இவற்றின் மொத்த எடைக்குச் சமம் சர்க்கரை. இவற்றை ஒன்றாகக் கலந்து இரண்டு-நாலு குன்றியளவு காலை மாலை வெந்நீருடன் உட்கொண்டுவர சாதாரணமான எல்லா வயிற்று வலிகளும் குணமாகும். நரம்புத் தளர்ச்சியும் போகும்.

2. ஆடுதீண்டாப்பாளை என்பது ஒரு பூண்டு இனத்தைச் சேர்ந்த தாவரப் பொருள். இதன் இலை சாம்பல் நிறமாக இருக்கும். தாவரப் பொருள்களில் இதொன்றை மட்டும் வெள்ளாடு தின்னாது. இதன் விதைகளைப் பொடித்தெடுத்ததில் ஒரு சிட்டிகை யளவை இரண்டு மூன்று டீஸ்பூன் ஆமணக்கெண்ணெயுடன் கலந்து கொடுக்கக் கிருமியினால் [முக்கியமாகவும் அடி வயிற்றில்] உண்டாகும் வலி முதலியவை குணமாகும். கிருமிகளும் போகும்.

3. மலக்கட்டுடன் கூடிய வயிற்றுவலியுள்ளக்கால், வயிற்றின் மேலே ஆமணக்கெண்ணெயைத் தடவி, அதன்மேல் சிற்றாமணக்கு இலைகளை வதக்கிப் போட்டு வர. அவை தீரும்.

"வாதத் தொடக்கை வரவொட்டாமற் படிக்குக்
காதத்துக் கப்பாற் கடியுமே..."

என்று தேரையர் சொல்வதிலுள்ள உறுதியைக் கவனிக்கவும்.

4. ஆமணக்கின் வேரைக் குடிநீர் செய்து, அதில் சிறிது பூநீறு சேர்த்துக் காலை மாலை இரு வேளையாக—3-5 நாட்கள் சேவிக்கப் பக்க சூலை குணமாகும்.

5. ஆமணக்கு வித்தின் பருப்பை ஒன்றிரண்டாகப் பொடித்து, சட்டியிலிட்டு வதக்கிச் சீலையில் முடிந்து ஒத்தடங் கொடுக்க வயிற்று வலி, நீரடைப்பு, பக்க வலி முதலியவைகள் குணமாகும்.

6. இலவங்கப்பட்டை, சோம்பு, சுக்கு, வாயுவிடங்கம், கிராம்பு இவற்றைச் சம எடையில் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் வேளைக்கு ½ முதல் 1 அவுன்ஸ் என்று தினம் 2—3 வேளை கொடுக்க வயிற்றுவலி, குன்மம், சூலை முதலியவை குணமாகிவிடும்.

7. ஏலாதிசூர்ணம் :— ஏலம், அதிமதுரம், நெல்லிமுள்ளி, சந்தனம், வால்மிளகு இவற்றின் தனித்தனி பொடி வகைக்கு ஒரு பலம். இத்துடன் இரண்டரைப் பலம் சர்க்கரையுஞ் சேர்த்துக் கலந்து எடுத்து வைத்திருந்து வேளைக்கு 3 - 4 சிட்டிகை வீதம் வெந்நீரில் கொடுக்க அஜீர்ணத்துடன் கூடிய வயிற்று வலி—பக்கசூலை ஆகியவை தீரும்.

8. மற்றொரு ஏலாதி சூர்ணம் :— ஏலரிசி, சுக்கு, இலவங்கம், ஜீரகம் இவற்றை ஒரெடையாக எடுத்துப் பொடித்துச் சலித்ததில் வேளைக்கு 2-3 சிட்டிகையளவாகத் தினம் 2 வேளை வெந்நீர் அநுபானத்தில் கொடுத்து வர, சாதாரண [அஜுமதேய] வயிற்றுவலி முதல் குன்மம் குன்மசூலை ஆகியவை வரை குணமாகும்.

9 கஸ்தூரி மஞ்சளைச் சூர்ணஞ் செய்து ஒன்றிரண்டு சிட்டிகையளவாகத் தினம் 2 வேளை வெந்நீருடன் கொடுத்து வர, இன்ன காரணமென்று குறிப்பிட்டுச் சொல்லமுடியாத அடிக்கடி வரும் வயிற்றுவலி, சூலை, குன்மம் ஆகியவை நீங்கும்.

10. கர்ப்பூரப் புல் என்பதை சம்பாரப் புல் என்பர். கசக்கி முகர்ந்தால் எலுமிச்சையின் மணம் கமழும். இதன் நறுமணத்துக்காக அநேகர் இதைத் தோட்டங்களில் வைத்துப் பயிரிடுவார்கள். இதற்கு வாசனைப்புல் என்றும் ஒரு பெயருண்டு.

இதன் இலையை முறைப்படி கஷாயம் வைத்து ஒன்று இரண்டு உச்சிக்கரண்டி [வயதுக்குத் தக்கபடி] தனித்தோ சிறிது சீனி கற்கண்டின் பொடியுங் கரைத்தோ கொடுக்க வயிற்றுவலி, வாதசூலம் முதலியவை உடனே சமனமாகும்.

முக்கியமாகக் குழந்தைகளுக்கு வயிற்றில் வாயு சேர்ந்து கொள்வதால் குடலே முறுக்கிப் புரட்டுவது போல் ஒரு வலியுண்டாகும். கையில் காலில் நிற்காமல் குழந்தை அழுது அழுது துடிதுடித்துப் போகும். இதைப் "புரளி வாயு" அல்லது "பிரளி வாயு" என்று சாதாரணமாகச் சொல்லுவார்கள். இந்த வாத சூலத்தில் இச்சம்பாரப் புல்லின் கஷாயம் மிகவும் பலனளித்து உடனே வலியைச் சமனப்படுத்தும்.

11. முள்ளிக்கீரை என்ற முள்ளுக் கீரையின் வேர், ஓமம், ஒரு பல் பூண்டு சேர்த்து அரைத்த விழுதில் கச்சைக் காயளவு வெந்நீர் அனுபானத்துடன் கொடுக்க மேற்சொன்ன இனத்தைச் சேர்ந்த வாதசூலம் சமிக்கும். ஆனால் இதை முதியவருக்குத்தான் கொடுக்கலாம்.

12. சோம்பு என்று சிலர் சமையலில் உபயோகிக்கும் பொருளைப் பெருஞ் சீரகம் என்றும் அழைப்பர். இதன் விதையைத்தான் மேற்சொன்னது போல் சமையலில் கூட்டுகின்றனர். இவ்விதையும், இதன் பூ, இச் செடியின் வேர் ஆகியவையுங்கூட மருந்தாக உபயோகமாகின்றன.

பெருஞ் சீரகத்தின் கஷாயத்தையோ, அல்லது அதனின்றும் எடுத்த அர்க்கம் என்னும் நீரையோ கொடுத்தால் 'இன்டஸ்டைனல் காலிக்' என்னும் 'பிரளிவாயு' உடனே சமனமாகும்.

13. இதன் நீரின்மேல் படிந்திருக்கும் எண்ணெயைப் பிரித்து எடுத்து ஒன்றிரண்டு துளிகளைச் சர்க்கரையுடன் சேர்த்துச் சாப்பிட்டு மேலே சிறிது வெந்நீர் குடித்தாலும் மேற்சொன்ன பிரளிவாயு உடனே சமிக்கும். ஆனால் இதைக் குழந்தைகளுக்குக் கொடுக்கக் கூடாது.

14. சோம்புச் செடியின் பூவிலிருந்தும் நீர் எடுப்பதுண்டு. குழந்தைகளுக்கு ஏற்படும் பிரளிவாயு என்னும் வாதசூலையில் இதைக் கொடுக்கலாம். வாரம் ஒரு முறை அல்லது இரண்டு முறை இந்தத் நீரை குழந்தையின் வயதுக்குத் தக்கபடி ஐந்து பத்து துளி முதல் ஒன்று இரண்டு டீஸ்பூன் வரையில்—சிறிது தண்ணீருடன் கலந்து புகட்டிவர, இந்தப் பிரளி வாயுவே உண்டாகாது. ஜீரண கோசம் சரிவர வேலை செய்யும். பாலைக் குடித்துத் தயிராக வாந்தி பண்ணுவது மாறும்.

சி ரி க் கா தே

இதுதான் நெருப்புப் பெட்டி. இதைத் திறந்தால் தலைப்பக்கம் மருந்தைத் தோய்த்த பல குச்சிகள் இருக்கும். குச்சியை எடுத்துப் பெட்டியின் பக்கவாட்டில் இருக்கும் கறுப்புப் பாகத்தில் தேய்த்தால் நெருப்பு உண்டாகும். (குறிப்பு) தீயணைக்கும் படையின் போன் நம்பர்: 99

— கல்யாணமான காலேஜ் மாணவிக்கு எச்சரிக்கை

## வெள்ளெழுத்தாளர்!

"அவர் ஒரு எழுத்தாளர் என்று அவர் முகத்திலேயே எழுதி இருக்கே! உங்களுக்குத் தெரியவில்லையா?"

"எனக்கு வெள்ளெழுத்து. அதனால் படிச்சென்று தெரியவில்லே!"

## தோல் கண்டார்...

'எவியன் பிடித்த வாழைப்பழத் தோல் இப்படியா வழியிலே கிடக்கணும்!' என்று சொன்னார் ரோடில் வழுக்கி விழுந்தவர். அதைப் பார்த்த சிறுவன்: 'என்ன மாமா ரோட்டில் படுத்துண்டு வாழைப்பழத் தோலுடன் பேசிண்டிருக்கேள்!'

## திருட்டு நம்பிக்கை!

"இந்தத் திருட்டை நீயே செய்தாயா? இல்லே, உன்னுடைய தோழனுடன் சேர்ந்து செய்தாயா?"

"தோழனா! இந்தக் காலத்திலே யாரையும் தோழன்னு நம்பறத்துக்கில்லேங்க! நானேதான் செய்தேன்!"

## புத்தக வைத்தியம்

"இவர் வைத்தியப் புஸ்தகத்தையே கரைத்துக் குடித்தவர் சார்!"

"சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற காலத்திலேயா?"

## கொக்கரக்கோ!

"நீண்ட பிரச்னைகளை நீங்கள் சமாளிக்க வேண்டும். இது தூங்கும் நேரம் இல்லே... தூங்காதீர்கள்...' அட்வீல்ட்' என் பிரசங்கத்தின் போதாவது நீங்கள் தூங்காமல் இருங்கள்!"

## பலே ரசிகர்கள்!

"இந்த மோசமான நாடகத்தை நீங்கள் கைதட்டி நடிகர்களை உற்சாகப் படுத்துகிறீர்களே!"

"நாங்கள் கைதட்டுவது எங்களை உற்சாகப்படுத்திக் கொள்ளத்தான். இல்லாவிட்டால் தூக்கம் வந்துவிடுகிறதே சார்!"

வியக்கத்தக்க
நீளமான
செழிப்பான
கூந்தல்



ரோமா

கூந்தல் வளர்க்கும் டானிக்

தயாரிப்பாளர்கள்:





நண்பர் ஒரு நல்ல செய்தி
யைச் சொன்னார். அடிக்
கடி எப்ரிலைம் உட்
கொள்வதால், அவர்
ஆஸ்த்மா உபாதையால்

# EPHRILIME
## எப்ரிலைம்



நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

---

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**

மதராஸ் டிப்போ :

2. ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

---



புத்தம் புதிய நறுமணம் நிறைந்த **டீரோஸ்** டாய்லெட் ஸோப்பைக் கொண்டு உங்கள் மேனியை அழகுடனும் ஆரோக்கியத்துடனும் மிளிரச் செய்யுங்கள்.

டீரோஸ் டாய்லெட் ஸோப்பில் குளோரோபில் சேர்க்கப்பட்டிருக்கிறது.




பாம்பே சோப் பாக்டரியின்
தயாரிப்பு

PSRSF—3/59

விநியோகஸ்தர்கள்

மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ., (இந்தியா) லிமிடெட்
3/21, முதல் லைன் பீச், சென்னை-1

மெஸர்ஸ் ஏ. வி. தாமஸ் & கோ., லிமிடெட், கொச்சின்-8

---



# விசித்திர மகிமா

மஹரி

விசித்திரப் பெண்! ஆம்! எல்லோரும் என்னை அப்படித்தான் அழைக்கிறார்கள். நான் என்ன அப்படி விசித்திரமானவளோ, தெரியவில்லை. எல்லாப் பெண்களையும் போலவேதான் நான் இருக்கிறேன். நடை உடை பாவனையில் ஏதும் மாறுதலோ விசித்திரமோ இல்லை. எல்லாப் பெண்களையும் போலவேதான் என்னையும் கடவுள் படைத்திருக்கிறார். இரண்டு தலைகளோ, மூன்று கண்களோ, நாலு கால்களோ எனக்கு இல்லை; ஆனாலும் ஏன் எல்லோருமாகச் சேர்ந்து கொண்டு, "விசித்திரப் பெண்ணடி நீ" என்று என்னைக் கரித்துக் கொட்டுகிறார்களோ, தெரியவில்லை!

பள்ளிக்கூடத்தில் படிக்கும் நாட்களிலும்கூட சக மாணவிகள் இப்படித்தான் "மகிமா! நீ விசித்திரப் பெண்ணடி!" என்பார்கள். அவர்களிடம் போய், "நான் என்னடி உங்களை யெல்லாம் விட விசித்திரமாக இருக்கிறேன்?" என்று கேட்பேன்.

"பின்னே என்னடி! எங்கள் 'வ்யூ'வுக்குப் பொருந்தாத பேச்சுக்கள் தானேடி நீ பேசுகிறாய்? 'காலேஜ் லைப்'லே இருக்க வேண்டிய 'ஜாலி' 'இன்டிபென்டன்ஸ்' உன்னிடம் இல்லையேடி! ஏதோ புராண கால நளாயினி, தமயந்தி, மாதிரின்னா பேசுகிறாய். நீ நூறு வருஷங்கள் பிந்திப் பிறந்து விட்டாய்!" என்று பதிலளிப்பார்கள் அவர்கள்.

"காலேஜ் படிப்பு என்றால், நமது பாரதப் பண்புகளை மறந்து விட்டு விடுவதா? நாம் பாரதப் பெண்கள். கல்வி உங்களையெல்லாம் இப்படித் தான்தோன்றியாக இருக்கச் சொல்லிக் கொடுக்கிறதோ?" என்பேன்.

"தான்தோன்றி என்னடி.. நமக்குச் சுதந்திரம் வேண்டாமா? எத்தனை நாட்களுக்குத்தான் ஆணடிமையாக இருப்பது? 'சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே' என்று பாரதி பாடிப் புதுமைப் பெண்ணைத் தட்டி எழுப்பவில்லையா? நீ மட்டும் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தால்...."

"அடி, பைத்தியமே! பாரதியை நீ புரிந்து கொள்ளவில்லையடி."

"அடேடே! நீதான் பாரதியிடம் போய் நேராக 'டியூஷன்' எடுத்துக் கொண்டிருக்கிறாயாக்கும். 'சரி நிகர் சமானம்' என்று சொல்லிக் கொண்டு ஆண்பிள்ளைகளுடன் கூச்சமின்றிப் பேசிவிட்டு, அந்த ஆண்பிள்ளைகளின் சாகஸத்தில் ஏமாந்து, ஏதாவது காதல், கீதல் என்று பண்ணித் தொலைத்துவிட்டு, அதன் விளைவையெல்லாம் சுமக்க வேண்டுமாக்கும்."

"அப்படியானால் நீ காதலே செய்ய மாட்டாயா? போடி போ! அபிஷ்டு! நீ பத்தாம் பசலி மனுஷிதான். தவறிப் போய் இருபதாம் நூற்றாண்டில் வந்து பிறந்து விட்டாய்."

"அப்பிடியானா ஊர் மாவையெல்லாம் பூசிக்கிட்டு, உதட்டைக் கிள்ளி விட்டுக் கிட்டாப்பலே ஏதோ தடவிக்கிட்டால்தான் காலேஜ் படிப்பு மூளையில் ஏறுமா, என்ன?"

"மகிமா! நீ விசித்திரப் பெண்ணடி! உன்னுடன் ஏன் அநாவசியமான வாக்குவாதம்? எப்படியோ போ, உன் இஷ்டம்" என்று அவர்கள் விலகிவிடுவார்கள். என்னிடம் என்ன விசித்திரத்தைக் கண்டு விட்டார்களோ?

* * *

இன்று காலையிலும் அப்படித்தான் சொன்னான், அண்ணா! நான் விசித்திரமாக என்ன சொல்லி விட்டேனாம்? நேற்று பம்பாயிலிருந்து அத்தான் கடிதம் போட்டிருந்தான். அதில் அவன் இன்று காலையில் சென்னைக்கு வந்து சேரும் வண்டியில் வருவதாகக் கண்டிருந்தான். காலையில் எட்டு மணிக்கு வண்டி வருவதாக எனக்கு ஞாபகம். "என்ன அண்ணா! மணி எட்டாயிடுத்தே" என்றேன்.

---

மகிமா விசித்திரப் பெண். ஆம்! அனைவரும் அப்படியே அபிப்பிராயப்பட்டனர். அவள் உள்ளமும் விசித்திரமாகத்தானிருந்தது!

"ஏன்? எட்டாயிட்டால் என்ன பண்ணணும்ங்கறே?" என்றான்.

"பம்பாய் வண்டி எட்டு மணிக்குத் தானே வர்றது?" என்றேன். நான் இதைச் சகஜ பாவத்தில்தான் சொன்னேன். இதில் என்ன விசித்திரத்தைக் கண்டு விட்டானோ? விழுந்து விழுந்து சிரித்துவிட்டு! "மகிமா! நீ விசித்திரப் பெண்ணடி!" என்றான்.

மேலும் அண்ணா சொல்கிறான்:

மகிமா ஒரு விசித்திரப் பெண். எத்தனை கரிசனம் வந்துவிட்டது. அத்தான் வருகிறானும். எதிர் கொண்டழைக்க நான் ஸ்டேஷனுக்குப் போக வேண்டுமாம். அப்படி என்ன அந்த ராகவ அத்தான் மகிமாவுடன் சிநேகமாக இருந்தது பாழாய்ப் போகிறது? போன வருஷம் இங்கே வந்திருந்தபொழுது அவனை அழ அழ வைத்து அனுப்பினாள். அவனை அசடு, பைத்தியம், கோழை, நாகரிகம் தெரியாதவன் என்றெல்லாம் கேலி செய்தாள். அவனுடன் பேசும் சந்தர்ப்பங்களில் எல்லாம் அவனை நையாண்டி செய்வதைத் தவிர வேறு அறிய மாட்டாள். அவன் பேசுவதற்கெல்லாம் நொடிப்பு. எல்லாவற்றுக்கும் கேலி. "அத்தான்! நீ தப்பிப் பொறந்துட்டேப்பா. போன நூற்றாண்டிலே, இல்லே...அதற்கும் முந்தி ஏதாவது ரிஷி ஆசிரமத்துலே சிஷ்யன் 'வாண்டெட்' போட்டிருந்தா அதுக்கு 'அப்ளை' பண்ண வேண்டியவன், இப்படி நிக்கிறியே இந்த அணு யுகத்திலே!" என்பாள்.

அப்படிப்பட்டவள் இப்போது 'ராகவ அத்தான் இன்று வருகிறார். வண்டிக்கே போய் எதிர்கொண்டழைத்து வா' என்று சொல்லுகிறாளே! ஏதோ அத்தானிடம் அன்பாக உள்ளவள் மாதிரி! வந்தால் வீட்டுக்கு வர வழி தெரியாதா அவனுக்கு? இல்லை, அப்படி வந்தவனை நொடிக்காமல் இன்முகம் காட்டி வரவேற்றுவிடப் போகிறாளா? என்ன இத்தனை கரிசனம்? இவள் விசித்திரப் பெண்தான்!

* * *

"விசித்திரப் பெண்" என்று என் அண்ணா மட்டுமா சொன்னான்? போன வருஷம் ராகவ அத்தான் ஊருக்குப் புறப்படும் போதும் அப்படித்தான் சொன்னார். அன்றைய விவாதத்தில் நான் கொஞ்சம் 'சீரியஸா'கத்தான் பேசினேன். உடம்புக்குச் சரியில்லாததினால் பரீட்சை தவறி விட்டது, பாவம்! அக்டோபரில் பரீட்சை எழுதித் தபால் மூலம் படிக்க முயன்றார். அதைப் பிடித்துக் கொண்டு நான் குடைந்து குடைந்து கேலி செய்தேன். ராகவ



அத்தான் பாவம், அழுதே விட்டார்! அப்புறம் என்னைத் தனியாகப்பார்த்து, "என்ன மகிமா! என்னை உனக்குப் பிடிக்கவில்லை போலிருக்கு. நான் உனக்காகத்தான் லீவில் ஊருக்கு வருகிறேன்.



அன்பு என்பதை அறியாமல் வளர்ந்துவிட்ட எனக்கு உன் முகம் சற்று ஆறுதலாக இருக்கிறது என்று எண்ணி உன் கருணைவிழிக்குக் காத்திருந்தால் நீ கேலி செய்தே என்னைக் கொன்று விடுகிறாய். அப்படியும் சளைக்காமல் நான் சமாளித்துக் கொண்டு மீண்டும் மீண்டும் உன்னிடம் வந்து அண்டுகிறேன். நீ உதறுகிறாய். இதோ அக்டோபர் எழுதிவிட்டுப் பம்பாய்க்குப் போய் விடுவேன். பிறகு வருஷா வருஷம் இங்கே வரமாட்டேன்" என்று சொன்னார். எனக்கு அப்போது ஒன்றும் பதில் சொல்லத் தெரியவில்லை. 'அசட்டு அத்தான்!' என்று மட்டும் மனத்துள் எண்ணிக் கொண்டேன்.

மாமன் மகளாகப் பிறந்து விட்டால் உடனே 'அவள் உன் மனைவியடா!' என்று ஊரார் கேலி செய்து பிராணனை வாங்கும் வழக்கத்தைக் கண்டு அதற்காகவே ராகவ அத்தானைக் கேலி செய்து செய்து பழகிக் கொண்டேன். இந்த விவாதத்தைப் பார்த்தாகிலும் யாரும் எங்களைச் சேர்த்துப் பேச மாட்டார்கள் இல்லையா? தவிரவும் என் வாய்த் துடுக்குக்கு ஈடு கொடுக்காமல் ராகவன் பணிந்து சென்றது என் முதுகை நிமிர்த்தி விட்டது. நான் அவரிடம் ரொம்ப ரொம்ப உரிமை கொண்டாடிவிட்டேன். கடைசியில் ராகவ அத்தான் உண்மையைச் சொன்னவுடன் நான் அயர்ந்து விட்டேன். என்னிடம் அன்பை எதிர்பார்த்துக் கொண்டுதான் என் கேலிகளைச் சகித்துக் கொண்டிருக்கிறார் அவர்.

இதன் மேலும் நான் அவரைக் கேலி செய்தால் இது என் அறியாமைதானே? நான் இன்னும் சிறு பிள்ளையல்லவே! அதன் பின்னர் நான் கேலி செய்வதில்லை என்று பிரதிக்ஞை செய்து கொண்டேன். நானாகச் செய்து கொண்ட பிரதிக்ஞை அவருக்கு எப்படித் தெரியும்? அவர் என்னைக் காணவே பயந்து ஊருக்குப் புறப்பட்டார். அம்மாவிடம் மட்டும், "மாமி! நான் இனிமேல் இங்கே அடிக்கடி வரமாட்டேன்" என்றார்.

"ஏன்டா, ராகவா! உன் மாமா பெண் இருக்கிறாள், நீ வராமல் இருக்க முடியுமோ? எப்பவும் வந்துகொண்டு தான் இருப்பே" என்றாள் அம்மா.

"இல்லே மாமி! மகிமா விசித்திரப் பெண்" என்று மட்டும் சொல்லி விட்டுப் போய்விட்டார்.

* * *

மாலையில் அப்பா வீட்டுக்குள் வரும் போதே, "ராகவன் இன்று ராத்திரி மெயிலுக்கே புறப்படுகிறான். ஏதாவது தருவதானால் சங்கரன்கிட்டே கொடுத்தனுப்பு" என்று அம்மாவிடம் சொன்னார்.

எனக்குச் 'சுருக்' என்றது. ராகவ அத்தான் நமது வீட்டுக்கே வரமாட்டாரா? அவருக்கு என்னைப் பிடிக்கவில்லையா? என் கேலிகளால் என்னை வெறுத்து விட்டாரா?

"வராமலேயே போகிறாரா?" நான் இரைந்தேசொல்லி விட்டிருக்கவேண்டும்.

"ஏதோ ஆபீஸ் வேலையாக வந்தானாம். ஹோட்டலிலே தங்கி இருக்கிறானாம். எனக்குப் போன் பண்ணினான். போயிருந்தேன்...ரொம்ப வருத்தப் பட்டுக் கொண்டான்!" என்றார் அப்பா.

நான் அங்கே நிற்கவில்லை...உள்ளே போய் நாற்காலியின் பின் சாய்வில் தலையைச் சாய்த்துக் கொண்டேன். எனக்கு

ஏன் அழுகை வருகிறது? அம்மாவும் அப்பாவும் பேசியது காதில் பட்டது.

"விசித்திரமான பெண். நாலுநாழி சிங்காரித்துக் கொண்டாள். நானும் ஒண்ணும் கேக்கல்லே. நீட்டி முழக்கிச் சிங்காரம் நடந்துது..."

"அத்தானுக்கு 'எக்ஸிபிட்' பண்ணவோ?" அப்பா சிரித்தார்.

"பின்னே இராதா! வயசு வந்துடுத்து. அத்தான் வர்றப்போ...என்ன பண்றதுன்னு...வேஷம் போட்டுக்கிண்டா... வரல்லேன்னதும் உள்ளே போயிட்டா. சின்ன வயசுலேருந்து..."

"பின்னே நீதான் என்னமோ நையாண்டி பண்ணறு. அப்படி இப்படின்னியே. இனிமேல் ராகவன் வர மாட்டேன்னு சொல்லிவிட்டுப் போனுன்னியே போன வருஷம் ..."

அப்பா சிரித்தார்...எனக்கு என்னவோ மாதிரி இருந்தது. இந்த அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நம்மைப் புரியவில்லையே!

இப்படியே போய் இந்த அப்பாவுக்கும் அம்மாவுக்கும் எதிரிலே நின்றுகொண்டு, 'இந்தாங்கோ உங்க மருமான் மகாராஜராஜ ஸ்ரீ ராகவப்பெருமாள் வரல்லேன்னு இந்த ஆண்டாள் அழவுமில்லே; வரப்போகிறார்னு இத்தனை அலங்காரம் பண்ணிக்கவும் இல்லே. வந்தா வந்துவிட்டுப் போகட்டும். இந்த வீட்டுக்கு வந்தால்கூட நான் நேரிலே வரமாட்டேன். அதான் உங்கள் பார்வையிலே நான் விசித்திரமான பெண்ணுயிற்றே!" என்று பொரிந்து கொட்ட வேண்டும் போல் இருந்தது. அடக்கிக் கொண்டேன். கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொண்டேன். இதென்னது? கன்னத்துப் பவுடரில் இரண்டு கோடுகள்! அழுதேனு...சை! நான் விசித்திரப் பெண்தான்!

"என்ன மகி; ஸ்டேஷனுக்கு வர்றியா? ராகவன் இன்று மெயில்லே போகிறுன்" என்றார் அப்பா.

ஊஹூம்.பேச்சுவரவில்லே. "போயிட்டு வாயேன்...இத்தனை அலங்காரமும் பாழாய்ப் போய்விடும்!" என்றுள் அம்மா கேலியாக.

"ஊஹூம் நான் வரல்லேப்பா... வீட்டுக்கு வராத அத்தான்..." எனக்கு என்னவோ செய்தது. உள்ளே வேகமாக ஓடிவிட்டேன்.

அப்பாவும் அம்மாவும் கோரஸ் போல "விசித்திரமான பெண்!" என்று சொல்லிச் சிரித்தார்கள்.

"ஏண்டி, அப்படி ஏதாவது இருக்குமோ?" என்றது அப்பாவின் குரல்.

"எப்படி....?" அம்மாவின் குரல், உடன் சிரிப்பு...அப்பா என்ன சொன்னுரோ?

"ஒன்றுமில்லே.......என்னத்தையோ எண்ணிக்கொண்டு திண்டாடுகிறது...சரி போயிட்டு வாங்கோ. அவன்கிட்டே சொல்லி வையுங்கோ..."

"அவனும் கேட்டால்தானே...'மகி! மகி'ன்னு உயிரை விடறவன் இப்போ அவன் பேச்சையே எடுக்கல்லியே!"

கார் வந்தது. போயிற்று. பின்னர் வந்தது...... எல்லோரும் வந்தார்கள். யாரோ புதுக் குரல். ராகவனு....? ராகவ அத்தான் குரல்தான்....என்ன கனவு காண்கிறேனு...? ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். ராகவ அத்தான் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தார்.

"அப்போ ராகவன் பம்பாய் போகமாட்டான்" என்றுன் அண்ணு.

"நீ வர்றப்போ மாற்றல் தெரியாதா!"

"இன்னிக்குப் பிளேனிலேயே துரை வந்தான். சாயங்காலம் இந்தப் பிராஞ்சு ஆபீஸிலே பார்த்தேன். அந்த நேரம் தான் ஒரு சிப்பந்தி தவற்றுக்காக நிறுத்தப்பட்டான். உடனே என்னை அதிலே இருக்கச் சொல்லிவிட்டுப் பம்பாய்க்குத் தந்தி அடிச்சிப்பிட்டான்" என்றுர் அத்தான். எத்தனை அழகாகப் பேசுகிறுர்... நம்ம அசட்டு ..சீ! என் வாய்த்துடுக்கு....

"அப்போ ..இந்த மாசமே.. .என்ன பார்வதி..." என்றுர் அப்பா.

"எனக்கு என்ன? எல்லாம் தயார். கடையிலே வாங்கி மனையிலே வைக்க வேண்டியதுதானே .."

"என்ன ராகவா.....உனக்குப் பெண்ணைப் பார்க்கணுமா...?"

"என்ன மாமா, என்னைக் கேக்கறேள்; மகிமா என்னைப் பார்த்து 'ரைட்' போட்டா சரி..." என்றுர். இவருக்குத்தான் என்ன குறும்பு! நான் எதற்காக 'ரைட்' போடணுமாம்... ஒண்ணும் வேண்டாம்...நான்தான் இவர்கள் கண்களில் 'விசித்திரப் பெண்ணுயிற்றே' நான் நின்றுகொண்டிருந்தேன். சமயம் தெரியாமல் அப்பா அழைத்து விட்டார். நான் விறைப்பாகத்தான் ராகவ அத்தான் எதிரில் நின்றுகொண்டு, "எனக்குக் கல்யாணமே வேண்டாம்" என்று சொன்னேன். என்ன? சத்தமே தொண்டையிலிருந்து வரவில்லையே. வேறு எந்தப் பேச்சுமே வரவில்லே. தொண்டையை அடைத்தது. என்ன இது. ராகவன் என் கண்களையே ஏன் அப்படிப் பார்க்கிறுர்?

"என்னம்மா மகி! நம்ப ராகவன்தான்! அடுத்த மாதம் உங்களுக்குக் கல்யாணம். சரிதானே?" என்றுர். நான் எப்படி என் அறைக்கு வந்தேனே, எனக்குத் தெரியாது. என் உள்ளம் கூறியது, 'மகிமா! நீ விசித்திரப் பெண்ணடீ!' என்று.

பிறந்து 11 மாதங்கள்கூட ஆகவில்லை —
அவன் நடக்க
ஆரம்பித்துவிட்டான்!



அவன் தாயார் அவனுக்கு

# டூமெக்ஸ்

பேபி புட்

புகட்டுகிறுள் என்பதைச்
சொல்லவும் வேண்டுமா!

டூமெக்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1

கால்கேட் குளோரோபில்

ஈறுகளை பலப்படுத்துகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை!

ETPA/6/7

ஒன்றல்ல 17 மயக்கும் மணங்கள்

உங்களுக்கு கிறுகிறுப்பும்
புளகாங்கிதமும் தரும்!




வெறியூட்டும் 17 ஸெண்டுகளின்
இந்திரஜாலக் கலவை சேர்ந்த பாமாலிவ்
உண்மையில் உயர்ந்த டால்க்...
வீட்டிலுள்ள எல்லோருக்கும்...
குழந்தைக்கும் கூட!




டால்கம் டீலக்ஸ்



# பாண்டிமாதேவி

நா. பார்த்தசாரதி

அத்தியாயம் 22

## கலகக்கனல் மூண்டது!

போர்க்களத்தில் அந்த இரவில் மூண்ட கலவரங்களை அடக்கிவிட முயன்றனர் குமார பாண்டியனும் சக்க சேனாபதியும். கலகம் அடங்கவில்லை. மேலும் மேலும் பெருகி வளர்ந்தது. கலகத்துக்குக் காரணமான செய்திகளைப் போர்க்களத்துப் பாசறைகளில் பரப்புவதற்கு வந்த வெளியாட்கள் எல்லோரையும் இருளில் சரியாகப் பார்க்க முடியவில்லையானாலும் அதில் முக்கியமான ஒருவனைக் குமார பாண்டியன் பார்த்து விட்டான். அவ்வாறு பார்க்கப்பட்டவன் வேறு யாருமில்லை; ஆபத்துதவிகள் தலைவன் மகர நெடுங்குழைக்காதன் தான்! ஆபத்துக் காலங்களில் நன்றியுணர்ச்சியோடு அரச குடும்பத்துக்கு உதவி புரிந்து பாதுகாக்க வேண்டிய அவன் இப்படிக் கலகக்காரனாக மாறியிருப்பதைக் கண்டு குமாரபாண்டியன் உள்ளம் கொதித்தான். கோட்டாற்றிலிருந்து வந்திருந்த தென்பாண்டிப் படைவீரர்களில் பெரும்பாலோர் பாசறைகளை விட்டு வெளியேறிக் கலகக்காரர்களோடு சேர்ந்துகொண்டு விட்டனர். குமாரபாண்டியனும், சக்கசேனாபதியும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே இந்தத் துரோகம் நடந்தது. சாம, தான, பேத, தண்ட முறைகளில் எதனாலும் அவர்களால் அதைத் தடுக்க இயலவில்லை.

"இளவரசே! காரியம் கைமீறிப் போய் விட்டது. பார்த்துக் கொண்டே சும்மா இருப்பதில் பயனில்லை. உடனே போர்க்களத்துக்கு அனுப்பி வைக்கச் சொல்லி அரண்மனைக்கோ, மகாமண்டலேசுவரருக்கோ தூதனுப்புங்கள். தளபதி வந்துவிட்டால் இந்தக் கலகம் அடங்கிப் போகும்" என்றார் சக்கசேனாபதி.

"சக்கசேனாபதி! தளபதியைப் போர்க்களத்துக்கு வரவழைத்து விடுவது அவ்வளவு எளிய காரியமல்ல. அதில் எத்தனையோ சிக்கல்

கள் இருக்கின்றன. அந்தச் சிக்கல்களை உங்களிடம் வெளிப்படையாகச் சொல்ல முடியாத நிலையில் நான் மாட்டிக் கொண்டிருக்கிறேன்.''

''நீங்கள் சொல்லா விட்டாலும் நானாகச் சிலவற்றைப் புரிந்து கொண்டேன், இளவரசே! மகாமண்டலேசுவரருக்கும் தளபதிக்கும் உள்ளூறப் பெரிய பகைமை ஏதோ இருக்க வேண்டும். தளபதி இந்தப் போரில் கலந்துகொள்ள முடியாமற் போனதற்குக்கூட மகாமண்டலேசுவரர் காரணமாயிருக்கலாம். அதனால் தான் இந்தக் கலகமே மூண்டிருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது.''

''சக்கசேனாபதி! உங்களுக்குத் தெரிந்தது சிறு பகுதிதான். ஆனால் அவை சரியான அனுமானங்களே! அதற்கு மேற்பட்டவற்றைத் தெரிவிக்க ஆவல் இருந்தும் ஒருவருக்கு வாக்குக் கொடுத்து விட்ட காரணத்தால் இயலாத நிலையில் இருக்கிறேன்.''

''வேண்டாம்! அவற்றைத் தெரிந்து கொள்ளும் அவசியம் எனக்கும் இப்போது இல்லை. ஆனால் இந்தக் கலகத்தைத் தடுக்க உடனே ஏற்பாடு செய்யுங்கள். தளபதி எங்கே யிருந்தாலும் சமாதானப்படுத்திப் போர்க்களத்துக்கு வரவழைக்கச் செய்யுங்கள்.''

''நான் மகாமண்டலேசுவரருக்கும், என் அன்னைக்கும் இங்குள்ள நிலைமையை விவரித்து உடனே திருமுகங்கள் எழுதுகிறேன்.''

''சொல்லிக் கொண்டே நிற்காதீர்கள், இளவரசே! உடனே உங்கள் பாசறையில் போய் அமர்ந்து எழுதத் தொடங்குங்கள். நான் இங்கே சிறிது நேரம் இருந்து கவனித்து விட்டு வருகிறேன்'' என்று சொல்லிக் குமாரபாண்டியனைப் பாசறைக்கு அனுப்பி விட்டுத் தாம் மட்டும் தனியே இருளில் கடந்தார் சக்கசேனாபதி. கலகத்தின் காரணம் பற்றிக் குமாரபாண்டியர் தம்மிடம் கூறாமல் மறைக்கும் மர்மச் செய்திகள் எவையோ அவற்றைத் தெரிந்து கொண்டு விட வேண்டுமென்று கிளம்பியிருந்தார் அவர். கலகக்காரர்களிடமே அவற்றை விசாரித்துவிட எண்ணினார். தமது தோற்றத்தைத் தென்பாண்டி நாட்டின் சாதாரணமான ஒரு படைவீரனின் தோற்றம் போல எளிமையாக்கிக்கொண்டு பாசறைகளைப் புறக்கணித்துக் கலகக்காரர்களோடு ஓடிப்போன பாண்டியப் படையைப் பின்பற்றி அவரும் சென்றார். தாமும் அவர்களில் ஒருவனைப் போலக் கலந்துகொண்டு அவர்களோடு பேச்சுக் கொடுத்துப் பார்த்ததிலேயே எல்லாக் காரணங்களும் அவருக்கு ஒருவாறு விளங்கி விட்டன. குமார பாண்டியர் சொல்லத் தயங்கியவற்றையும் அவர் தெரிந்து கொண்டார். எல்லாம் தெரிந்து கொண்டு திரும்பி வந்த அவர் நேரே குமார பாண்டியனின் பாசறைக்குச் சென்றார். பாசறையில் தீபஒளி எரிந்து கொண்டிருந்தது. மகாமண்டலேசுவரருக்கும் தன் தாய்க்கும் எழுத வேண்டிய திருமுக ஓலைகளை எழுதிவிட்டுக் காத்திருந்தான் குமார பாண்டியன்.

''வாருங்கள் சக்கசேனாபதி! நான் வந்து எழுத வேண்டிய அவசர ஓலைகளை எழுதி விட்டு இவ்வளவு நேரமாக நீங்கள் வருவீர்களென்று விழித்துக் கொண்டு காத்திருக்கிறேன். அதற்குள் நீங்கள் எங்கே போய் விட்டீர்கள்?'' என்று தன்னை நோக்கிக் கேட்ட குமாரபாண்டியனின் முகத்தைச் சிரித்தவாறே கூர்ந்து பார்த்தார் சக்கசேனாபதி.

''சக்கசேனாபதி! இந்த நெருக்கடியான நிலைமையில் என் முகத்தைப் பார்த்தால் சிரிப்புக் கூட வருகிறதா உங்களுக்கு?''

''உங்கள் முகத்தைப் பார்த்துச் சிரிக்கவில்லை, இளவரசே! சில முக்கியமான செய்திகளை இவ்வளவு நேர்ந்த பின்பும் என்னிடம் கூடச் சொல்லாமல் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அதை நினைத்துச் சிரித்தேன்.''

''அப்படி எவற்றை நான் உங்களிடம் மறைத்தேன்?''

''சொல்லி விடட்டுமா?''

''நீங்கள் அவற்றைத் தேடித் தெரிந்து கொண்டிருந்தால் சொல்லித்தானே ஆக வேண்டும்?'' என்று சோர்ந்த குரலில் சொன்னான் குமாரபாண்டியன்.

''மகா மண்டலேசுவரருடைய சூழ்ச்சியால்தான் பகவதி ஈழ நாட்டில் இறந்து போனாளென்று கலகக்காரர்கள் பேசிக் கொள்கிறார்கள். இன்னும் அவருடைய சூழ்ச்சியால் படைகள் போருக்குப் புறப்படுகிற சமயத்தில் தளபதி மட்டும் இரகசியமாகச் சிறைவைக்கப்பட்டானும். அதேபோல் ஆபத்துதவிகள் தலைவனையும் சூழ்ச்சி செய்து சிறைப்படுத்த முயன்றாராமே அவர்? நீங்கள் கப்பலில் வந்து விழிஞத்தில் இறங்கியதும் மகாமண்டலேசுவரர் உங்களைத் தனியே அழைத்துக் கொண்டுபோய், ''பகவதியின் மரணத்தைப் பற்றியாரிடமும் சொல்லக்கூடாது'' என்று வாக்குறுதி வாங்கிக் கொண்டாராமே? தளபதியை இரகசியமாகச் சிறைப்படுத்தியிருக்கிற அந்தரங்கத்தையும் சொல்லி அதையும் யாரிடத்திலும் கூற வேண்டாம் என்று உங்களிடம் கேட்டுக் கொண்டாராம். ஆனால் அதே சமயத்தில் இருளில் அதேஇடத்தில் நின்று கொண்டு காவலைத் தப்பி ஓடிவந்து தளபதியும், ஆபத்துதவிகள் தலைவனும் — நீங்களும் மகா மண்டலேசுவரரும் பேசியவற்றை ஒட்டுக்கேட்டுக்கொண்டிருந்தார்களாம். அப்போது ஒரு கல்லைக் கூட மகா மண்டலேசுவரர் மேல் தூக்கி எறிந்தார்களாமே?'' — இவ்வாறு கூறிக் கொண்டே வந்த சக்கசேனாபதியை இடைமறித்து, ''இவற்றையெல்லாம் இப்போது உங்களுக்கு யார் கூறினார்கள்?'' என்று குமாரபாண்டியன் கேட்டான்.

''யாரும் என்னிடம் வந்து கூறவில்லை; கலகக்காரர்களுக்கு நடுவே போய்க் கலந்து கொண்டு, அவற்றைத் தெரிந்து கொண்டேன்!'' என்றார் சக்கசேனாபதி.



"தெரிந்து கொண்டவை இவ்வளவு தானா? இன்னும் ஏதாவது உண்டா?"

"நிறைய உண்டு! மகாமண்டலேசுவரரின் சூழ்ச்சிகளையெல்லாம் தங்களிடம் கூறித் தங்களை அழைத்து வருவதற்காகவே தன் தங்கை பகவதியை இலங்கைக்கு மாறுவேடத்தில் அனுப்பினானாம் தளபதி. அவன் தங்களோடு திரும்பி வரும் காட்சியைக் காணவே காவலிலிருந்து தப்பி விழிஞத்துக்கு ஓடிவந்து பார்த்தானாம். அவன் தங்கை இறந்த செய்தியைக் கேட்டவுடன் அவனுக்குத் தாங்க முடியாத துயரம் ஏற்பட்டதாம். போதாக் குறைக்குத் தாங்களும் மகாமண்டலேசுவரருடைய சூழ்ச்சிக்கு இணங்கி அவருக்கு வாக்குறுதிகள் கொடுத்தது அவனுக்குச் சினம் மூட்டியதாம். அவனும் ஆபத்துதவிகள் தலைவனும் போய்க் கழற்கால் மாறனாரைப் பார்த்தார்களாம். எல்லோருமாக ஒன்று சேர்ந்து முயன்று ஒரு பெரிய கலகக் கூட்டத்தைத் திரட்டினார்களாம். அந்தக் கூட்டத்தின் ஒரு பகுதியைத் தளபதியும் கழற்கால் மாறனாரும் தலைமை தாங்கிக் கொண்டு இடையாற்றுமங்கலத்தை வளைத்துத் தாக்குவதற்குப் போயிருக்கிறார்களாம். மற்றொரு பகுதியைத்தான் ஆபத்துதவிகள் தலைவன் இங்கே கூட்டிக் கொண்டு வந்து படை வீரர்களை மனம் மாற்றுவதற்கு முயன்றதை நாம் பார்த்தோமே?"

"சக்க சேனாபதி! தளபதியின் தங்கை இறந்து போனதற்கு மகாமண்டலேசுவரர் எந்த விதத்திலும் காரணமில்லை என்பது உங்களுக்கும் தெரியும்!"

"இப்போதுதான் உறுதியாகத் தெரியும். ஏனென்றால் நீங்கள் ஈழநாட்டிலிருந்து கப்பலில் புறப்படுகிறவரை காட்டில் இறந்துபோன பெண் பகவதியா, இல்லையா என்ற சந்தேகத்திலிருந்து மீளவில்லை. அதனால் எனக்கும் அது உறுதியாகத் தெரியாமற் போய்விட்டது. இளவரசே!"

"சக்கசேனாபதி! தமனன் தோட்டத்துத் துறையிலிருந்து கப்பல் புறப்பட்ட சிறிது நேரத்திலேயே சேந்தனிடமும், குழல்மொழியிடமும் விசாரித்து இறந்த பெண் பகவதிதான் என்று நான் உறுதியாகத் தெரிந்து கொண்டு விட்டேன். அதனால் என் கடற்பயணம் முழுவதும் சோகத்திலேயே கழிந்தது. விழிஞத்தில் வந்து இறங்கியதும் அந்தத் துயர உண்மையை எல்லோரிடமும் சொல்லிக் கதறிவிட

வேண்டுமென்றிருந்தேன். மகாமண்டலேசுவரர் வாய்ப் பூட்டுப் போட்டு விட்டார். அதன் காரணமாகத்தான் நீங்களாகத் தெரிந்து கொள்கிறவரையில் உங்களிடம் கூடச் சொல்ல முடியாமல் போயிற்று. இவ்வளவு பெரிய கலகங்களெல்லாம் அதன் மூலம் உண்டாகுமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை!"

"நாம் எதிர்பார்க்கிறபடியே எல்லாம் நடந்தால் விதி என்று ஒன்று இல்லாமலே போய்விடும், இளவரசே!"

"பாசறையிலுள்ள படைவீரர்களை மனம் மாற்றிக் கலைத்துக் கொண்டு போகிற அளவுக்குத் தளபதி வல்லாளதேவன் கெட்டவனாக மாறுவானென்று நான் நினைக்கவே இல்லை!"

"சந்தர்ப்பம் எவ்வளவு நல்ல மனிதனையும் நன்றிகெட்டவனாகமாற்றலாம். அந்த ஒருமனிதனுக்காக இத்தனை ஆயிரம்படைவீரர்களும் மனம் மாறுகிறார்களே! அதற்கென்ன காரணம் சொல்லுகிறீர்கள்?"

"விட்டுத் தள்ளுங்கள்! உங்களுடைய ஈழத்துப் படைகளும், கரவந்தபுரத்து வீரர்களும், சேரப் படைகளும் இருக்கின்றன. தென்பாண்டிப் படைகளில் சில பத்தி வீரர்கள் போரைப் புறக்கணித்து விட்டு ஓடுவதால் நமக்கு ஒன்றும் குறைந்து விடாது!"

"இப்படி அலட்சியமாகப் பேசுவது தான் தவறு! ஆயிரமிருந்தாலும் சொந்தப் படைகளைப் பிரிந்து போக விடுவது கூடாது. நீங்கள் எந்த வகையில் முயற்சி செய்வீர்களோ, எனக்குத் தெரியாது. தளபதியையும் ஆபத்துதவிகள் தலைவனையும், அவர்களோடு சேர்ந்திருக்கும் கழற்கால் மாறனார் முதலியவர்களையும் நம்முடன் தழுவிக் கொள்ள வேண்டும். நம்முடைய இந்த உட்பகையை எதிர்த்தரப்பினர் தெரிந்து கொள்ள நேர்ந்தால் பின் இரண்டே நாட் போரில் அவர்கள் நம்மை வென்றுவிட முடியும்."

"நீங்கள் சொல்வதெல்லாம் நியாயந்தான்! ஆனால் அவர்களைச் சமாதானப் படுத்தித் தழுவிக் கொள்வது எளிதில் முடிகிற காரியமல்லவே?"

"இளவரசே! நீங்களே நேரில் போனால் இரண்டு நல்ல காரியங்கள் முடியும். தளபதி வெறி பிடித்துப் போய் இடையாற்றுமங்கலத்தைத் தாக்கச் சென்றிருக்கிறான். அதனால் மகாமண்டலேசுவரரும், நீங்களும் சேர்ந்தே தளபதியைச் சந்தித்துச் சமாதானப்படுத்திப் போர்க்களத்துக்கு அழைத்து வந்து விடலாம். நீங்கள், உங்களுடைய அன்னையார், மகாமண்டலேசுவரர்,— மூவருமாகச் சேர்ந்து சமாதானப் படுத்துகிற போது தளபதி ஒப்புக் கொள்வான்."

"நான் போய் முயற்சி செய்கிறேன். நீங்கள் ஒருவராகவே இரண்டு நாளைக்குப் போரைக் கவனித்துக் கொள்ள வேண்டும். நான் போய் வர இரண்டு நாட்களாகலாம்."

"ஒருவாறு இரண்டு நாட்கள் சமாளித்துக் கொள்ள முடியும். நம் படைகளின் கைதளர்ந்து பின்வாங்க நேர்ந்தாலும் மூன்றாம் நாள் காலை நீங்கள் தளபதியோடும் படைகளோடும் வரவில்லையானால் முடிவுக்கு நான் பொறுப்பில்லை."

"பயங்கரமான நிபந்தனை விதிக்கிறீர்கள், சக்கசேனாபதி!"

"அதைத் தவிர வேறு வழியில்லை, இளவரசே! நீங்கள் தளபதியைச் சந்தித்து அழைத்துவரப் போகாவிட்டால் முடிவு அதைவிடப் பயங்கரமாக இருக்கும். அதைவிட விரைவிலேயே நாம் தோற்று விடுவோம்."

"இந்த வார்த்தையைச் சொல்லத்தான் இவ்வளவு படைகளோடு கடல் கடந்து வந்தீர்களா? நீங்கள் எனக்கு அளிக்கும் நம்பிக்கை இதுதானா?"

"உங்கள் நாட்டின் உட்பகைக் குழப்பங்களுக்கு நான் என்ன செய்ய முடியும்? புறப்பட்டுப் போய் உட்பகைக் கலகங்களைத் தவிர்த்து ஒற்றுமையை ஏற்பாடு செய்ய முயன்று பாருங்கள். ஏற்பாடு முடிந்தால் மூன்றாம் நாள் காலை பதினொரு நாழிகை வரை என்னால் முடிந்தமட்டும் இந்தப் போர்க்களத்தைச் சமாளிக்கின்றேன். அதற்குள் வர இயலாமற்போனால் பின்பு நீங்கள் இங்கு வரவே வேண்டாம். நானும் என்னோடு வந்த வீரர்களில் உயிர் பிழைத்தவர்களும் தப்பியோடிக் கப்பலேறி விடுவோம்!"

"நீங்கள் இப்படிச் சொல்வதற்கு என்ன அர்த்தம்?"

"அந்த அர்த்தத்தை வெளிப்படையாக வேறு சொல்ல வேண்டுமா? உங்களுக்குப் புரியவில்லையா?"

"புரிகிறது! தோற்று விடுவேன் என்கிறீர்கள்."

"அதை ஏன் என் வாயாற் சொல்ல வேண்டும்? ஒருவேளை நீங்கள் சமாதானப்படுத்தித் தளபதி வல்லாளதேவனை அழைத்து வந்தால் நமக்கே வெற்றியாக முடியலாம்!"

"சக்க சேனாபதி! அப்படியானால் மூன்றாம் நாள் காலை பதினொரு நாழிகை வரை இந்தப் போர்க்களத்தில் தோல்வி நிழல் நம் பக்கம் படர விடாமலிருக்கும்படி பார்த்துக் கொள்ளும் பொறுப்பை நீங்கள் ஏற்கிறீர்களா?"

"ஆகா! உறுதியாக ஏற்றுக் கொள்கிறேன்."

"நான் உங்களை நம்பிப் போய்விட்டு வரலாமா?"

"தாராளமாகப் போய் வரலாம்!"

"யாரங்கே! என்னுடைய பிரயாணத்துக்குக் குதிரை கொண்டு வா" என்று குமாரபாண்டியன் பாசறைக்குள்ளிருந்து தன் ஏவலனைக் கூவிக் கட்டளையிட்டான். குதிரை கொண்டு வந்து நிறுத்தப்பட்டது. அவன் வெளியே வந்து ஏறிக் கொண்டான். "சக்க சேனாபதி! வருகிறேன். விதி இருந்தால் சந்தித்து வெற்றி பெறுவோம்" என்று பாசறை வாயிலில் நின்ற அவரிடம் கூறி விடைபெற்றுக் கொண்டு குதிரையைச் செலுத்தி இருளில் மறைந்தான் குமாரபாண்டியன்.



# ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு விசிறி



உங்கள் இஷ்டப்படி உபயோகிக் கலாம்

16'' ஸ்வீப்
ஏ. ஸி.

விலை ரூ. 70/-
எக்ஸைஸ் வரி ரூ. 5/-
உள்ளூர் வரி தனி

ஓரியண்ட் ஆல்-பர்பஸ் விசிறி பல வேலைகளைச் செய்யும் புதியதொரு பிரகாசமான கருத்தை அத்துடன் கொண்டு வருகிறது.

சீலிங் விசிறி, வால் - பிராக்கெட் விசிறி, டேபிள் விசிறி, ஏர் சர்க்கு லேட்டர் ஆகியவற்றின் அம்சங்கள் எல்லாம் ஒன்றில் சேர்ந்து நின்று விளங்கு கின்றன

நல்லவேகமான காற்றும் குறைந்த செலவும் உள்ள இந்த ஆல்-பர்பஸ் விசிறி, இதுவரை கண்டிராத வியாபகத் தன்மையில் சிறந்ததாகும். நம்பிக்கையூட்டும் விசிறி இஃதொன்றே— "ஒவ்வொரு வீட் டிற்கும் ஒரு விசிறி."

**Orient**

**ஓரியண்ட் ஆல்-பர்பஸ் விசிறிகள்**
சொல்வதைக் காட்டிலும் சேவையில் மிக்கவை

**ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**
6 கோர் பீபி லேன், கல்கத்தா-11

## அத்தியாயம் 23

# மாதேவியின் கண்ணீர்

மகாமண்டலேசுவரரைப் பற்றி யார் சொல்லியும் அதை நம்பாமல் பொழுது விடிந்ததும், இடையாற்றுமங்கலத்துக்குப் புறப்படுவதற்கிருந்த மகாராணி அப்படிப் புறப்பட வேண்டிய அவசியமே இல்லாமற் போய் விட்டது. பொறி கலங்க வைக்கும்படியான அந்தச் செய்தியைக் கேட்டவுடன் மகாராணி வானவன்மா தேவி மூர்ச்சையாகி விழுந்து விட்டார். பலவித மனக்குழப்பங்களாலும், முதல் நாளிரவு நன்றாக உறக்கம் வராததாலும், தளர்ந்து போயிருந்த அவருக்கு அந்தச் செய்தியைத் தாங்கிக் கொண்டு நிற்க முடியவில்லை.

“இடையாற்று மங்கலத்தையும், அதைச் சுற்றியுள்ள அழகான இடங்களையும் கலகக்காரர்கள் நெருப்பு வைத்துக் கொளுத்தி விட்டார்கள். முதல் நாள் இரவு முழுவதும் மகாமண்டலேசுவரர் யார் கையிலும் அகப்பட வில்லையாம். காலையில் இடையாற்றுமங்கலத்துச் சிவன் கோவில் குறட்டில் அவர் இறந்து கிடப்பதைக் கண்டார்களாம்” என்று கேள்விப்பட்ட இந்தச் செய்திதான் மகாராணியை மூர்ச்சையாகும்படி செய்து விட்டது.

புவனமோகினியும், விலாசினியும், மகாராணியின் உடலைத் தாங்கிக் கொண்டு மூர்ச்சை தெளிந்து நினைவு வருவதற்கேற்ற சைத்தியோபசாரங்களைச் செய்தனர். பவழக்கனிவாயரும், அதங்கோட்டாசிரியரும் கவலையோடு நின்றுகொண்டிருந்தார்கள்.

அந்தச் செய்தியைத் தெரிவிப்பதற்கு வந்த அரண்மனை மெய்க்காவற்படை ஒற்றனை மேலும் சில கேள்விகளைத் தூண்டிக் கேட்டார் பவழக்கனிவாயர்.

“நேற்றுக் காலையில்தானே அந்தப் பெண் குழல்மொழி இங்கிருந்து புறப்பட்டு இடையாற்று மங்கலத்துக்குப் போனான்? அவள் போய்ச் சேர்ந்தாளோ, இடைவழியிலேயே கலகக்காரர்களிடம் மாட்டிக்கொண்டு விட்டாளோ? அதைப் பற்றி ஒன்றும் தெரியவில்லையே?” என்று பவழக்கனிவாயர் கேட்ட கேள்விக்கு ஒற்றன் கீழ்க்கண்டவாறு மறுமொழி கூறினான்.

“சுவாமீ! மகா மண்டலேசுவரரின் புதல்வியும் அந்தரங்க ஒற்றன் நாராயணன் சேந்தனும் கலகக்காரர்கள் கையில் சிக்கவில்லையாம். அவர்களையும் எப்படியாவது பிடித்து விடுவதென்று கலகக்காரர்கள் வலை போட்டுத் தேடிக் கொண்டிருக்கிறார்களாம்!” — இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் மகாராணியின் மூர்ச்சை தெளிந்தது. எழுந்து உட்கார்ந்து மிரள மிரள விழித்தார் அவர். சுற்றிலும் நிற்பவர்களைப் பார்த்தார். தட்டுத் தடுமாறி எழுந்து நின்றார். தம்முடைய அந்தரங்க அறையை நோக்கிச் சென்றார். பின்பு நீண்ட நேரம் அவர் அந்த அறையிலிருந்து வெளியில் வரவே இல்லை. “மனம் நொந்திருப்பவர்களைத் தனியே விடக் கூடாது! நீங்களும் போய் உடன் இருங்கள்” என்று புவனமோகினியையும், விலாசினியையும் அனுப்பினார் அதங்கோட்டாசிரியர். அந்தப் பெண்கள் இருவரும் மகாராணி வானவன்மா தேவியாரின் அறைக்குள் தயங்கித் தயங்கிச் சென்றார்கள்.

அறை நடுவில் உட்கார்ந்து பச்சைக் குழந்தை போல விம்மி விம்மி அழுது கொண்டிருந்தார் மகாராணி. அவர் மடியில் ஒரு பழைய ஓலை கிடந்தது. விலாசினியையும், புவனமோகினியையும் நிமிர்ந்து பார்த்த மகாராணி கையால் குறிப்புக்காட்டி அவர்களை உட்காரச் சொன்னார்கள். கண்களைத் துடைத்துக் கொண்டு தன் மடியில் கிடந்த ஓலையை விலாசினியின் கையில் எடுத்துக் கொடுத்தார் மகாராணி. அவள் அதை வாங்கிக் கொண்டு என்ன செய்ய வேண்டுமென்று கேட்பதுபோல் மகாராணியின் முகத்தைப் பார்த்தான்.

“விலாசினீ! இந்த ஓலையில் எழுதியிருக்கும் பாட்டைப் பற்றி உனக்கு நினைவிருக்கிறதா?” என்று அவர் அவளைக் கேட்டார். அந்த ஓலையிலிருந்த பாட்டை ஒருமுறை மனத்திற்குள் படித்துப் பார்த்துக்கொண்ட விலாசினி, “மகாராணீ! இது முன்பு ஒருமுறை கோட்டாற்றுப் பண்டிதரிடம் தாங்கள் எழுதி வாங்கிக் கொண்ட பாட்டு அல்லவா? பகவதி இங்கே தங்கியிருக்கும்போது இந்தப் பாட்டைக் கொடுத்து அடிக்கடி அவளைப் பாடச் சொல்லிக் கேட்பீர்களே?” என்றாள். பகவதி என்ற பெயரைக் கேட்டவுடன் மறுபடியும் கண்ணீர் அரும்பியது மகாராணியின் கண்களில்.

“இப்போதும் அவள் பாடிக் கேட்க வேண்டும்போல ஆசையாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்தப் பாவிப் பெண் கண்காணாத தேசத்தில் போய் மாண்டு போனதாகச் சொல்லுகிறார்களே? விலாசினீ! நான் இப்போது சொல்லப் போகிற செய்தி இதற்கு முன்பு உனக்குத் தெரிந்திருக்காது. ஒரு நாள் இரவு மன வேதனை தாங்க முடியாமல் அரண்மனை நந்தவனத்திலிருந்த பாழுங் கிணற்றில் வீழ்ந்து என்னை மாய்த்துக் கொள்வதற்கு இருந்தேன். அப்போது அந்த நள்ளிரவில் என்னைக் கைப்பிடித்துத் தடுத்துக் காப்பாற்றியது யார் தெரியுமா? அந்தப் பெண் பகவதிதான். அவள் காப்பாற்றியிராவிட்டால் இன்று என்னை யார் உயிரோடு பார்க்க முடியும்? அவள் போய்விட்டாள். நான் இருக்கிறேன். அவளுடைய தமையன் வீராதி வீரனைப் போர்க்களத்தில் நின்று போரிடவேண்டியதை மறந்து இந்தத் தென்பாண்டி நாட்

டின் அறிவுச் செல்வரைக் கொன்று கலகமிடும் கொள்ளைக் கூட்டத் தலைவனாக மாறிவிட்டான். எவ்வளவு கேவலமான காரியம்? மகா மண்டலேசுவரர் இறந்து போய்விட்டார் என்று கேட்கும்போது என் உடல் பயத்தாலும், துக்கத்தாலும் நடுங்குகிறது. பெண்ணே! நேற்று நாமெல்லோரும் பேசிக் கொண்டிருந்த போது யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் இடையாற்றுமங்கலத்துக்கு ஓடிப் போனாளே குழல்மொழி; அவள் கதி என்ன ஆயிற்றோ? போர்க்களத்து நிலைமைகளைப் பற்றியும் ஒன்றுமே தெரியவில்லை. வடக்கே பகைவர்களோடு போர் செய்து கொண்டிருக்கிற சமயத்தில் நம்மோடு நாமே போரிட்டுக் கொள்ளும் இந்தக் கலகத்தைத் தளபதி ஏன்தான் உண்டாக்கினானோ? தேசத் துரோகியாக மாறவேண்டுமென்று நன்றியை மறந்து துணிந்து விட்டானா வல்லாளதேவன்? இதெல்லாம் என்ன போதாத காலமோ அம்மா! கரிக்குப்பைக்கு நடுவில் வைரத்தைப் பார்ப்பதுபோல் இத்தனை துன்பத்துக்கும் நடுவில் இந்த ஒரு பாட்டை எடுத்துப் பார்த்தால் எனக்குச் சிறிது மெய்யுணர்வு உண்டாகிறது. கொஞ்சம் இதைப் படி; கேட்டு ஆறுதல் அடைகிறேன்" என்று சோகம் கனிந்து உணர்ச்சி கொந்தளிக்கும் வார்த்தைகளால் வேண்டிக் கொண்டார் மகாராணி. விலாசினி படிக்கலானாள்:

"இளமையும் நிலையாவால்
இன்பமும் நின்றவல்ல
வளமையும் அஃதேயால்
வைகலும் துன்பவெள்ளம்
உளவென நினையாதே
செல்கதிக் கென்றுமென்றும்
விளைநிலம் உழுவார்போல்
வித்துநீர் செய்துகொள்மின்!"

பாட்டைக் கேட்டு விட்டு மகாராணி கூறலானார்:

"நிலையாத பொருள்களை நிலைப்பனவாக எண்ணி மயங்கியிருந்தால் இப்படித்தானே அந்தப் பொருள்கள் அழியும் போது துக்கப்பட வேண்டியிருக்கிறது? நிலையாததையெல்லாம் படைத்து விட்டு நிலைத்திருப்பது எதுவோ அதை நினைக்கப் பழகிக் கொண்டிருந்தால் இப்போது என் மனம் இப்படிக்குமுறுமா? உணர்ச்சி கைப்பாசைகளையும், எண்ண அழுக்குகளையும் வைத்துக் கொண்டே மெய்யுணர்வை இழந்து விட்டேனே? விலாசினி! துக்கத்தையும், ஏமாற்றங்களையும் அனுபவிக்க, அனுபவிக்க இந்தப் பாட்டின் அர்த்தம் கடல் போல் விரிவடைந்து கொண்டே போவதுபோல் ஒரு பிரமை உண்டாகிறது, பார்த்தாயா?" அந்தப் பாட்டைக் கேட்டு மகாராணி பேசிய வார்த்தைகளால் அவருடைய மனம் எந்த அளவுக்கு வேதனையும், விரக்தியும் அடைந்து போயிருக்கிற தென்பதை விலாசினி உணர்ந்தாள்.

அறை வாயிலில் அந்தச் சமயத்தில் ஒரு காவலன் அவசரமாக வந்து வணங்கி நின்றான். "தேவி! குமாரபாண்டியர் அவசரமாகப் போர்க்களத்திலிருந்து புறப்பட்டு வந்திருக்கிறார். தங்களைச் சந்திக்க வந்து கொண்டிருக்கிறார்" என்று அந்தக் காவலன் கூறியதும் விலாசினியும், புவனமோகினியும் விறுட்டென எழுந்து அந்த இடத்திலிருந்து ஒதுங்கிச் சென்றனர். மகாராணியின் நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டது. கண்கள் அறை வாயிலை நோக்கிப் பதிந்து நிலைத்தன.

வாட்டமடைந்த தோற்றத்தோடு பயணம் செய்து களைத்துக் கறுத்த முகத்தில் கவலையும் பரபரப்பும் தென்பட வேகமாக அறைக்குள் நுழைந்தான் குமாரபாண்டியன். அவனைக் கண்டதும் துயரம் பொங்க, "குழந்தாய்! இந்த நாட்டின் அறிவுச் செல்வரைப் பறிகொடுத்து விட்டோமடா!" என்று கதறினார் மகாராணி.

"அம்மா! என்ன நடந்து விட்டது? நிதானமாகச் சொல்லுங்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் குழப்பங்களையும், கவலைகளையும் சுமந்து கொண்டு போர்க்களத்திலிருந்து இங்கே ஓடிவந்திருக்கிறேன். நீங்கள்எதையோசொல்லிக் கதறுகிறீர்களே?" என்று அருகில் வந்து அமர்ந்து வினவினான் இராசசிம்மன்.

"சொல்லிக் கதறுவதற்கு இனி என்ன இருக்கிறது? இலங்கையில் உன்னைத் தேடி வந்த இடத்தில் பகவதி இறந்து போனாள் என்ற உண்மையை இங்கு வந்ததுமே நீஎன்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா? எல்லோருமாகச் சேர்ந்து அதை மறைத்தீர்கள். தளபதியைப் போர்க்களத்துக்கு வரவிடாமல் செய்தீர்கள். அவற்றால் எத்தனை பெரிய உள்நாட்டுக் கலகம் எழுந்து விட்டது. மகா மண்டலேசுவரர் மாண்டு போனார். இடையாற்று மங்கலம் தீயுண்டு அழிந்து விட்டது. இன்னும் என்ன நடக்க வேண்டும் அப்பா? எல்லாவற்றையும் கேட்டு விட்ட பின்பும் துக்கத்தையும் தாங்கிக் கொண்டு சாக மாட்டாமல் உட்கார்ந்திருக்கிறேன் நான்" என்று தன் தாயின் வாயிலிருந்து மகாமண்டலேசுவரரின் மரணச் செய்தியைக் கேட்ட போது அப்படியே இக்பிரமை பிடித்துப் போய் அயர்ந்து கிடந்தான் இராசசிம்மன். பயமும், திகைப்பும் உண்டாக்கும் அந்தத் துயரச் செய்தி மனத்தில் உறைத்து நாவுக்குப் பேசும் ஆற்றல் உண்டாகச் சில கணங்கள் பிடித்தன அவனுக்கு. அவனால் அதை நம்புவதற்கே முடியவில்லை.

"அம்மா! மகாமண்டலேசுவரர் இறந்துவிட்டார் என்று உண்மையாகவே சொல்கிறீர்களா, அல்லது என்னைச் சோதனை புரிகிறீர்களா?"

"சோதனை நான் செய்யவில்லையப்பா! உன்னையும், என்னையும், இந்தத் தேசத்தையும் விதி சோதனை செய்கிறது. தெய்வம் சோதனை செய்கிறது. நம்பிக்கைகள்

சோதனை செய்கின்றன" என்று சொல்லிக் கொண்டே குலுங்கக் குலுங்க அழுதார் மகாராணி.

"மகாராணி மனங் குழம்பிப் போயிருக்கிறார்கள். நடந்தவற்றை நாங்கள் சொல்கிறோம்" என்று அதங்கோட்டாசிரியரும், பவழக்கனிவாயரும் அங்கு வந்தார்கள். எல்லாவற்றையும் அவர்களிடம் கேட்டு அறிந்தபோது அவனும் தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். அவனுக்கும் அழுகை பொங்கிக் கொண்டு வந்தது.

"அம்மா! விழிஞத்தில் இறங்கியதும் பகவதியின் மரணத்தை யாருக்கும் கூற வேண்டாமென்று மகாமண்டலேசுவரர் தான் வாக்குறுதி வாங்கிக் கொண்டார். தளபதி சிறைப்படுத்தப் பட்டிருக்கும் செய்தியும் இரகசியமாக இருக்க வேண்டுமென்று அவர்தான் சொன்னாரம்மா! தளபதி சிறையிலிருந்து தப்பித் தங்கையின் மரணத்தைத் தெரிந்து கொண்டதுமல்லாமல் அதற்கு மகாமண்டலேசுவரர் தான் காரணமென்று தப்பாக அவர்மேல் வன்மம் கொண்டு விட்டான். அதன் விளைவுகள் இவ்வளவு கொடுமையாக முடியுமென்று நான் நினைக்கவே இல்லை, அம்மா! இங்கேதான் இப்படி என்றால் அங்கே போர்க்களத்திலும் புகுந்து கலகம் செய்து பாசறையிலுள்ள தென்பாண்டி வீரர்களையெல்லாம் மனம் மாற்றி இழுத்துக் கொண்டு போய் விட்டார்கள். உங்களையும், மகா மண்டலேசுவரரையும் கலந்து கொண்டு தளபதி வல்லாளதேவனை எப்படியாவது சமாதானப்படுத்திப் போர்க்களத்துக்கு அழைத்துச் செல்லலாமென்று நான் ஓடி வந்திருக்கிறேன். இந்தச் சமயத்தில் நீங்கள் இவ்வளவு பெரிய பேரிடியை என் காதில் போடுகிறீர்கள். நான் என்னதான் செய்யப் போகிறேனோ? இப்போதுள்ள படைகளை வைத்துக் கொண்டு இன்னும் இரண்டு நாள் போரைக்கூடச் சமாளிக்க முடியாதென்று சக்கசேனாபதி கையை விரித்து விட்டார்."

"போரைச் சமாளித்து வெற்றி பெற்றாலும் இனி என்ன பயன் மகனே? கடமையையும், நன்றியையும் போற்றிவந்த தூய வீரனாக இருந்த தளபதி கண்மூடித்தனமான வெறிச் செயலில் இறங்கிவிட்டான். கூற்றத் தலைவர்களும் அவனோடு சேர்ந்து கொண்டு விட்டார்கள். எவ்வளவோ சாமர்த்தியமாக இருந்த மகா மண்டலேசுவரரும் கெடுமதி நெருங்கியதாலோ என்னவோ, இப்படியெல்லாம் செய்து நம்மை அழித்துக் கொண்டு விட்டார். தளபதியைச் சிறைப்படுத்தியும், பகவதியின் மரணத்தை மறைத்தும் — அவர் சூழ்ச்சிகள் செய்திராவிடில் இந்தக் கலகமே ஏற்பட்டிராது. அழியப் போகிற தீவினை விளைவு நெருங்கி விட்டால் எவ்வளவு பெரிய அறிவாளிக்கும் நாணயம் தவறிவிடும் போலிருக்கிறதே!" என்று மகாராணி குமாரபாண்டியனுக்கு விரக்தியோடு மறுமொழி கூறினார்.



கும்பகோணம் காஞ்சி காமகோடிபீடம் ஏஜண்டு திரு ஏ. ஆர். சேஷய்யா சாஸ்திரிகள் புதல்வி சௌ. பத்மாவுக்கும் கோனேரி ராஜபுரம் மிராசுதார் திரு ஸ்ரீநிவாஸ அய்யரின் புதல்வர் திரு பாலசுப்பிரமணியனுக்கும் திருமணம் நடைபெற்றது.

---

"அம்மா! நீங்களும் இப்படி மனம் வெறுத்துப் பேசினால் நான் என்ன செய்வது? சேரநாட்டுப் படைத் தலைவனும், பெரும் பெயர்ச் சாத்தனும் இந்தப் போரில் வீர மரணம் அடைந்தார்கள். கடல்கடந்து வந்த சக்கசேனாபதி இரவும் பகலும் நம் வெற்றிக்காக முயல்கிறார். இந்தச்சமயத்திலா தளர்வது? வாருங்கள்! நானும் நீங்களுமாகப் போயாவது தளபதியைக் கெஞ்சிப் பார்க்கலாம். அவன் மனம் இரங்காமலா போய்விடுவான்? அம்மா! எல்லாத் துன்பங்களையும் மறந்து புறப்படுங்களம்மா. கடைசியாக முயல்வோம்" என்று தாயின் பாதங்களைப் பற்றிக் கொண்டு கெஞ்சினான் இராசசிம்மன். மூன்றாம் நாள் காலை பதினொரு நாழிகைக்குள் தளபதியோடு போர்க் களத்துக்கு வரவில்லையானால் வெற்றியைப் பற்றி நினைப்பதற்கில்லை யென்று சக்கசேனாபதி கூறியனுப்பியிருந்த நிபந்தனையையும் தாயிடம் கூறி முறையிட்டான் அவன்.

அவனுக்குப் பதில் சொல்வதற்காக மகாராணி வாயைத் திறந்தார். அவர் பேசத் தொடங்குமுன் அரண்மனை வாயிலில், 'விடாதே! பிடி; கொல்லு' என்ற

வெறிக் குரல்களோடு பலர் ஓடிவரும் ஓசையும் "ஐயோ! காப்பாற்றுங்கள்" என்று ஓர் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து ஓலமிட்டு அபயம் கோரும் அடைக்கலக் குரலும் எழுந்தன. அதைக் கேட்டு யாவரும் திடுக்கிட்டுத் திகைத்தனர். "இராசசிம்மா! ஓடு; அது என்னவென்று போய்ப் பார்" என்று மகனைத் துரத்தினர் மகாராணி. இராசசிம்மன் உட்பட எல்லோருமே அந்தக் குழப்பம் என்னவென்று பார்ப்பதற்காக எழுந்து வாசற்புறம் ஓடினார்கள். மகாராணி, விலாசினி, புவனமோகினி ஆகிய பெண்கள் மட்டும் போகவில்லை.

அரண்மனையின் பராந்தகப் பெருவாயிலில் மூடு பல்லக்கு ஒன்று கொண்டு வந்து இறக்கி வைக்கப்பட்டிருந்தது. பின்னால் உருவிய வாள்களும், வேல்களுமாக, யாரோ சில முரட்டு மனிதர்கள் துரத்தி ஓடிவந்து கொண்டிருந்தார்கள். மூடு பல்லக்குக்கு அருகிலிருந்து குழல்மொழியும், நாராயணன் சேந்தனும் அபயக் குரல் கொடுத்து அலறியவாறு உள்ளே ஓடிவந்து கொண்டிருந்தார்கள். என்ன கூப்பாடு என்று பார்ப்பதற்காக வெளியே வந்த குமாரபாண்டியனும், மற்றவர்களும் இந்தக் காட்சியைக் கண்டு திகைப்பும், வியப்பும் அடைந்து மருண்டு போய் நின்றனர். இன்னதென்று விளங்கிக் கொள்ள முடியவில்லை.

பின்னால் துரத்திவந்த கூட்டம் கணத்துக்குக் கணம் அதிகமாயிற்று. ஆயுத பாணிகளாகத் தாக்குவதற்கு ஓடிவருவது போல் வந்த அவர்களுடைய வெறித்தனமும், கூப்பாடுகளும் பெருகின. உள்ளே உட்கார்ந்திருந்த மகாராணி முதலியவர்களும் ஆவலை அடக்க முடியாமல் பார்ப்பதற்காக எழுந்து ஓடிவந்துவிட்டார்கள். 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்' என்று அலறிக் கொண்டே ஓடி வந்த குழல்மொழியும், சேந்தனும் மகாராணியின் காலடியில்விழுந்து வணங்கினார்கள். அவர்கள் இருவரும பயந்து நடுங்கி முகத்தில் கொலையச்சம் பரவியது போல் தோற்றமளித்ததை எல்லோரும் கண்டனர். இருவரும் ஓயாமல் அழுதிருந்த சாயல் தெரிந்தது.

"தாயே! எங்களைக் கொல்ல ஓடி வருகிறார்கள். நீங்கள்தான் அடைக்கலம் அளித்துக் காப்பாற்ற வேண்டும்" என்று மகாராணியிடம் முறையிட்டுக் கதறினார்கள் குழல்மொழியும், சேந்தனும். எல்லோருக்கும் அவர்கள் நிலை ஒருவாறு புரிந்து விட்டது.

உடனே குமார பாண்டியன் வாயிற்புறம் பார்த்தான். கலகக் கூட்டம் வரம்பு மீறிக் காவலைக் கடந்து உள்ளே நுழைய முயன்று கொண்டிருந்தது.

"காவலர்களே! பராந்தகப் பெருவாயிலை மூடிவிட்டு உட்புறம் கணைய மரங்களை முட்டுக் கொடுங்கள். கோட்டைக்குள் யாரும் நுழைய விடாதீர்கள்" என்று சிங்க முழக்கம் போன்ற குரலில் கட்டளையிட்டான் இராசசிம்மன். அடுத்த விநாடி ஒன்றரைப் பனை உயரமும் முக்காற் பனை அகலமும் உள்ள அந்தப் பிரம்மாண்டமான கதவுகள் மூடப்படும் ஒலி அரண்மனையையே அதிரச் செய்து கொண்டு எழுந்தது.

"குழல்மொழி! எங்களையெல்லாம் தவிக்க விட்டுப் போய்விட்டாரே அம்மா உன் தந்தை? அவர் இருந்த பெருமைக்கு இப்படியெல்லாம் ஆகுமென்று யாராவது எதிர்பார்த்தோமா!" என்று தணிக்க முடியாமல் கிளர்ந்தெழும் துக்கத்தோடு அந்தப் பெண்ணைத் தழுவிக் கொண்டு கதறினார் மகாராணி. குழல்மொழி குமுறிக் குமுறி அழுதாள்.

"தேவி! அவருடைய காலம் முடிந்துவிட்டது. எங்களைத் தப்பி வாழச் செய்துவிட்டு அவர் போய்விட்டார். இரவோடு இரவாக இடையாற்றுமங்கலத்திலிருந்து நாங்கள் இருவரும் முன்சிறைக்குப் போய்விட்டு இப்போது இங்கு ஒரு முக்கியக் காரியமாக வந்தோம். யாருக்கும் தெரியாமல் மூடுபல்லக்கில் வந்தோம். அரண்மனைக்கு அருகில் வந்தபோது இந்தக் கலகக்காரர்கள் எப்படியோ தெரிந்து கொண்டு துரத்தத் தொடங்கிவிட்டார்கள். நல்லவேளையாகக் காப்பாற்றி அபயமளித்தீர்கள். தம்முடைய அந்திம நேரத்தில் மகாமண்டலேசுவரர் தங்களிடம் சேர்த்துவிடச் சொல்லி ஒரு ஓலையை என்னிடம் அளித்துச் சென்றார்" என்று சொல்லிக் கொண்டே இடுப்பிலிருந்து அந்த ஓலையை எடுத்தான் சேந்தன். துக்கம் அவன் குரலையே மாற்றியிருந்தது.

(அடுத்த இதழில் முடியும்)

கொச்சைத் தமிழ்

## வேண்டாத எழுத்துக்கள்!

நல்ல சில சொற்களில் வேண்டாதஎழுத்துக்கள் புகுந்து விகாரப்படுத்தும் பொழுது அவை கொச்சைத் தமிழாகி விடும். எண்பது என்பது ஒரு நல்ல சொல். அதை 'எண்பனது' என்று விகாரப்படுத்துவர் தஞ்சை நாட்டார். இப்படியே 'சேவை, கோவை, தேவை' என்னும் சொற்கள் முறையே 'சேர்வை, கோர்வை, தேள்வை' என்று கொச்சைத் தமிழில் வழங்குகின்றன.

— பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை




LIFEBUOY
SOAP

**லைப்பாய் சோப்பினால்**
ஸ்நானம் செய்தீர்களானால்
ஆஹாஹா! குளுகுளுவென்ற
மலர்ச்சி! கிளுகுளுவென்ற
ஆரோக்கியம்!

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு L/P. 1-X29TM

# தியாகராஜர் அருளிய ஆத்ம தனம்

கி. சந்திரசேகரன்

## The Spiritual Heritage of Thyagaraja

தென்னாட்டின் தனிப் பெருமைக்கு எவ்வளவோ தகுதிகளைக் காட்டலாம். மற்றவை, இந்தியா தேசத்தைச் சேர்ந்த மற்ற மக்களுக்கெல்லாம் பொது சொத்தாயினும், சங்கீதத் துறையில் பிரத்தியேகமாய்க் குறிப்பிடத் தகுந்த உயர்வு இதர இடங்களில் காணப்படாதென்றே தைரியமாய்ச் சாதிக்கலாம். கர்நாடக சங்கீதம் வளர்ச்சி பெற்றதின் மூலகாரணம், திருமூர்த்திகள் என்று வழங்கப்படும் ஸ்ரீ தியாகராஜ சுவாமி, ஸ்ரீ முத்து சுவாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாமா சாஸ்திரி, இம்மூன்று இணையிலா விற்பன்னர்களின் கலையாட்சியே. அநேகமாய் இவர்கள் மூவரும் வசித்த காலம், பிறந்த இடம், முதலியவை ஆச்சரியத்துக்குகந்த விதம் ஒன்றாய் இருப்பதுதான். மூவரின் விசேஷ அம்சங்களைக் குறித்தும், அவர்கள் ஆற்றிய கலைத்தொண்டுகளைப் பற்றியும் அறியப் புகுவது கர்நாடக சங்கீதத்தையே உபாசிப்பதற்கு ஈடாகும். ஆயினும், இவர்கள் ஒவ்வொருவரும் தம்தம் வழியே சிறப்பெய்தியவர். அதிலும், ஸ்ரீ தியாகையரின் தெலுங்கு கீர்த்தனங்களும் கற்பனைகளும் தெவிட்டாத இன்பம் விளைவிக்கும் கருவிகளாய் இருப்பதை, தென்னாடு தமிழ்நாடாய்த்தான் இனித் திகழும் என்போருக்கும், ஓர் அற்புதப் புதையலாகவே நினைக்கத் தோன்றும். நீர்வீழ்ச்சியைப் போல ராமபக்தி ஸ்வரசாகித்திய லய ரூபங்களில் இம் மகானிடம் பெருகியதை ஒருவராலும் உணராதிருக்க முடியாது.



“ஐயர்வாள்” கிருதிகள் என்றால் ஸ்ரீ தியாகய்யருடையவையே. தெலுங்கு வேறு பாஷை, நம் பாஷையல்ல என்ற எண்ணத்தையே மறக்கடித்த பாஷை— சங்கீத பாஷை — தியாகய்யருடையது. கலை பேசுவதே பேச்சு என்ற உண்மையை உணர வைத்தவர் அவர்தாம். இதயம் ராமனையே நினைந்துருகியதைத் தியாகராஜரிடம் பார்ப்பதற்கு முன் வால்மீகி மகரிஷியிடமே இந் நாட்டு மக்கள் அறிந்திருந்தார்கள் எனலாம். ஐயர் இயற்றிய கீர்த்தனங்களின் முழுக் கணக்கெடுத்தவர் ஒருவரும் இன்னும் ஏற்படவில்லை. ஆயினும் ஆர்வம் மிகுந்தவர்கள் தங்களால் இயன்றவரையில் சரியான பாடங்களுடன் தாங்கள் அறிந்த உருப்படிகளை ரசிகர்களின் செவிகளுக்கு அர்ப்பணம் செய்து வந்திருக்கிறார்கள். அவர்களில் இன்று முக்கியமாய்க் குறிப்பிடத் தகுந்தவர் காலஞ்சென்ற ஸ்ரீ ராமாநுஜாச்சாரியார். எத்தனையோ பரோபகாரங்களை முக்கியமாய் ஏழைகளுக்குச் சலிப்பின்றிச் செய்தவர் அவர். ஸ்ரீ ராமகிருஷ்ண இல்லம் என்றதுமே அவருடைய வடிவம் மக்கள் கண்முன்னே எழும். பல தொண்டுகள் ஆற்றியபோதிலும், இன்று ஒப்பிட முடியாத பெரியதொரு சேவையை ரசிகர்களுக்கும் அவர் வழங்கிவிட்டு மறைந்திருப்பதைப் பாராட்டாமலிருப்பது இயலாது. திருமயிலை மாடத் தெருக்களில் மார்கழிமாதம் விடிவேளை பஜனையை ஓர் நிரந்தர வழக்கமாய் நிறுவியபெரியார் அவர்தாம். அம்மாதிரிபஜனையில் தியாகராஜ சுவாமிகளின் அருமையான கீர்த்தனைகளைப் புதிது புதிதாகச் சாதகம் செய்து, அவ்வப்பொழுது சந்தர்ப்பங்களுக்கு உரித்தவாறு பாட முன் வந்தவரும் அவர்தாம். அரிய சங்கீத வித்வத் பரம்பரையைச் சார்ந்தவர்களுடன் தொடர்பு கொண்டு, தம் ஆற்றல் அவ்வளவையும் உபயோகித்து ஐயர்வாள் கிருதிகளில் பலவற்றைப் பாடம் செய்தும், சேகரித்தும், என்றைக்காவது அவைகளை வெளியிட வேண்டுமென்ற ஆவலைப் பூண்டும் ஒழுகியவர் அவரைத் தவிர வேறு ஒருவர் நம் மத்தியில் இருந்ததில்லை.

சுமார் 565 பாட்டுக்களையும், அவைகளுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பைச் செய்து வைத்தும் காத்திருந்தார் சமயத்தை எதிர்பார்த்து. உண்மை உழைப்பு வீண் போகாதல்லவா? அவருக்கு ஏற்பட்ட ஆசை பூர்த்தியாவதற்கான காலமும் கிட்டியது. அதுதான் டாக்டர் வே. ராகவன் அவர்களும் சென்னை சங்கீத அகாடமியின் பொருட்டு, தியாகராஜரின் நூற்றாண்டு விழாவுக்காகத் தம் வழியே சிற்சில செய்திகளைச் சேகரித்து வந்த சமயம், ஒருவரையொருவர் நெருங்க வேண்டிய வேளை கிட்டியது. அவ்வளவே; டாக்டர் ராகவனுடைய உழைப்புத் திறமையையும், பரந்த நூலாராய்ச்சி அறிவையும் தம்முடைய முயற்சிக்கு உபயோகித்துக் கொள்ளும் அவா ஸ்ரீ ராமாநுஜாச்சாரியாரிடம் உண்டாகியது. அன்று தொடங்கி இருவரும் சேர்ந்து சிறிதும் சிரமத்தை மதியாமல், எப்படியும் கிடைத்துள்ள கிருதிகளை மொழிபெயர்ப்புடன் அச்சிட்டு ரசிக உலகுக்கு அளித்து விடுவதெனத் தீர்மானித்

தனர். அச்சமயமே காகரலிபியில் தெலுங்கு கீர்த்தனங்களை வெளியிட்டால், இந்தியா முழுவதுமே பலர் வாசிக்க இயலுமென்ற கருத்து தோன்றத் தொடங்கியது. ஆகவே மூல பாடங்களை காகர அட்சரங்களில் வெளியிடுவது, ஆங்கில மொழியில் விளக்கம் தருவது என்ற முடிவுக்கு வந்தனர். அதன் பயனாக இன்று பருமனான அழகிய புத்தக வடிவில் பெறும் பாக்கியத்தை காம் அடைந்துள்ளோம்.

ஆனால் தெலுங்கிலுள்ள 'த்ஸ' 'ழ்ஸ' போன்ற உச்சரிப்புகளுக்காக இங்கு காகர அட்சரங்களில் எழுத்துக்களைச் சேர்த்துக் கொடுக்கவில்லை. அதனால், சாகித்யத்தை காகரத்தில் வாசிப்பது குறைபாட்டுடன் இருப்பதாகவும் படவில்லை. காகரலிபியில் இருப்பதால் பல சௌகரியங்கள் இருப்பதும் புலனாகும். ஆங்கில மொழியில் அர்த்தத்தை விளக்கியிருப்பது, தெலுங்கை அறியாதவர்களுக்குத் தியாகராஜ சுவாமிகளின் கவிதையையாவது அறிவதற்கு வசதி அளித்ததாய் காம் கொள்ளவேண்டும். மற்றப்படி கவிதையையோ அல்லது கீர்த்தனையையோ வேறு ஒரு பாஷையில் அழகான வடிவுடன் உயிர்ப்பிப்பதென்பது இயலாத காரியம்.

இந்தப் பெரும் முயற்சியின் முதல்தரமான விசேஷ அம்சம் இதிலுள்ள முன்னுரையே. டாக்டர் வே. ராகவன் அவர்களின் சலிப்பின்றி வளரும் உழைப்புக்கும், செய்தித் திரட்டின் வளத்துக்கும் இடமேற்பட்டிருப்பதும் கமக்கு ஓர் நன்மையே. இருநூறு பக்கங்களில் தியாகையரின் வாழ்க்கை வரலாறு, அவர் இயற்றிய சாகித்தியங்களின் அர்த்த விசேஷங்கள், அவருடைய பக்தி வெள்ளத்தின் வேகம், அவருடைய இடையறாத ராமகாம ஜபம், அவரிடமுள்ள கவிதை வரம், அவர் சாகித்தியங்களில் காணும் பொருட்செறிவு, பக்தி செய்வதிலும் காயக—காயகி பாவங்களைத் தொன்மை மரபே வந்த முறையைக் கையாளுவதிலும் தனியானதோர் புதுமை அவரிடம் வெளியானது, அவர் செய்த உபாசனைகள், அவர் உருவாக்கிய பூஜைக்குரிய சாகித்தியங்கள், அவருடைய பரந்த சாஸ்திர அறிவு, உலக ஞானம், வேதாந்த விசாரம் முதலியவைகள் மிக மிக நுணுக்கமான ஆராய்ச்சி பலத்துடன் விவரிக்கப்பட்டிருப்பதை ரசிகர்கள் கவனித்து இன்புறுவார்கள்.

முக்கிய இடங்களில் பாடாந்தரங்கள் இருப்பின், அவைகளையும் கீழே குறிப்பது இம்மாதிரி நூல்களில் ரொம்பவும் உபயோகமாயிருக்கும். மேலும் (Errata)வில் விட்டுப் போன சில வழுக்கங்களும் (Slips) காண்கின்றன. உதாரணமாக இரண்டாம் பக்கத்தில் சௌராஷ்டிர கீர்த்தனத்தில் கடைசி வரியில் 'விவித கதுல தலங்குமணி' என்றிருக்கிறது. 'விவித கதுலநிம் தலங்குமனி' என்பது தான் சரியான பாடம். பாடகர்கள் பலரும் ஒப்புக்கொள்வார்கள். 262-ம் பக்கத்தில் 'ஸீதம்ம மாயம்ம' என்ற லலிதா ராக கீர்த்தனத்தில் வரும் நாதபரதாதனு என்றிருப்பதை தாதபர தாதனு என்று மாற்றினால் சுவாரஸ்யமுள்ளதாக சாகித்தியம் விளங்கும். வாத்ஸல்யத்துடன் பரதனைக் குறிப்பிடுவதன் பொருத்தமும், முன் அடியில் உள்ளவர்களுடன் அவனை ஒப்பிடுகையில் நன்கு தாத என்பதின் பிரயோகமும் தெளிவாகும். இங்கே குறிப்பவை யெல்லாம் குறை கூறுவதாகக் கருதப்படமாட்டா என்ற எண்ணத்தில் எழுதுபவை.

வண்ண மலருக்கு வாசனையும் நிரம்பி விட்டாற்போல் ஆயிருக்கும், தலைசிறந்த வாக்கேயக்காரருடைய கலை சூட்சுமங்களையும் முன்னுரையில் வேண்டிய அளவு குறித்திருந்தால் சங்கீதகர்த்தா ஒருவரைப் பற்றிய நீண்ட வியாசத்தில் அவருடைய கலையின் விசேஷ அம்சத்தையும் எடுத்துக் காட்டுவது இன்றியமையாததல்லவா?

அடுத்த பதிப்பில் இந்தச் சிறு குறையையும் நீக்கிவிடுவார்கள், இதன் பொறுப்பை உணர்ந்தவர்கள் என்று கம்பி, அரிய பெரிய சாதனை என்றே இந்தப் புஸ்தகத்தை வாழ்த்துகிறோம்.

பிரசுரம்: ராமகிருஷ்ண மிஷன் மாணவர் இல்லம், மயிலாப்பூர், சென்னை—4. விலை ரூ. 10; காலிகோ ரூ. 11.

## சமர்த்துப் பையன்!



## பிரபல திருமணம்



திருவளர் தருமராஜன் செள. ஜெயகுமாரி

சென்னை ஜெயா மான்ஷன்ஸ் அதிபர் எஸ். பி. சீனிவாச நாடார் பேத்தியும், என். வி. ஷண்முகம் அண்டு கம்பெனியின் பார்ட்னர், பிரைட்டன் டாக்கீஸ் உரிமையாளர், எவரெஸ்ட் போர்டிங் அண்ட் லாட்ஜிங் பார்ட்னருமான திரு எஸ். பி. ராமையா நாடாரின் குமாரியுமாகிய செள. **ஜெயகுமாரிக்கும்**, சென்னை திருவொற்றியூர் ஹைரோடு, பட்டினத்தார் மார்க் பருப்பு வகை, பிரபல வர்த்தகர் புன்னைவன நாடார் குமாரர் திருவளர் **தருமராஜனுக்கும்** 1-6-59 அன்று தியாகராயா கல்லூரியில் திருமண வைபவம் இனிது நடைபெற்றது. முதன் மந்திரி கனம் காமராஜ் அவர்கள், நீதிபதி திரு சோமசுந்தரம் அவர்கள் மற்றும் பல பிரமுகர்கள் ஆசி கூறியும் திருவாளர்கள் நீதிபதி டபிள்யூ. எஸ். கிருஷ்ணசாமி நாயுடு, நீதிபதி சுப்ரமணிய நாடார், நீதிபதி நடராஜ நாடார், டாக்டர் மு. வரதராசனுர் மற்றும் பிரபல வர்த்தகர்கள் விஜயம் செய்தும் திருமணத்தைச் சிறப்பித்தனர். தபால், தந்தி மூலமாக ஏராளமான வாழ்த்து, ஆசிச் செய்திகள் குவிந்தன. மாலையில் திரு டி. எம். செளந்தரராஜன் குழுவினரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.

அத்தியாயம் 23

## பொல்லாத்தனம்

பாபு அந்த ஒற்றையடிப் பாதையை விட்டு ஒதுங்கி நின்று கொண்டான். ஆனால் பின்தொடர்ந்து வந்த உருவம் அவனைத் தாண்டிச் செல்லவில்லை. பாபுவுக்கு இப்பொழுதுதான் அது மீசைப் பக்கிரி என்பது விளங்கியது.

"நீயா கயினு? எப்படிப் பயந்திட்டேன், தெரியுமா? ஒரு குரல் கொடுக்கப்படாது?" என்றான் பாபு.

"சரிதாண்டா, ரொம்பப் பயந்தவரு தான்!" என்று தொண்டையைக் கனைத்துக்கொண்டான் பக்கிரி.

"வீடு பூட்டிக் கிடந்ததே!"

பக்கிரி கோழையைக் காறித் துப்பி விட்டு, "பூட்டியா இருந்திச்சி? ம்......சரி, பையிலே எவ்வளவு துட்டு இருக்கு?" என்று எடுத்த எடுப்பிலே விஷயத்துக்கு வந்து விட்டான்.

"பைசா ஏது?"

"பாருடா சரிதான்! தெரியாது எனக்கு?"

உஷா கொடுத்திருந்த கன்கொடையைத் தவிர, அவனிடம் ஒரு பைசாகூட உண்மையில் இல்லை. ஆனால் மீசைப் பக்கிரியிடம் பேசிப் பயனில்லை. அவன் வெறும் முட்டாளாக இருந்தால் ஏதோ பேசியனுப்பிவிடலாம்; மூர்க்கன். பேசினாலும் ஏறாது; போகவும் பாட்டான். காலைச் சுற்றின பாம்புதான்.

"மாசா மாசம்தான் சம்பளத்தைக் கொடுத்திடறேனே! எங்கிட்டே வேறே காசு ஏது?"

"இருக்கும்டா பாரு! சம்பளப் பணத்தை அப்படியே புனுசாத்தான் கொடுத்துடுவே! தெரியாது எனக்கு?"

"சரி; நீ சொன்னா கேக்க மாட்டே; வழியை விடு. நேரமாயிட்டுது எனக்கு. அப்புறம் அம்மா ஏதாவது சொல்வாங்க!" என்று கூறிக்கொண்டே சைக்கிளை உருட்டப் போனான் பாபு.

பக்கிரி சட்டென்று அவன் சட்டைப் பையைப் பிடித்துக் கொண்டு விட்டான். "ஏண்டா, மனுசன் கேக்கிறானேன்னு மதிப்பாப் படல்லியோ? பெரிய ஆபீசரு. பாரு! நேரமாயிட்டுதோ?" என்று உறுமினான்.

"சரி, கையை எடு, சொல்றேன்!" என்றான் பாபு.

முதலில் இருவருமே சாந்தமான குரலில்தான் பேசினார்கள். ஆனால் சற்றைக்கெல்லாம் எரிமலை வெடிப்பது போல் இருவரும் குமுறினார்கள். உயிர்போனாலும் சங்கத்துப் பணத்தை இழக்கத் தயாராக இல்லை பாபு. பக்கிரியும் கையை எடுப்பதாக இல்லை. அவன் கையில் நோட்டுகள் மொடமொடத்தன. கைப்பிடிக்குள் சிக்கியதைக் கைநழுவ விட்டு விட அவனுக்குப் பைத்தியமா?

"அது சங்கத்துப் பணம்! வம்பு செய்யாதே!" என்றான் பாபு.

"என்னைவிட உனக்குச் சங்கம் பெரிசாப் போயிட்டுதோ? சங்கத்துப் பணம் இங்கத்தாண்டா போகும். மரியாதையாகக் கொடுத்திடு. மதிப்பு இழந்திடுவே!"

பக்கிரிக்கு இப்பொழுது முகத்தில் மீசைமட்டும்தான் குத்துப் போல் இருந்தது. ஒரு காலத்தில் அது அவனுக்குப் பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால் முகமெல்லாம் துர்ப்பழக்கங்களினாலும் அதனால் சரியான உணவு இல்லாமையினாலும் வாடி ஒடுங்கிப் போயிருந்தது. அப்படியிருந்தும் பாபுவினால் அவனிடமிருந்து விடுபட முடியவில்லை. சைக்கிளில் மட்டும் காற்று இருந்திருந்தால் அவனைப் பிடித்திருக்கவே முடியாது. தப்பிச் செல்வது இருக்கட்டும்; முதலில் அந்தப் பக்கமாக அவன் ஏன் வந்திருக்கப் போகிறான்?

ஏதாவது ஒரு ரூபாய், இரண்டு ரூபாயாக இருந்தால் அவனிடம் கொடுத்துத் தொலைத்து விட்டுப் போயிருக்கலாம். இருப்பது மூன்றும் பத்து ரூபாய் நோட்டு!

"சரி; என்னோடு வா! சில்லறை மாத்தித் தருகிறேன்!"

"எத்தினி ரூபாய்க்குச் சில்லறை?"

"பத்து ரூபாய்க்கு..."

"பத்து ரூபாயா?"—பக்கிரி வாயைப் பிளப்பது நன்றாகத் தெரிந்தது. "சரி, நோட்டை எடு. நான் தரேன்!"

"வச்சுக்கிட்டேதான் எங்கிட்டேயும் பணம் கேக்கிறியா? ஒண்ணா, ரெண்டு வேணுமானால் தருவேன். அதுக்கு மேல் முடியாது. இல்லியோ எதுவுமே கிடையாது" என்றான் பாபு.

"சரி, நோட்டை எடு, வெளியே. அங்க உனக்கு; அங்க எனக்கு!" என்று சொல்லிவிட்டு, பக்கிரி மடியிலிருந்து நோட்டை எடுத்தான். இருளில் அது எவ்வளவு என்று சரியாகத் தெரியவில்லை.

ஆனால் அந்த ஒரு ரூபாய் நோட்டுகள் நாலாக மடிக்கப்பட்டிருந்ததால் தடிப்பாக இருந்தது. ஏதோ கிடைத்தது வரையில் மிச்சம் என்று எரிச்சலோடு பத்து ரூபாய் ஒன்றை உருவி எடுத்து அவன் கையில் வைத்தான் பாபு.

'ஏன் பத்தா கொடுத்திட்டா செத்தா போயிடுவே!' என்று சொல்லிக் கொண்டே பக்கிரி நோட்டை மடித்து வைத்துக்கொண்டு திரும்பிவிட்டான்.

இருட்டுக்கு வகிடு எடுத்ததுபோல் தோன்றிய ஒற்றையடிப் பாதை வழியே சைக்கிளை உருட்டிக்கொண்டு சென்றான் பாபு. ஏதோ செய்யத் தகாத பெரும் குற்றத்தைச் செய்துவிட்டது போல் அவன் நெஞ்சு படபடத்தது. வெறுப்பினால் உதடுகள் அசைந்தன. பெரிய சாலையை அடைந்ததும்தான் அவனுக்குச் சிறிது தெம்பு உண்டாயிற்று. சாலையைச் சேர்ந்ததுமே உஷாவின் பங்களா



தான் முதலில் இருந்தது. அதைத் தாண்டிக் கொண்டு போகும்போது அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கவே அவனுக்குத் தைரியம் வரவில்லை. ஆனால் அதையும் மீறிக்கொண்டு அவன் கண்கள் பங்களாவின் முகப்பைப் பார்த்தன. அங்கே உஷாவின் அறையில் மட்டும் வெளிச்சம் தெரிந்தது. மற்றப் பகுதிகள் யாவும் இருளோடு கலந்திருந்தன. ஒரு கணம் அவன் கால்கள் தயங்கின. வானத்துத் தாரகைபோல் அங்கே அவள் கண்ணில் படமாட்டாளா என்ற சிறு ஆசை அவனை உந்தியது. மறுகணமே அந்த ஆசையை அடக்கிக்கொண்டு கால்களை எட்டிப் போட்டான். அவனுடைய அந்தஸ்துக்கு இதெல்லாம் ஏற்குமா? அவள் எங்கே, அவன் எங்கே? அவள் கொடுத்த நன்கொடையை எடுத்து இன்னொருவனிடம் கொடுக்கத் துணிந்த ஒருவன் அந்தப் பங்களாவின் முன்னால் நிற்கலாமா?

சாலை வெறிச்சென்று நீண்டு வளைந்து சென்றது. விளக்கு வரிசைகள் அழகாக ஒளி காட்டிக் கொண்டிருந்தன. அவன் பிரிந்து செல்ல வேண்டிய இடம் வந்ததும் பக்கிரி கொடுத்த பணத்தை வெளியே எடுத்தான். பணத்தோடு ஒரு துண்டுக் கடிதமும் இருப்பது அப்போதுதான் தெரிந்தது! கடிதம் யாருடையது? உஷாவினுடையதா, பக்கிரியினுடையதா? ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து நோட்டுகள் சரியாக இருந்தன. நடுவே நீட்டிக் கொண்டிருந்த கடிதத்தை அவன் பிரித்தான். அது கடிதத்தின் பிற்பகுதியாக இருக்க வேண்டும். முற்பகுதி உள்ள கடிதத்தைக் காணோம். அதில் நாலே வரிகள்தான் கம்பளிப் பூச்சிபோல் தெரிந்தன. யாருடைய கடிதம் என்று அறியும் முயற்சியில் அவன் அதைப் படிக்கலானான்.

"அவரே பட்டணத்துக்கு வருவதால் அங்கேயே போய்ப் பார்க்கலாம். என் பெயரைச் சொன்னால் போதும். அவர் தெரிந்து கொண்டு விடுவார். நானும் சொல்லியனுப்புகிறேன். இப்போதைக்கு வேண்டியதை அவரிடம் வாங்கிக் கொள்ளலாம். 'பிளைவுட் அண்ட் கோ. (பிரைவேட்) லிமிடெட், இண்டிச் சாலை, அடையாறு' இந்த இடத்தில்தான் அவர் தங்கியிருப்பார். பிறபின்."

அடியில் கையெழுத்திட்டிருப்பது யார் என்று பார்த்தான் பாபு. "சபாபதியா பிள்ளை" என்று கோணல் மாணலாக எழுதப்பட்டிருந்தது. அவனுக்கு அந்த விஷயம் மனத்திலே பதியவேயில்லை. அவன் எண்ணமெல்லாம் மறுநாள் அந்த ஐந்து ரூபாயை எப்படி ஈடு செய்வது என்பதிலேயே லயித்திருந்தது. முதலில் அந்தக் கடிதத்தைத் தூக்கி எறிந்துவிட எண்ணினான். ஆனால் அது உஷாவுடையதாக இருந்தால் என்ன செய்வது என்று பையிலேயே வைத்துக் கொண்டான். பக்கிரிக்கு வந்ததாக இருந்தாலும் இருக்கலாம். பிறரிடம் கேட்டுப் பணமோ, பொருளோ வாங்கிக் கொள்ளும் நிலையில் இருப்பவன் அவன்தானே? அந்த நாலு வரிகளைக்கூட ஏன் படித்தோம் என்று உறுத்தலாக இருந்தது அவனுக்கு. இந்த வேதனையோடு நேரம் அதிகமாகி விட்ட கவலையும், மறுநாள் ஐந்து ரூபாய் வேண்டுமே என்கிற கவலையும் சேர்ந்துகொண்டு அவனை விரட்டின. பசி வயிற்றைக் கிள்ளியது.

சைக்கிளை ஓசைப்படாமல் கொண்டு போய் விட்டுவிட்டு, அவன் பின்புறமாகச் சமையற்கட்டை நோக்கிச் சென்றான். அங்கே விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சேகர் அப்போதுதான் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். சமையல்காரன் முகம் கோபத்தினால் சிடுசிடுப்புடன் விளங்கியது. தனியாக அகப்பட்டுக் கொண்டால் அவன் சிப்பல் கரண்டியாலேயே இரண்டு போட்டாலும் போட்டு விடுவான். நல்ல வேளை! சேகர் இருக்

தான். அவனைக் கண்டாலே எல்லாருக்கும் பயந்தான். யாராக இருந்தாலும் வாயைத் திறக்க மாட்டார்கள். பாபு கைகால் முகத்தைக் கழுவிக் கொண்டு ஓர் இலையை எடுத்துப் போட்டுக் கொண்டான்.

"எங்கேடா, வரவர ராத்திரி வேளையில் நேரம் கழித்து வருகிறாய்?" என்று மிரட்டினான் சேகர். அவன் ஊர் சுற்றி விட்டு அத்தனை நேரத்துக்கு மேல் வந்து சாப்பிடுவதைப் பாபு கேட்க முடியுமா?

சமையற்காரன் கோபம் அவன் பரிமாறிய தினுசிலேயே தெரிந்தது. அதைக் கவனித்த பாபு அநேகமாகச் சாப்பிட்டு முடித்த சேகரைப் பார்த்து விட்டு, "நேரமானால் நீங்க வேணுமானால் போங்களேன்; நானே பாத்துக்கறேன்!" என்றான் சமையற்காரனிடம்.

சேகர் அவனை முறைத்துப் பார்த்து விட்டு, "அடே! கை எரியச் சம்பளம் கொடுத்தவனுக்குக் கூட அத்தனை கரிசனத்தைக் காணோமாம். இவர் பாவம், கரைந்து உருகிப் போகிறாரே. ஒரு நாள், இரண்டு நாள் இப்படி நேரம் ஆகிவிடக் கூடாதோ?" என்றான் அலட்சியமாக.

சமையற்கார நடேசனுக்கு ரோசம் வந்து விட்டது. "மாசத்திலே ஒரு நாள் இரண்டு நாள்தான் நான் நேரத்திலே வேலை முடிஞ்சு வீட்டுக்குப் போறேன். நாளைக்கு அம்மாகிட்டே கண்டிப்பாச் சொல்லிடப் போறேன். தாராளமாக வேறே ஆள் பார்த்துக்கிடட்டும்!" என்றான்.

"என்னடா, புதுசா கல்யாணம் ஆனவனைப்போல் மிரட்டிப் பாக்கறே?" என்றான் சேகர். பிறகு சிறிது தணிந்து, விட்டுக் கொடுக்கும் நேயமான குரலில், "இந்தா—பாபு தானே எடுத்துப் போட்டுக்குவான். நீ போகணுமானால் உடனே ஒரு ரிக்ஷாவோ, டாக்ஸியோ வைத்துக் கொண்டு போ. இப்போ படம் அநேகமாக ஆரம்பிக்கிற சமயமாகத்தான் இருக்கும். தப்பினால் நியூஸ் ரீல்தான் நடக்கும்!" என்று தன் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாயை இடது கையால் விட்டெறிந்தான்.

"இல்லே—நான் போட்டுட்டே போகிறேன். நேரம் ஆனால் ஆகட்டும்" என்றான் நடேசன். ரூபாயைக் கண்டதும், உடனே தன் ரோசத்தை விட்டுக் கொடுக்க அவனுக்குப் பிடிக்கவில்லை. கொஞ்சம் பிகுவிலேயே இருந்தான். இது வெளிப்படையாகத் தெரிந்தது.

"பேசாமல் அண்ணா சொல்றபடி கேளுங்க.........எனக்கு வேணுங்கறதை எடுத்து வச்சுட்டா, நான் போட்டுக் கொள்கிறேன்!" என்றான் பாபு. அவனுக்கு ஐந்து ரூபாய் கடன் வாங்கக்கூடிய இடம் எதுவென்று இப்போது தெரிந்து விட்டது.

இதுதான் சாக்கு என்று நடேசன் வேண்டியதைப் பாபுவுக்கு எடுத்து வைத்துவிட்டு வேகமாக ஆடையை மாற்றிக்கொண்டு புறப்படப் போனான். ஐந்து நிமிஷத்துக்குள் அவனைப் பார்த்தால் ஆளே அடையாளம் தெரியவில்லை. கால் சட்டையும் கப்-சட்டையும் மாட்டிக்கொண்டு, பவுடர்-ஸ்னோ இவற்றைப் போட்டுக் கொண்டு ஜானவாச மாப்பிள்ளையைப்போல் அவன் காட்சியளித்தான்.

சேகர் உதட்டுக்குள்ளே சிரித்துக் கொண்டு, சமையற்கட்டைத் தாண்டிச் சென்றவனை மீண்டும் அழைத்து, "அப்பா, நடேசா! எதற்கும் பையிலே நெருப்புப் பெட்டி ஒன்றை எடுத்துப் போட்டுக் கொண்டு போ. அதைக்கூடக் காசு கொடுத்து அனாவசியமாக வாங்க வேண்டாம்!" என்று சொல்லி விட்டு, பாபுவைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினான். "இருட்டு வேளை பாரு, எல்லாவற்றுக்கும் கையோடு இருக்கட்டுமே!" என்று கூறினான்.

நடேசன் முகத்தில் கோபத்துக்குப் பதிலாக இப்போது அசடு வழிந்தது.



"நீங்க சொல்வதற்கு முன்னாலேயே எடுத்து வச்சிருக்கேன்!" என்று சொல்லிக்கொண்டே அவன் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

பாபு சாப்பிடுவதில் முனைந்திருந்தான். சேகர் கையைக் கழுவிவிட்டு வந்து, "அடே பாபு! நடேசன் எந்தப் படத்துக்குப் போவான், சொல்லு பார்ப்போம்! உனக்குத் தெரிகிறதா, பார்க்கலாம்!" என்றான்.

"தமிழ்ப் படமாகத்தான் இருக்கும், வேறு எது அவனுக்குப் புரியும்?"

"இவ்வளவுதானா நீ?"

"இல்லாவிட்டால் ஹிந்திப் படமா?"

"சீ சீ! அதுக்கெல்லாம் எவன் போவான்? டிரஸ்ஸைப் பார்த்தாலே தெரியவில்லையா? இங்கிலீஷ் படத்தைத் தவிர அவன் வேறு எதற்கும் போக மாட்டான்."

"இவனுக்கு அது புரிய வேண்டாமா?"

"என்னடா புரிய வேண்டும்? பேச்சுப் புரியாவிட்டால் என்ன? எல்லாரும் பேச்

# தமாஷ் தமாஷ்!

கடன் கொடுத்தவர்: வீட்டில் உங்களைப் பார்க்க வந்தால் நீங்கள் இருப்பதே இல்லை. என்ன காரணம்?

வாங்கியவர்: என் அதிர்ஷ்டம் தான் காரணம்!



குடியிருப்பவர்: நாங்கள் ஒரு புது சமுதாயத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். தெரிந்து கொள்ளுங்கள்.

வீட்டுக்காரர்: பேஷாய்ப் போங்கள். தாங்கள் பழைய எட்டு மாத வீட்டு வாடகையைக் கொடுத்துவிட்டு எங்கு வேண்டுமானாலும் போங்கள்!



செல்லாம் புரிஞ்சுதான் படம் பார்க்கப் போகிறாங்களோ? அடுத்தவன் யாராவது சிரிக்கிறப்போ இவனும் சிரிக்க வேண்டியதுதானே! இதில் என்ன கஷ்டம்?"

பாபுவுக்கு இதைக் கேட்டதும் சிரிப்புத் தான் வந்தது. "ஆனால் கதையாவது புரிய வேண்டாமா?" என்றான்.

"புரியறது என்றால் என்னடா? படத்தில் இருப்பதை அப்படியே புரிந்துகொள்வதில் என்ன சுவாரஸ்யம் இருக்கிறது? விஷயம் தெரிந்தவன், ஆங்கிலம் படித்தவன் அதில் இருப்பதை மட்டுமே புரிந்து கொள்வான். ஆனால் நடேசனைப் போய் காணக்கு மெதுவாகக் கதையைக் கேட்டுப் பார், அந்தப் படத்தின் கதையைவிட அவன் பார்த்துப் புரிந்து கொண்ட கதை பிரமாதமான கற்பனையோடு இருக்கும். இதெல்லாம் யாருக்குத் தெரிகிறது? அதையும் தவிர, தமிழ்ப் படத்திலே எதையெல்லாம் பார்க்க முடியாதோ, அதையெல்லாம் அங்கே பார்க்கலாமே. பேச்சுப் புரியாவிட்டால் என்ன மோசம்? செய்வதெல்லாம் கூடவா புரியாது?" என்றான் சேகர்.

சேகரின் வேடிக்கைப் பேச்சு பாபுவுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் பொல்லாத முரடனாக இருக்கலாம். ஆனால் நல்லவன்போல் வெளிவேஷம் போடுபவனல்ல. குறை இல்லாத மனிதன் எவன் இருக்கிறான்? சிலர் அதை மூடி மறைத்துக்கொண்டு குறையை வெளிக்காட்டாமல் செய்து கொள்கிறார்கள். சிலரால் அது முடிவதில்லை; மேலும் சிலருக்கு அது பிடிப்பதில்லை. சேகர் அந்தக் கடைசி வகையைச் சேர்ந்தவன். குற்றம் குறையுள்ளவர்கள் என்றால் அவனுக்கு அவர்களிடம் தனி ஈடுபாடு. தப்புத் தண்டாவில் அகப்பட்டுக் கொள்பவர்களிடம் அவனுக்கு ஒரு தனிப் பரிவு. இல்லாவிட்டால் சமையற்கார நடேசன் கையில் ஒரு ரூபாயைத் தூக்கியெறிந்து சினிமாவுக்குப் போகச் சொல்வானா?

இப்பொழுது அவன் என்னவோ உற்சாகமாக இருக்கிறான். ஆயினும் பாபுவுக்குத் தைரியமே உண்டாகவில்லை. அவன் இதுவரையில் யாரையும் கடன் கேட்டதில்லை. கேட்டதும் கொடுத்துவிட்டால் சரி; இல்லை என்று சொல்லிவிட்டால்? அவனிடம் இல்லாமலும் இருக்கக் கூடும். கடைசியில் எப்படியோ பாபு வாயைத் திறந்து ஐந்து ரூபாய் வேண்டும் என்று கேட்டு விட்டான்.

"டேய், இப்பத்தாண்டா நினைவு வருகிறது. நடேசன் பேச்சிலே அதைக் கேட்க மறந்துட்டேனே. என்ன விஷயம் இதெல்லாம்? உனக்கும் அந்த உஷாவுக்கும் என்ன? சாயங்காலம் எங்கேயோ அவளை அழைத்துக்கொண்டு போனாயாமே! அவ்வளவு தூரத்துக்கு வந்துவிட்டீர்களா?" என்று கேட்டான்.

பாபுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. விஷயம் வெகு தூரத்துக்குப் போய் விட்டதைக் கண்டு அவனுக்கு மூச்சுத் திணறியது. சேகர் உற்சாக மூட்டுவது போல் சிரித்துக்கொண்டே, "பத்து மணிக்கு வந்து அஞ்சு ரூபாயை யாருக்கோ கொடுத்தேன் என்றால் இந்தக் கதையை யெல்லாம் யாரடா நம்புவார்கள்? உனக்கு ஏது பணம் முதலில்? உஷா கொடுத்தாளா? எதற்காகக் கொடுத்தாள்?" என்று கேட்டான்.

எதைச் சொன்னாலும் அது பிறருக்குப் பொருத்தமற்றதாகப்படும் என்று பாபுவுக்குத் தோன்றியது. வெள்ளையன் தோட்டத்துச் சங்கத்தைப் பற்றிச் சொல்வதற்கு அவனுக்கு முதலில் தயக்கமாக இருந்தது. பிறகு வேறு வழியின்றி அவன் உண்மையைச் சொல்ல முயன்றான். ஆனால் அவன் கூறிய விதம் அவனுக்கே வெறும் கட்டுக்கதையைப் போலப் பட்டது. அடிப்படையான காரணத்தை விளக்கிக் கூறினாலொழிய உஷா போன்ற பெண்ணொருத்தி, யாருடைய வீட்டிலேயோ சேவகம் செய்யும் ஒருவனுடன்

னெம்பிச் செல்வதாவது? முப்பது ரூபாய் நன்கொடை தருவதாவது? இதையெல்லாம் சொல்லவும் நன்றாக இல்லை; கேட்கவும் பொருத்தமாக இல்லை. அபத்தமாகப் பட்டது.

“என்னமோ போ! போன் வந்தது முதல் அம்மா உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறாள். இதையெல்லாம் சொன்னாயோ, உண்மையாகவே இருந்தாலும், உன்னை யாரும் நம்ப மாட்டார்கள். அம்மா அவளைக் கடைசி மருமகளாக எண்ணிக் கொண்டிருக்கிறாள். அதனால் சங்கத்துக்குப் போனதோடு நிறுத்திக் கொள்!” என்று சொல்லிக் கொடுத்தான் சேகர்.

பாபுவின் மனம் நன்றியுணர்வால் நிரம்பியிருந்தது. அதை மேலும் நிறை அடிப்பதுபோல், “இந்தா, என்னமோ கேட்டாயே. வைத்துக்கொள்! உண்மையில் உன் மனத்தில் களங்கம் இல்லை என்பது எனக்குத் தெரியும். சரிதானே அது?” என்று ஐந்து ரூபாயை நீட்டினான் சேகர்.

பாபுவுக்குக் கண்ணீர் ததும்பியது. நெஞ்சு தழுதழுக்க அவன், “அண்ணா! உன்னைக் கண்டு எல்லாரும் நடுங்குகிறார்கள். பொல்லாதவன் என்கிறார்கள். ஆனால் நான் வணங்குகிறேன். உன் பொல்லாத்தனம் எனக்கு மிகவும் பிடிக்கிறது!” என்றான்.

## அத்தியாயம் 24

# டெலிபோன் அழைப்பு

“டிரிண்...டிரிண்...டிரிண்...”

டெலிபோன் மணி அடித்தது. பாபுவின் இடத்துக்குப் பக்கத்தில்தான் டெலிபோன் இருந்தது. அவன்தான் அதை எடுத்து முதலில் பேசவேண்டும். யாருக்கு அழைப்பு வந்திருக்கிறதோ, அவர்களிடம் போய்ச் சொல்ல வேண்டும்.

“ஹலோ!” என்று சுரத்து இல்லாமல் குரல் கொடுத்தான் பாபு.

“பாபுவோடு பேச வேண்டும்” என்றது ஒரு பெண் குரல்.

“நான்தான் பாபு. நீங்கள் யார்?”

“யார் என்று தெரியவில்லையா?”

“உஷாவா? குரலே மாறிப் போயிருக்கிறதே!” என்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, “என்ன உஷா! ஏது இத்தனை நேரத்துக்குமேலே!” என்று மெதுவாகக் கேட்டான்.

“உங்க வீட்டு அம்மா ஏதாவது உன்னைக் கேட்டார்களா?”

“இல்லை; நான் அவர்களைப் பார்க்கவேயில்லை. ஏன், என்ன விஷயம்?”

“நான் வெள்ளையன் தோட்டத்தைப் பார்க்க வந்தது தப்பாகப் போய்விட்டது! எல்லாம் இந்தக் குப்பனால் வந்தது. என் அம்மா உங்க வீட்டு அம்மாளைக் கூப்பிட்டுக் கண்டிக்கச் சொல்லியிருக்கிறாள். நாளை முதல் உன்னை இங்கே அனுப்ப வேண்டாம் என்றும் சொல்லியிருக்கிறாள். அதனால் என்ன? நீ வர வேண்டாம். அவ்வளவுதானே! இது உன்னால் முடியாதா?”

“ம்ம்......அப்புறம்?”

“முப்பது ரூபாய் கொடுத்ததையெல்லாம் யாரிடமும் உளறி வைத்துவிடாதே. என்ன?”

“சே, சே! நான் ஏன் சொல்கிறேன்?”

“ஆனால் அவசியமானால் நீ டெலிபோனில் பேசலாம். ஆமாம்; முக்கியமாக இருந்தால்தான்.”

“சரி சரி!” என்றான் பாபு.

“ஜீஜீ பேசுவதாகத்தான் அழைக்க வேண்டும்!”

“ஜீஜீயா? அப்படி என்றால்?”

“அது ஒரு பெண்ணின் பெயர். அவள் அழைப்பதாக என்னை நீ கூப்பிடலாம். ஆனால் ரொம்ப முக்கியமாக ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால்தான்! அப்படி என்ன இருக்கப் போகிறது; இல்லையா? இருந்தாலும் சொல்லிவைப்பது நல்லதுதானே? அதுக்காகச் சொல்கிறேன். பெயர் ஞாபகம் இருக்கிறதா?”

“இருக்கிறது...ஜீஜீதானே?”

“ஆமாம்.போனை வைத்துவிடட்டுமா?”

பாபு ரிஸீவரை வைத்துவிட்டு, மாடிப் படியை அண்ணாந்து பார்த்தான். மின்சாரக் கம்பி தீண்டியதுபோல் திக்கென்றது. மிஸஸ் மீனாட்சி, அவனுடைய எஜமானி, கீழே குனிந்து டெலிபோனில் பேசும் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். எத்தனை நேரமாக நிற்கிறாளோ?

“வந்துட்டியா நீ?”

தலையை ஆட்டினான்.

“எப்ப வந்தே நீ?”

“அப்பவே...வந்து...”

“அதுதான் ஆளைக் காணுமே என்று டெலிபோன் கேட்க வந்தேன். யார் பேசினது?”

பாபு விழி பிதுங்க, “உங்களில் யாருக்கும் இல்லை!” என்றான்.

மீனாட்சி அசுவாரசியமாகத் திரும்பினாள்; போகும்போது ஏதோ முணுமுணுத்துக் கொண்டு போனதாக அவனுக்குத் தோன்றியது. அதற்கெல்லாம் கவலைப்பட்டால் முடியுமா? அந்த மட்டோடு முடிந்ததே! பாபு தன்னுடைய அறைக்குள் சென்றதும் ஒரு பென்சிலை எடுத்து, சுவரிலே சின்னதாக, ‘ஜீஜீ’ என்று எழுதி வைத்தான். அந்த எழுத்துக்குப் பின்னால் மறைந்து நின்று கொண்டு உஷா அவனைப் பார்த்துப் புன்னகை செய்வது போலிருந்தது!

முதல் தேதி சம்பளம் வந்தவுடன், ஐந்து ரூபாயைக் கொண்டு போய்ச் சேகரின் மேஜைமேல் வைத்தான் பாபு. சேகர் நாற்காலியில் சாய்ந்து மேஜையில் காலால் உந்திக் கொண்டு ஊசலாடுவது போல் ஆடிக் கொண்டிருந்தான்.

"என்ன இது? எகற்காக?"

"அன்று வாங்கிக் கொண்டேனே!"

"நான் உனக்குக் கடனாகக் கொடுக்க வில்லையே. நான் கடன் என்று யாருக்கும் கொடுப்பதில்லை. வாங்கினாலும் அப்படித் தான்; திருப்பிக் கொடுப்பதில்லை!"

"இப்பொழுது இருக்கட்டுமே. இன்னொரு சமயம் வேண்டியிருந்தால் வாங்கிக் கொள்வேன்!"

சேகர் கோபத்தோடு, "நான் என்ன லேவாதேவிக்காரனா? கொடுக்கவும் வாங்கவும் இது என்ன வட்டிக்கடையா? எடு, அதைக் கையிலே!" என்று இரைந்து கத்தினான்.

பாபு பயந்துபோய் வைத்த நோட்டைக் கையில் எடுத்துக் கொண்டான். இன்று சமயம் சரியாக இல்லை என்று திரும்பிச் செல்ல அடியெடுத்து வைத்தான்.

"ஏய் பாபு! இங்கே வா!"

அவன் திரும்பி வந்து நின்றான். சேகர் நாற்காலியில் சரியாக ஊன்றி உட்கார்ந்து கொண்டு, "உண்மையைச் சொல்லு! உஷாவைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டான்.

உருவத்திலும் முரடன், பேச்சிலும் முரடன் என்பது விளங்காமல் பாபு மௌனமாக நின்றான்.

"சொல்லுடா!"

"எனக்கு அவ்வளவெல்லாம் என்ன தெரியும்? அவள் எல்லாரையும் விட நல்லவள். பாரிஸ்டர் வீட்டிலேயே அவள் தனிப் பிறவி!"

சேகர் இதைக் கேட்டுவிட்டுத் திருப்தியோடு சிரித்தான். "அதனால்தான் கேட்கிறேன். இந்த வீட்டிலேயே நானும் தனிப் பிறவிதானே?"

பாபுவுக்கு அதிர்ச்சியாக இருந்தது. அவன் என்ன சொல்ல வருகிறான் என்பதே அவனுக்கு விளங்கவில்லை. அவனிடம் கொண்டிருந்த நன்றியுணர்ச்சிக்குப் பங்கம் நேராமல் இருக்க வேண்டுமே என்று வெள்ளைப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டான். திடீரென்று இவனுக்கு உஷாவின் நினைவு ஏன் வந்தது என்று எண்ணியவாறு நின்றான்.

"ஏண்டா! அவள் பேச்சை எடுத்ததும் உன் வாய் அடைத்துப் போய்விட்டது? உனக்குப் போட்டியாக நான் வந்து விட்டதாக நினைக்கிறாயோ? நீ என்ன, அவ்வளவு தூரத்துக்குக் கோட்டை கட்டிக் கொண்டிருக்கிறாயா?"

பாபு அவசரமாக மறுத்துக் கூறுவது போல் தலையை ஆட்டினான்.

"அவள் எங்கே? நீ எங்கே? உனக்கு ஏன் இப்படி உடம்பு பதறுகிறது?"

பாபு தன்னைத் திடப்படுத்திக்கொண்டு, "நான் அவளைத் தெய்வம்போல் மதித்துப் பூசிக்கிறேன்! என்னைத் தப்பாக எண்ணும் அளவுக்கு ஏதாவது நடந்திருந்தால் அது என்னுடைய குற்றமே தவிர, அவளுடையதல்ல!" என்றான்.

"அதுதானே கேட்டேன். அப்படித் தான் நானும் நினைத்தேன். உன் மனத்தில்தான் களங்கம் இல்லையே! அது போனால் போகட்டும்; இன்று அவளை விமானக்கூடத்தில் காலையில் பார்த்தேன். அதைத்தான் யோசனை பண்ணிக் கொண்டிருக்கேன். இந்த அம்மாவுக்கு ஏன் இது புரியவில்லை? ரமேஷுக்கு இவள் எப்படி இணையாவாள்? நீ என்ன நினைக்கிறாய்? நீ ஒருவன்தான் இந்த வீட்டில் என்னைப் புரிந்து கொண்டிருப்பவன். உனக்குத் தான் என்னையும் தெரியும்; அவளையும் தெரியும். உன் பேச்சைத்தான் அம்மாவும் கேட்பாள்! நான் சொல்வது புரிகிறதா?" என்றான் சேகர்.

தனக்குக் கடவுள் ஏன் புரிந்து கொள்ளும் சக்தியைக் கொடுத்தார் என்றுதான் பாபு கலங்கி நின்றான். சேகர் விமானக் கூடத்தில் விமானிகள் கிளப்பில் அங்கத்தினராகச் சேர்ந்திருந்தான். விமானிக்கு வேண்டிய பல தன்மைகள் அவனிடம் பொருந்தியிருந்தன. ஆனால் ஒரு பெண்ணுக்கு, அதுவும் உஷா போன்ற ஒருத்திக்குக் கணவனாகும் தகுதி அவனுக்

குச் சிறிதுகூட இல்லை. இதை எப்படி அவன் வாயை விட்டு முகத்துக்கு எதிரே சொல்வான்! அவனுக்கு அந்த உஷா சேகரின் கண்ணில் படும்படி விமானக் கூடத்துக்கு ஏன் போனுன் என்றுதான் கோபம் கோபமாக வந்தது.

"விமானக் கூடத்திலா? அங்கே எதற்கு?" என்று ஏதோ வாயில் வந்ததைக் கேட்டான் பாபு.

"யாரோ சிங்கப்பூரிலிருந்து வருகிருன் என்று அப்பாவும் பெண்ணும் அங்கே வந்திருந்தார்கள். இன்னும் அவர்களுடைய கம்பெனியிலிருந்து யார் யாரெல்லாமோ வந்திருந்தார்கள். ஆனல் அவ்வளவு பேருக்கு மத்தியில் அவள் ஒரு தேவ கன்னிகையைப் போல்தான் தோன்றினுள். காற்றிலேமெல்லிய ஆடை பறக்க, தலை சிலும்பி நிற்க, மேகத்திலிருந்து இறங்கி வரும் அப்சரஸைப் போலிருந்தாள் அவள். முன்பு இங்கே வந்திருந்தாளே, அப்பொழுது இப்படி ஆகிவிடுவாள் என்று நான் நினைக்கவேயில்லை. ஐந்தாறு வருஷங்களில் அழகு என்பது கொள்ளையாகவா மண்டிப் போகும்? பட்டு லிப்பரில் தந்தப் பாதமும், பிறை நிலவு நெற்றியில், சிந்தூரப் பொட்டும்!" சேகரின் வர்ணனையும் முரட்டுத்தனமாக இருந்தது.

"டிரிண்...டிரிண்..." என்று டெலிபோன் மணி கிணுகிணுக்கவே, விட்டால் போதும் என்று பாபு ஓடிப்போய் ரிஸீவரை எடுத்து, "ஹலோ!" என்றுன்.

"பாபுவா?" என்று கேட்டது உஷா விகூடகுரல். (தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

பம்பாய் மாதுங்காவிலுள்ள கலா நிலையத்தார் தமிழில் இரண்டு நாடகங்களையும், ஹிந்தியிலும், மலையாளத்திலும் ஓரங்க நாடகங்களையும் நடித்து ரஸிகர்களின் பாராட்டுதலைப் பெற்றனர். மாதுங்காவில் விசேஷமாக நிர்மாணிக்கப்பட்ட திறந்த வெளியரங்கில் நடைபெற்ற இந் நாடகங்களைக் காண மக்கள் திரளாக வந்திருந்தனர். 'நினைத்தபடி நடந்தால்' என்னும் தமிழ் நாடகம் வந்திருந்தவர்களின் மனத்தைக் கவர்ந்தது. திரு ராமா, திரு ராஜன், திருமுத்து ஆகியோர் இந் நாடகம் சிறப்பாக அமைந்ததற்குப் பாராட்டுக்குரியவர்கள். ஒவ்வொரு நாடகத்திலும் காட்சி ஜோடனையும், ஒளி அமைப்பும் சிறப்பாக அமைந்திருந்தன.

☆

கடந்த ஐந்து ஆண்டுகளாக ஹௌராவில் சிறந்த முறையில் தமிழ்ப் பணியாற்றிவரும் திருவள்ளுவர் கலை மன்றத்தினர் சென்ற 24-5-59 அன்று திரு சொக்கலிங்கம் அவர்கள் தலைமையில், 'திருவள்ளுவர் திருநாளை'க் கொண்டாடினுர்கள். விழாவை யொட்டி நடைபெற்ற பேச்சுப்போட்டியில் ஆறு இளைஞர்கள் பங்கு கொண்டு "வள்ளுவர் வான்மறை"யின் கருத்துக்களை மழலைச் சொல்லிலே வாரி வழங்கினர். மேலும் அலுவலக நேரம் தவிர மற்ற நேரத்தில் இசைக்கலை வளரப் பெரிதும் பாடுபட்டு வரும் கலைஞர்கள் திரு வி. வி. ராமகிருஷ்ணன், திரு என். பண்டரிநாதன் ஆகியோரைப் பாராட்டித் தங்கப் பதக்கங்களும் வழங்கப் பட்டன. திருமதி கே. எஸ். வேதநாயகி அவர்களின் இன்னிசையுடன் விழா இனிது முடிந்தது.

மட்டக்களப்பு அருள் நெறித் திருக் கூட்டத்தின் சார்பில் வைகாசி மாதம் 22-ம் தேதி மாலை 6-மணிக்குக் கல்லடி-உப்போடை நொச்சிமுனை ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலய வீதியில் திருவள்ளுவர் தின விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. விழாவுக்கு நீதிபதி திரு அரசு வால்டன் அவர்கள் தலைமை வகித்தார்கள். திருக்குறட் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவியர்க்குத் திருமதி அரசு வால்டன் பரிசில்களை வழங்கினுர்கள்.

விழாவில் பிரதம பேச்சாளராகிய சிவானந்த வித்தியாலய அதிபர் திரு க. கணபதிப் பிள்ளை பி. ஏ. அவர்கள் "அனிச்சம்" எனும் பொருள் பற்றிப் பேசினுர். விழாவில் ஒரு விசேஷ அம்சமாக விளங்கியது கவியரங்கம். மட்டக் களப்புப் பகுதியில் வாழும் இளம் கவிஞர்களான 'திமிலைத்துமிலன்,' 'மூனாக்கானு,' 'நீலாவணன்,' 'ஆரையூர் அமரன்' ஆகியோர் இந் நிகழ்ச்சியில் பங்கு பற்றினர்.

இலங்கை வானொலியைச் சேர்ந்த திருமதி பாலாம்பிகை நடராசாவின் வீணை இசைக் கச்சேரி விழாவில் நடைபெற்றது.

கவியரங்கில் கலந்து கொண்ட கவிஞர்கள்



# தியாகத்துக்கு ஒரு தனயன்



திருநெல்லைமாவட்டத்தின் சிறப்புகளில் பெரும் பங்கு கொள்ளும் திருச்செந்தில் நகரில் அன்று ஏகக் கூட்டம். கடற்கரை மணலை எண்ணினாலும் எண்ணிவிடலாம்; கடற்கரையிலும், கடலைத் தொட்டு நின்ற ஆலயத்திலும், செந்தில் நகரம் முழுமையும் நிறைந்திருந்த மக்களின் கூட்டத்தைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது.

விசாகத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்பே திருச்செந்தூரில் இடம் தேடி வருவார்கள் பலர். இரவும் பகலும் சண்முகநாதனைக் கண்டு களித்து, உள்ளத்தில் பெருகும் பக்தியாலும் உபவாச விரதத்தாலும் தன் இதயத்தைப் பொன்னாக்கிக் கொள்ளக் கடற்கரையாண்டியைத் தேடி ஓடி வருவார்கள்.

கிராமத்து மக்கள் வந்து கூடியிருப்பதின் விளைவாகப் பெரிய பெரிய கூண்டு வண்டிகள் ஆங்காங்கே மரத்தடியில் அவிழ்த்து விடப்பட்டிருக்கும். அதன் நிழலிலேயே கற்களால் அடுப்புக் கட்டிச் சமையல் சாப்பாடு யாவும் நிகழும்.

பணம் படைத்தவர்கள் ஆங்காங்கே விடுதிகளில் வந்து தங்குவார்கள். அவர்கள் போக்குவரவு வசதிக்காக விலையுயர்ந்த மோட்டார் வாகனம் எப்பொழுதும் தயாராய்க் காத்து நிற்கும்.

நாற்றுக் கணக்கானவர்கள் தங்கக் கூடிய 'சரவணபவா' விடுதியில் ஸ்ரீவைகுண்டம் பரமசிவம் பிள்ளையும் அவர் குடும்பத்தாரும் வந்து இறங்கியிருந்தார்கள். வைகாசி விசாகம் வந்தால் பரமசிவம் அவர் மனைவி பார்வதி இருவருக்கும் இரட்டிப்பு ஆனந்தம். முருகனுக்கு உகந்த நாள்; அவர்கள் தவமிருந்து பெற்ற கனிக்குப் பிறந்த நாள்.

பத்து வருடங்களாகத் திருச்செந்தூரில் வெள்ளிக்கிழமை தோறும் ஆசாரமாக, பக்தியாகப் பார்வதி – பரமேசுவரன் போன்று ஈர உடையில் கோவிலை வலம் வந்து, ஏழைகளுக்கு அன்னமிட்டுத் தான தருமங்கள் பல செய்து பெற்றெடுத்த ஒரே பிள்ளை முருகன்.

அந்த முருகனை, கடற்கரையாண்டி தந்த வரப்பிரசாதமாகப் போற்றி வளர்த்துப் பூரிப்படைந்தனர் பரமசிவம் தம்பதிகள்.

முருகனின் மூன்றாவது ஆண்டு விழா. வெள்ளியங்கி சாத்துவதாக வேண்டிக் கொண்ட பிரார்த்தனையை நிறைவேற்ற மற்ற வருஷங்களை விட அதிகமான கூட்டத்துடன் வந்தார்கள். உறவினர்கள் புடைசூழத் தங்கியிருந்தார் பரமசிவம்.

செப்புச் சிலை போன்ற குழந்தையைக் குளிப்பாட்டி,

கோமதி சுப்பிரமணியம்

# நெல்லை மாவட்டச் சிறுகதைப் போட்டியில்

# இரண்டாவது பரிசு பெற்ற கதை

பொட்டிட்டு, பூ முடித்துப் பட்டும் பட்டாடையும் மேனியை அலங்கரிக்க, தங்கமும் வைரமும் கொட்டி அழகுபடுத்தினாள் பார்வதி.

செல்வத்தின் செழிப்பிலே அன்பின் அணைப்பிலே வளர்ந்த குழந்தை அருள் நிறைந்த வண்ண அழகுடன் விளங்கினான். செல்வனின் சுடர்விடும் அழகைக் கண்டு பிரமித்த தாய் திருஷ்டி முறித்துத்தோளில் தூக்கிக்கொண்டாள்.

எல்லோரும் கோவிலுக்குப் புறப்பட்டனர். தூக்கமாட்டாமல் தூக்கிச் செல்லும் பார்வதியின் பாரத்தைக் குறைக்க எண்ணிய உறவினர் ஒருவர் அவளிடமிருந்து அந்தக் குழந்தையை வாங்கிக் கொண்டு நடந்தார்.

கோவிலுக்குள் வரிசையாகப் போவதற்குப் போலீசார் அனுமதியைக் கயிறு கட்டி நிர்வாகம் செய்து கொண்டிருந்தார்கள்.

குழந்தையை எடுத்துச் சென்ற உறவினர் கூட்டத்தை நெட்டித் தள்ளிக் கொண்டு முன்னேறினார். 'குழந்தை ஜாக்கிரதை!' என்ற பார்வதியின் குரல் அவர் காதில் விழுந்ததோ இல்லையோ– அவர் வெகு வேகமாக முன்னால் போய்க் கொண்டிருந்தார்.

எடுத்துச் செல்பவர் உறவினர் ஆன காரணத்தால் பார்வதியும் மற்றவர்களோடு அமைதியாக நடந்து கொண்டிருந்தாள்.

பூஜை சமயம், மணிகளின் நாத வெள்ளம். பக்தர்களின் சந்தன மணத்தோடு, பக்தி வெள்ளத்தின் ஓசையும் கேட்டது. தானாக முன்னே போகும்படி நெட்டித் தள்ளிக் கொண்டிருந்தார்கள்.

முருகன் சந்நிதியை அடைந்தபோது மெய்சிலிர்க்க 'முருகா! முருகா!' என்ற ஒலி எங்கும் எதிரொலித்தது. அபிஷேகப் பன்னீரின் மணமும், கற்பூர ஹாரத்தியின் மணமும் இரண்டறக் கலந்து மெய்யுணர்வை எழுப்பின.

பரமசிவத்தின் 'மண்டகப்படி' முறை வந்தபோது அர்ச்சனைக்காகப் பையன் பெயரைக் கேட்டார்கள். நட்சத்திரத்தைக் கேட்டார்கள். சொல்லப்பட்டது. ஆனால் பையன்...,?

"பையன் எங்கே ......?" என்ற குரல் ஒன்று பலமாக எழுந்தது. ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டே நெடுகத் தேட ஆரம்பித்தார்கள்.

குழுமியிருந்த கூட்டத்தில் கோவிலை விட்டு வெளியேறவே இரண்டு மணி நேரம் பிடித்தது.

தேடாத இடங்கள் இல்லை. குழந்தை கிடைத்தால்தானே? பெற்ற வயிறு துடிக்கப் பதறினாள் பார்வதி. அழுதாள். கதறினாள்.

'என் செல்வனை எங்கு தேடுவேன்? எப்படித் தேடுவேன்? எப்பொழுது காண்பேன்?' என்று நெக்குருகி அழுதாள் பார்வதி. எண்ணற்ற பூத கணங்களின் பேய்க் கூத்து ஒரே சமயத்தில் அவள் இதயத்தில் நிகழ்ந்தது.

அவளை வீடு கொண்டு சேர்ப்பதற்குள் பரமசிவம் பட்ட பாடு......நிலைகுலைந்த மனைவியைக் காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு கொந்தளிக்கும் கடலெனவர் திரும்பினார்.

டாக்டர் சேதுபதியின் நர்ஸிங்ஹோமில் சேர்த்து விட்டு மீண்டும் திருச்செந்தூர் பயணமானார்.

பல முறைகள் பார்த்துக் களித்த முருகனின் மோகன உருவம் அவர் மனத்தில் பரவசத்தை உண்டுபண்ணவில்லை. நினைத்து நினைத்து ரசித்த நீலக் கடல் அவர் மனத்தில் இன்பத்தைக் கொடுக்கவில்லை. நீண்ட மணற் பரப்பு, சாந்தி தவழும் சண்முக விலாசம், எங்கும் எதிலும் அவர் மனத்தின் ஏக்கமே பிரதிபலித்தது. அவர் கண்கள் நுழையும் இடமெல்லாம் கருத்துப் புகுந்து செல்வமகனைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டது. ஆனால் அவன் கிடைக்கவேயில்லை.

பெற்ற மகன் கண்ணுக்குக் காணாமல் மறைந்து விட்டான். கண்ணெதிரே இருக்கும் மனைவியோ... தன்னையே மறந்து விட்டாள்.

பார்வதியின் ஓலம் ஆஸ்பத்திரியே அதிர்ந்தது. "என் செல்வன் எங்கே? என் முருகு எங்கே?" என்று கேட்கத்



தொடங்கி விட்டாளானால் ஊரே அதிரும் அவளது பெற்ற வயிறு பற்றி யெரியும் நெருப்பில்.

செல்வ மகனுக்குத் தாலாட்டுப் பாடிய வாய் இன்று அவனை நினைத்து ஒப்பாரி பாடிக் கொண்டிருந்தது.

நாட்கள் கழிந்தன. நர்ஸிங்ஹோமில் இருந்த பார்வதியின் நிலையிலே எந்த மாறுதலும் இல்லை. டாக்டர் சேதுபதி கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வந்தார். தாம் கற்ற வைத்திய முறையை யெல்லாம் மாற்றி மாற்றிக் கையாண்டும் பலனில்லை. மறைந்த மகனைக் கண்ணெதிரே காணும்வரை பார்வதியின் மனத்தை யாராலும் அசைக்க முடியாதென்ற முடிவுக்கு வந்தார்.

சேதுபதியின் மனத்திலே யோசனை மின்னியது. பார்வதியின் குழந்தையாக ஏதாவதொரு குழந்தை வந்தால்தான் அவள் மனம் மாறும் என்ற முடிவுக்கு வந்து பரமசிவத்திடமும் அந்த யோசனையைச் சொன்னார்.

அவர் நர்ஸிங்ஹோமிலுள்ள அனாதைக் குழந்தைகளைக் காட்டி அவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைப் பரமசிவத்திடம் ஒப்படைத்தார். பரமசிவத்தின் மனம் இந்த ஏற்பாட்டை லகுவில் ஒப்புக்கொள்வதாயில்லை. பார்வதி — பார்வதியாக வேண்டுமானால் அவர் அந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்டுதானாக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. மனைவியின் மீது கொண்டுள்ள அன்பு அனாதைக்குழந்தையைத்தம் குழந்தையாக ஏற்க ஒப்புக் கொண்டது.

கிட்டத்தட்ட முருகனின் வயது, அவனது சாயல் இவற்றை ஒத்திருந்த குழந்தை ஒன்று மனோதத்துவ வைத்தியத்துக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

மனைவியை நம்ப வைப்பதற்காகப் பரமசிவம் முருகன் போட்டிருந்த நகைகளைப் போன்ற நகைகள், அவன் ஏற்கனவே அணிந்திருந்த ஆடை அணிகளைப் போன்ற ஆடைகள் ஆகியவற்றை வாங்கினார். அவற்றை அணிவித்ததில் அந்தக் குழந்தை முருகனாகவே தோன்றியது.

டாக்டர் செய்த மனோதத்துவ சிகிச்சையில் பார்வதி தன் குழந்தை கண்டுபிடிக்கப் பட்டு, அதைப் பெற்ற பாக்கியத்தை அனுபவிக்க ஆரம்பித்தான்.

பரமசிவம் டாக்டருக்கு நன்றி தெரிவித்தபோது, "நான்தான் உங்களுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். என் நர்ஸிங்ஹோமில் ஆயிரம் குழந்தைகளுக்கு மத்தியில் வளரவேண்டியவன் செல்வச் சீமானின் ஒரே மகனாய்ச் சீராடப் போகிறான். ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். என்றும் எக்காரணத்துக்காகவும், அந்தக் குழந்தையை அனாதையாக்கி விடாதீர்கள்" என்ற வேண்டுதலோடு குழந்தையை அனுப்பி வைத்தார் டாக்டர் சேதுபதி.

தமது வியாபாரத்தை நெல்லைக்கே மாற்றிக்கொண்டு மனம் திருந்திய மனைவியோடும் ஆள் மாறிய மகனோடும் புதிய வாழ்வு தொடங்கினார் பரமசிவம்.

அதன் பின்னர் ஒவ்வொரு வருஷமும் திருச்செந்தூர் வரும்போது குழந்தையைச் 'சிக்'கெனப் பிடித்துக் கொண்டு செல்வாள் பார்வதி. டாக்டர் கூறிய வார்த்தையைச் 'சிக்'கெனப் பிடித்துச் செல்வார் பரமசிவமும்.

பார்வதியின் உள்ளத்தில் அது அவள் பெற்ற குழந்தையாகவே வளர்ந்தது. நாள் ஆக ஆகப் பரமசிவத்தின் உள்ளத்திலும் பழகிய பாசத்தால் அவர் குழந்தையாகவே வளர ஆரம்பித்தது.

* * *

நெல்லையில் தொடங்கிய வியாபாரம் ஆல்போல் பெருகியது. பதினைந்து வருஷங்கள் ஓடி மறைந்தன. முக்கியமான சரக்குகள் கொள் முதல் செய்வதற்காகப் பரமசிவம் தமது காரில் நெல்லையைக் கடந்து சென்று கொண்டிருந்தார்.

வெகு வேகமாய்ப் போய்க் கொண்டிருந்த கார், எஞ்சின் சூடேறித் தொல்லை செய்யவே நடுச்சாலையில் நின்றுவிட்டது.

வானத்திலே கவிந்திருந்த மேகம் சிறு சிறு தூறல்களைப் போட்டுப் போட்டாகத் தூற ஆரம்பித்தது. குமுறி யெழுந்த இடியும், வெட்டி மின்னிய மின்னலும், பலத்த மழையாக வருவோமென்று கட்டியம் கூறியது. சற்றுத் தொலைவிலுள்ள கிராமத்துக்கு நடப்பதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை.

மதுரைக்கும் திருநெல்வேலிக்கும் ஊடாக உள்ள சிற்றூர். பெரிய வீடுகள் எதுவுமே இல்லாத ஊர். இரவு நேரத்துக்கான அறிகுறிகள் அங்கே இருந்தன. சற்றைக்கொருதரம் மின்னும் மின்னலைத் தவிர வேறு வெளிச்சமே காணோம். சிம்னி விளக்குகளே வெகு குறைவு. இரவிலே சந்தடி கேட்ட நாய்கள் குரைத்துக் கூப்பாடு போட்டன. அவற்றை அடக்குவதற்காக வந்த ஒரு குடியானவர் பரமசிவம் வருவதைப் பார்த்ததும், "ஐயா! யார், எந்த ஊர்? யார் வீட்டுக்குப் போக வேண்டும்?" என்று கேட்டார். அவர் குரலில் கிராமத்தின் நல்லுணர்ச்சி இருந்தது.

தமது காருக்கு நேர்ந்த கஷ்டத்தைச் சொல்லிய பரமசிவம் அந்த வீட்டில் தங்குவதற்கு ஒப்புக் கொண்டார். விருந்தினராக இரவில் இருவர் வரவே அங்கே முணுமுணுப்பதற்கு ஒரு பையன்தான் இருந்தான். இரவிலே தோட்டத்துக்குப் போய் இலை அறுத்து வரச் சொன்னதற்குப் பையன் முணுமுணுத்தான். உள்ளே சமையல் ஆகிக் கொண்டிருந்தது. கிராமத்தில் வந்தவர்களை உபசரிக்கும் முறை இன்னும் அறியாமல் இருப்பதை எண்ணி 'முருகா!' என்று சொல்லிக் கொண்டார் பரமசிவம். இரண்டொருவர் துணையைக் கொண்டு யாரோ கொடுத்த ஹரிக்கேன் வெளிச்சத்தின் உதவியால் டிரைவர் காருக்குப் போய்ச் சேர்ந்தார்.

தனியே விடப்பட்ட பரமசிவத்தின் மனத்திலே பற்பல நினைவுகள். அவரையும் அறியாமலே அந்த வீட்டிலே முணுமுணுத்த பையனைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

பின்பக்கத்திலே ஒட்டுப் போட்ட டிரௌசர். கிழிந்துபோன காலரை மடக்கி விட்டுக் கொண்ட சட்டை. துருதுரு வென்ற கண்கள்.........களையான முகம்......துடியான பேச்சு நிறைந்த பையனின் உருவம் கண்ணை விட்டு அகல மறுத்ததோடு. மனத்தை விட்டும் அகல மறுத்தது.

மெதுவாகப் பேச்சுக் கொடுத்து முத்துசாமியிடம் அந்தப் பையனைப் பற்றி விசாரித்தார் பரமசிவம்.

அவர் மனத்திலே தோன்றிய சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. அந்தப் பிள்ளை தம்முடைய வளர்ப்புப் பிள்ளை என்பதைக் கூறிய முத்துசாமி, அது கிடைத்த விவரத்தையும் விளக்கினார்.

"வருஷா வருஷம் விசாகத் திருவிழாவுக்கு நானும் என் மனைவியும் சென்று வருவதுண்டு. முருகனைத் தரிசிக்கும் ஆவலோடுகூடக் குழந்தைச் செல்வம் இல்லாத பெருங் குறையை முறையிடும் சுயநலமும் கலந்துதான் எங்களை அங்கு இழுத்துச் செல்லும்.

"பதினைந்து வருஷங்களுக்கு முன்னர் ஒரு நாள் முருகனைத் தரிசித்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தபோது. ஒரு கடையில் நின்று அழுது கொண்டிருந்த இந்தப் பையனைக் கண்டேன். கடையில்



பூனா ராணுவக் கணக்கு இலாகாவில் உதவி அக்கௌண்ட்ஸ் அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவரான திரு எம். ஆர். சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கு மே மாதம் 30 ந் தேதி சஷ்டியப்த பூர்த்தி விழா விமரிசையாக நடைபெற்றது.

நின்று காலணாவுக்கு முறுக்கு வாங்கிக் கொடுத்தேன். குழந்தை...லட்டு...பர்பீ என்று கேட்டது. அங்கே அது கிடையாது. கடைக்காரன் தவியாய்த் தவித்தான். ஒரு மணி நேரத்துக்கு முன் அந்தப் பிள்ளையை அங்கே யாரோ கொண்டு வந்து விட்டார்களாம். பையனுக்குச் சொந்தக்காரர்கள் வரக்காணோம். பையன் உடம்பில் நகைகள் காதிலே கழுத்திலே இடந்த சுவடுகள் தெரிந்தன.

"நகைக்குக் கண்ணி வைத்த எவனோ நகையைக் கழற்றிக் கொண்டு பையனைக் கடைக்காரன் தலையில் கட்டி விட்டான். கடைக்காரனோ போலீசுக்குப் பயந்து குழந்தையைத் தள்ளிவிடத் தவித்தான்.

"குழந்தையை எடுத்துத் தோளின்மீது வைத்தேன். பிள்ளையில்லாத காரணத்தினால் என்னையறியாமல் பையன்மீது பாசம் ஏற்பட்டது. ஒருவேளை நான் குழந்தையைக் கடையில் விட்டு வந்தால் அவன் குழந்தையை ஏதாவது செய்து விடுவானோ என்ற பயமும் எழுந்தது.

"என்னோடு எடுத்துச் சென்று நான் வளர்க்கிறேன் என்றபோது கடைக்காரன் விடுதலை பெற்ற மகிழ்ச்சியோடு அனுமதி தந்தான்.

"ஆனால் அடுத்த கணமே என்னை உள்ளூறப் பயம் பற்றிக் கொண்டது. நகைக்காகக் குழந்தையை நான் திருடி வந்ததாக என்னை யாராவது பிடித்துக் கொண்டால்? பயத்துடனும் படபடக்கும் நெஞ்சுடனும் ரயிலேறி ஊர்வந்து சேர்ந்தேன்."

தமக்குக் குழந்தை கிடைத்த வரலாற்றைக் கூறிவந்த முத்துசாமியின் பேச்சில் தமது வளர்ப்புப் பிள்ளை தரும் தொல்லை இடம் பெற்றது.

"அரும்பாடுபட்டு வளர்த்தேன் இந்தப் பிள்ளையை. ஆனால் இதுக்கு அருமை தெரியலை. பெரிய சீமான் ஆட்டுப் புள்ளை மாதிரி 'சைக்கிளைக் கொண்டா மோட்டாரைக் கொண்டா' என்று கேட்டால் நான் எங்கே ஐயா போவேன்?" என்றார்.

'நான் வாங்கிக் கொடுக்கிறேன் என் செல்ல மகனுக்கு' என்று கூறத் துடித்தது பரமசிவத்தின் வாய். இருந்தாலும் உணர்ச்சியை அடக்கிக் கொண்டார்.

"அதோடு எப்படியோ, இவனுக்குத் தான் வளர்ப்புப் பிள்ளை என்பது தெரிந்து விட்டது. அதனால் எங்களை மிகவும் அலட்சியம் செய்கிறான். செய்து விட்டுப் போகிறான். ஆனாலும் வளர்த்த பாசம் விட்டுப் போகுமா? பெற்ற தகப்பன்கூட இவன் தரும் தொல்லையைச் சகிக்க மாட்டான். ஆனால் வளர்த்த பாசம் எங்களுக்கு அவன் தரும் தொல்லைகூட இன்பமாகவே இருக்கிறது. இன்னொரு வேடிக்கை கேளுங்கள். இவனை எடுத்து வந்த மறுமாதம் ராணுவத்தில் இருக்கும் என் மச்சான் மனைவி இறந்து விடவே, தன் பிள்ளையை வளர்க்கும் பொறுப்பையும் எங்களிடம் சுமத்தினான். கிட்டத் தட்ட இவன் வயது, சாயல்கூட இவனைப் போலவே இருக்கும். ஆனால் பாருங்கள், அவன் வந்தது முதல் இரண்டு பேருக்கும் வெட்டுப் பழி குத்துப் பழிதான். அந்த இம்சை தாங்காமல் மைத்துனன் பிள்ளையை அவனிடமே ஒப்படைத்து விட்டோம். எங்களை வேண்டிய மட்டும் திட்டி விட்டுப் பிள்ளையை ஏதோ அனாதை விடுதியிலே சேர்த்துவிட்டானும். இப்போ அந்தப் பிள்ளைகூடப் பெரிய பணக்காரங்க வீட்டுலே வளருதாம். சொல்லிக் கிறாக. நல்லாத் தெரியலே......"

பரமசிவத்தின் மனத்திலே பிரளயமே நிகழ்ந்து கொண்டிருந்தது. குப்பையில் கிடக்க வேண்டியவன் கோபுரத்திலும் கோபுரத்தில் வாழவேண்டியவன் குப்பை மேட்டிலும் வாழ நேர்ந்த விந்தையை, விதியின் விசித்திர விளையாட்டை எண்ணித் துடித்தார். பிறகு தம்மை ஒரு மாதிரி தேற்றிக் கொண்டு, "புத்திசாலியான அந்தப் பிள்ளையின் படிப்புச் செலவுக்காக நான் பணம் அனுப்புகிறேன். அவன் கேட்பதை வாங்கிக் கொடுங்கள்" என்று கூறிக் கைச்செலவுக்காக முந்நூறு ரூபாயைக் கொடுத்தார். நன்றிப் பெருக்கில் வாய் திறந்து திகைத்துப் போய் நின்றார் முத்துசாமி.

பரமசிவத்தை அதிசயத்துடன் உற்று நோக்கின முத்துசாமி எடுத்து வளர்த்த பையனின் கண்கள்.

பையனின் பெயரைக் கேட்ட போது, சண்முகநாதன் என்று சொன்னான். அந்தப் பெயரின் அர்த்தம் பரமசிவத்துக்குத் தெரியும்.

நேராக டாக்டர் சேதுபதியின் வளமனைக்குச் சென்றார். அவர் கூறிய யோசனை பரமசிவத்தின் முடிவுக்கு எதிராக இருந்தது. ஆனால் மனைவியின்

கன்மையை உத்தேசித்து அதை ஒப்பக் கொள்ள வேண்டியதாகவும் இருந்தது.

* * *

பிறவிக் குருடாயிருந்தவன் திடீரென்று ஒளிபெற்று, பெற்ற ஒளியையும் கணத்தில் இழந்து விட்டால் என்ன நிலை அடைவானோ, அந்நிலையில் இருந்தார் பரமசிவம். அவர் மனம் ஒளிக்கும் இருளுக்கும் ஊடாகத் தவித்தது. அவர் வாழ்வு பாசத்துக்கும் கடமைக்கும் இடையே கிடந்து குழம்பியது. அமைதி அவரிடமிருந்து விடைபெற்றுச் சென்று வெகு நாட்களாகி விட்டன.

கடைப் பொறுப்புகள் முருகனின் தலையில் சுமந்தன. கிடைக்காத அமைதியைத் தேடிச் சதா திரிந்து கொண்டிருந்தது பரமசிவத்தின் மனம்.

கணவரின் குழப்பத்தை அறிய முடியாத பார்வதி தன் பிள்ளைக்குப் பெண் தேடி நிச்சயம் செய்து கொண்டிருந்தாள்.

கல்யாணப் பொறுப்புகளைக் கூடப் பெரும்பாலும் கடைச் சிப்பந்திகள் தலையில் சுமத்திவிட்டு, சாந்தி தவழும் முருகன் சந்நிதிக்கு, ஆற்றங்கரை மணல் திட்டுக்கு வந்து விடுவார் பரமசிவம்.

அன்றும் அப்படித்தான்.

அந்தி நிலவு ஆற்றங்கரையை அழகு மயமாக்கிக் கொண்டிருந்தது. அழகு ரசனையில் மனம் ஒன்றாத பரமசிவம் துண்டை விரித்து மணலில் சாய்ந்தார். துள்ளு நடைபோட்டு ஓடும் தாமிரபருணியின் ஓசை 'ஓம் ஓம்' என்னும் பிரணவ மந்திரத்தைப் பரமசிவத்தின் செவிக்குள் பாய்ச்சி அவர் நினைவை எல்லை காண முடியாத அருட்ஜோதியின் திருவடி நோக்கி இழுத்துச் சென்று கொண்டிருந்தது.

தப்பைத் தொட்டு எழுப்பிய உருவத்தைக் கண்டு திடுக்கிட்டு விழித்தார் பரமசிவம்.

எதிரே நின்று கொண்டிருந்தான் சண்முகநாதன்.

"வாப்பா சண்முகம்! உன்னைப் பெற்றவர்கள் சௌக்கியமா?" என்று தமது திகைப்பை மறைத்துக் கேள்வியை எழுப்பினார்.

"வேடிக்கையான கேள்வி. பெற்றவர் எதிரே இருக்கும்போது 'சௌக்கியமா?' என்று என்னைக் கேட்டால்......?"

கேள்வியைத் திருப்பி மடக்கினான் சண்முகம்.

பரமசிவத்தின் நெஞ்சு துணுக்குற்றது. சண்முகம் மேலும் என்ன சொல்லுவானோ என்னும் பயம் வேறு கவ்விப் பிடித்துக் கொண்டது. புரியாதவர் போன்று விழித்தார் பரமசிவம்.

"புரியவில்லையா? புரிந்ததை ஒப்புக் கொள்ள மனம் தயங்குகிறதா? அல்லது தங்களை என் தந்தை என்று சொல்ல அஞ்சுகிறீர்களா?......"

'இல்லையடா மகனே!' என்று கூறி அவனை அன்புறக் கட்டித் தழுவிக் கொள்ள வேண்டும் என்னும் ஆவல் பேயாய்ப் பிடித்து அலைத்தது. கட்டுப்படுத்திக் கொண்டார்.

"எப்படித் தெரிந்ததென்று திகைக்கிறீர்களா? சொல்லுகிறேன், கேளுங்கள். முன்பின் தெரியாத ஒருவனுக்கு நீங்கள் பண உதவி செய்யக் காரணம் என்ன? இந்தக் கேள்வி மனத்திலே பிறந்தது. நான் முத்துசாமியின் வளர்ப்புப்பிள்ளை என்பதும் எனக்கு எப்பொழுதோ தெரிந்த உண்மை. இந்த இரண்டையும் இணைத்து உருவம் கொடுத்துப் பார்த்த போது உண்மை புலனாயிற்று. அதன் பேரில் நெல்லைக்குப் புறப்பட்டு வந்து இந்த ஒருவாரமாகச் சுற்றாத இடமெல்லாம் சுற்றி நான் உங்கள் பிள்ளைதான் என்பதை ஊர்ஜிதம் செய்து கொண்டேன். உங்களுக்கு ஒரு பிள்ளை இருந்தது திருச்செந்தூர் விசாகக் கூட்டத்திலே காணாமல் போனது உண்மை தானே?......மேலும், நான் தூங்கி விட்டதாக எண்ணி என் வளர்ப்புத் தந்தை உங்களிடம் பேசியதையெல்லாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்? என்னை உங்கள் பிள்ளையாக ஏற்றுக் கொள்ளப் போகிறீர்களா? அல்லது நான் இப்படியே அனாதையாகச் சுற்றித் திரியத்தான் வேண்டுமா?"

கொக்கிபோலெழுந்த கேள்வி கயிறாக மாறித் தம் குரல்வளையை நெறிப்பது போல் உணர்ந்தார் பரமசிவம். அவன் கேள்வி அவரது அடி மனத்திலே பதிந்திருந்த ஆவேச உணர்ச்சியைத் தட்டி யெழுப்பியது. எதை எண்ணிப் புழுங்கிச் செத்துக் கொண்டிருந்தாரோ, அதை வந்தவன் கேள்வியாக மாற்றி விட்டான்!

## அருள் வாக்கு

சிவன் தான் வெளுப்பு, விஷ்ணு கறுப்பு. உலகில் எந்தப் பொருளும் எத்தனை விதமான வர்ணங்களாக இருந்தாலும் அக்கினி பட்ட மாத்திரத்திலே எல்லாம் கறுப்பாகிவிடுகிறது. எல்லாவற்றுக்கும் ஆதாரம் கறுப்பு. அந்தக் கறுப்பையும் திருப்பி ஸ்புடம் போடும்போது என்ன மிஞ்சுகிறது? வெளுப்பு மிஞ்சுகிறது. அந்த வெண்மை தான் சாசுவதமானது. அதுதான் நீறு. சாதாரண நெருப்பு வெளிப் பொருள்களை பஸ்மமாக்கிவிடும். ஆனால் ஞானாக்கினி என்ன செய்கிறது? ஞானம் என்கிற நெருப்பு அஞ்ஞானங்களை எரித்து, சிவம் என்கிற பரம்பொருளை நமக்கு உணர்த்துகிறது. அதன் மூலம் சித்தத்தைத் தூய்மையாக்கி என்றும் பரிசுத்தமான நிலைமையை அடைய வழிகாட்டியாக இருக்கிறது.

-ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

இந்தக் கதையில்வரும் ஒரு காட்சியையே இவ்வார அட்டைப்படமாகத் தீட்டியிருக்கிறார் ஓவியர் லதா

இதுவரை வானத்திலே ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த வண்ண நிலவை எங்கிருந்தோ ஊர்ந்து வந்த மேகப் பாம்பு கவ்விக் கொண்டது. நிலவின் வேதனை இருளாகக் கீழே கவிந்தது. அந்த இருளில் கண்களில் முட்டிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டார் பரமசிவம் பிள்ளை.

"அப்பா...!" என்ற குரல் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனர். முருகன் படித்துறையை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

"யாரடா உன் அப்பன்? ஊர் பேர் தெரியாத உன் அப்பன் ராணுவத்தில் கண்காணாமல் எங்கேயோ சுற்றிக்கொண்டிருக்கிறான்!" என்று சீறிப் பாய்ந்தான் சண்முகம்.

"இருக்கலாம். ஆனால் இவர்தானே என் கண் கண்ட தந்தை" என்று அமைதியாகப் பதிலளித்தான் முருகன். முதல் நாள் தந்தை தன் குடும்பத்துள் நிகழ்ந்து விட்ட சோக வரலாற்றை முருகனிடம் கூறியிருந்தார். ஆதலால் புதியவனைக் கண்டு, அவன் பேச்சைக் கேட்டு முருகன் அதிசயிக்கவில்லை.

"வெகு நேரமாகி விட்டதே, அப்பா! அம்மா உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாளே......"

"அம்மா!" என்ற சொல் சண்முகநாதனை மின்சாரமாய்த் தாக்கியது. தன்னைப் பெற்ற பாக்கியவதியைக் காண அவன் கண்ணும் மனமும் துடித்தன.

"இதோ இப்பொழுதே ஓடிப் போய் என் அம்மாவிடம் நான்தான் உன் மகன் என்று கூறி உங்கள் வேஷத்தைக் கலைத்து விடுகிறேன்!" என்று வேகமாய்ப் பாய்ந்தான் சண்முகம்.

பாய்ந்தவனைத் தடுத்து நிறுத்தினான் முருகன். "போகுமுன் சற்றுச் சிந்தித்துப் பார். ஒத்திகை யில்லாதவன் மேடையேறினால் என்னவாகும்? வேஷம் மட்டும் போட்டுக் கொண்டால் போதாது. வேஷத்துக்கான ஒத்திகைகளும் தெரிந்திருக்க வேண்டுமல்லவா? அதேபோல் உன் அம்மாவின் நினைவு தெரிந்த நாள் முதலாய் நான் அவள் பிள்ளையாக இருக்கிறேன். இன்று திடீரென்று நீ அவள் பிள்ளை என்று போய் நின்றால் அம்மாவின் மனம் அதிர்ச்சியுறும். அதனால் ஏற்படும் விளைவுகளையெல்லாம் நினைத்துப் பார். முன்பொரு முறை அனுபவித்த வேதனைகளை மீண்டும் ஒரு முறை உன் பெற்றோர் அனுபவிக்க வேணுமா?"

பரமசிவமும் அதையே சொன்னார். அவர் குரலிலே நடுக்கம் தெரிந்தது.

"சலனமற்றிருக்கும் உன் அன்னையின் மனத்திலே புயலை எழுப்பி விடாதே, மகனே!...உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். உன் நல்வாழ்வுக்குப் போதுமான பணம் நான் தருகிறேன்."

நினைத்து வந்ததற்கு மாறாக அவர்கள் பேசிய பேச்சு பலத்த அடியாக விழுந்தது, சண்முகத்தின் நெஞ்சில்.

வானத்தை அண்ணாந்து நோக்கினான். பால் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தது வானம். உலகமெல்லாம் ஜோதி மழையைப் பொழியும் வானமும், வண்ண நிலவும் தனக்காக வாழவில்லை; மக்களுக்காக ஒளி பரப்புகிறது.

வெள்ளி உருகி ஓடுவதைப் போல் ஓடும் நதியைப் பார்த்தான். மலையில் பிறந்த நதி கடலைச் சென்றடைவதற்குள் கோடிக்கணக்கான மக்களுக்குப் பல வகையில் பலனளித்து விட்டுச் செல்கிறது. அதுவும் தனக்காகவோ தன் நல்வாழ்வுக்காகவோ உருவெடுக்கவில்லை.

மனிதன் மட்டும் சுயநலவாதிதானா?

'இல்லை...என் தாய்...என்னைப் பெற்ற தாய் சித்தம் கலங்காமல் நல்வாழ்வு வாழ வேண்டும். அவள் நல்லறிவுக்கு எமனாக, தந்தையின் அமைதிக்கு எதிரியாகத்தான் வாழ வேண்டாம், வாழவும் கூடாது' என்ற எண்ணம் மேலெழுந்தது.

தாய் இருந்த திசை நோக்கிக் கைகூப்பித் தொழுது கும்பிட்டு விட்டு வழி நடந்தான் சண்முகம். புயல்போல் வந்தவன் சாந்தமே உருவாய், தியாகமே முடிவாய் நடந்து சென்றான். அப்படிச் செல்லும் மகனைக் கண்டு திகைத்தார் பரமசிவம்.

'முருகா' என்ற மூன்றெழுத்து தாரக மந்திரத்திலே அமைதியைத் தேடிக் கொண்ட பரமசிவம் தம் பிள்ளை முருகனுடன் வீடு நோக்கி நடந்தார்!

# ஸாண்டோஸ்

# காப் ஸிரப்

## இருமலுக்கு இதமளிக்கிறது

இருமல்—ஜலதோஷ நிவாரணமாக, இயற்கையன்னை அளித்தருளிய வைத்திய மூலிகைகளுள் மிகவும் கைகண்ட மூன்று மூலிகைகளில் இருக்கும் அதே சத்துக்கள், விஞ்ஞான முறையில் ஒன்றுசேர்த்த நவீன மருந்தே ஸாண்டோஸ் காப் ஸிரப்.

தொண்டையிலுள்ள இரணவீக்கத்தை சட்டென்று கண்டித்து இதமளிப்பதற்கான மூலிகை பாபாவேர ஸோம்னிபேரம்; கட்டிப்போன கபத்தைக் கரைத்து, வெளியேற்றிவிட உதவுவதற்கான மூலிகை ஸெபைலிஸ் இபெகாகுவான்ஹா; மூச்சடைப்பு வேதனையை அதிவிரைவில் தணித்துவிடுவது எபேத்ரா என்ற 'இளைப்பாற்றும்' சக்தியுள்ள மூலிகை;—ஆகிய மூன்று சத்துக்களும் இதில் இணைந்துள்ளன.

அதனால்தான் ஸாண்டோஸ் காப் ஸிரப், டாக்டர்கள் குறித்துக் கொடுக்கும் மருந்தாக விளங்குகிறது. மேலும், செர்ரிப் பழம் போன்ற அதன் இனிப்பை குழந்தைகள் பெரிதும் விரும்புகின்றனர்.

ஸ்விஸர்லந்து நாட்டு ஸாண்டோஸ் ஆராய்ச்சி சாலையின் மருந்துச் சரக்கு.







லைசென்ஸ் பெற்ற, ஸாண்டோஸ்ப்ராடக்ட்ஸ்ப்ரைவேட் லிமிடெட் கம்பெனியினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

SCS.P. 2-50 TM.

# எங்கும் இருப்பது

எட்டாயிரம் அடி உயரத்தில் மலைச்சிகரத்தின்மேல் மண்ணுலகத்து மோசடிகள் இல்லையென்று அவர் நினைத்தார். ஆனால் அந்த மோசடிகள் அங்கும் இருந்தன.

நண்பர் வெயிதம்பரமும், நானும், கல்லூரியில் ஒன்றாகப் படித்த நண்பர்கள். படிப்புக்குப்பின் எங்கள் வழிகள் வேறுவேறு திசையில் பிரிந்து விட்டன. நான் ஆசிரியப் பயிற்சி பெற்று ஆசிரியராகப் போனேன். அவர் போலீஸ் இலாகாவில் வேலைபெற்று இன்ஸ்பெக்டர் பதவிக்கு வந்திருந்தார்.

மதுரை வட்டாரத்துக்குள்ளேயே ஒவ்வொரு ஊராக மாறி அவர் இன்ஸ்பெக்டராகவும், நான் ஆசிரியராகவும்வளையவளையவந்துகொண்டிருந்தோம்.

அந்த வருடம் எனக்குக் கோடை விடுமுறையின் போது அவர் கோடைக்கானலில் பதவி வகித்து வந்தார். எங்காவது ஒரு சாதாரண ஊரில் அவர் இருந்தாலும் மாதத்துக்கொரு முறை அவரைப் போய்ச் சந்தித்து விட்டு வராவிட்டால் எனக்குப் பொழுது போகாது.

''என்ன நகர வாழ்க்கை? ஒரே சுழற்சி. ஒரே ஆரவாரம். தினம் விடிந்தால் பத்திரிகைகளின் முகத்தில் விழித்து ஆகவேண்டி யிருக்கிறது. ஏதாவது நல்லது கண்ணில் தெரிகிறதா? 'பெண்ணைக் கடத்திக் கொண்டு போனான், பாங்கில் மோசடி, சென்னையில் நவீனத் திருட்டு, பரீட்சையில் தோல்வியுற்ற மாணவன் தற்கொலை; மூக்கருந்தான் பட்டியில் மூன்று கால்களோடு பிறந்த கன்றுக் குட்டி'-சை! உலகத்தில் நல்லதாக ஒன்றுமே நடைபெறாதா?''

''சீ! சீ! தினப்பத்திரிகையும், தரையுலகத்துச் செய்திகளுமே தெரியாமல் ஏதாவதொரு மலைக்காட்டில் போய்ப் பத்துப் பதினைந்து நாட்கள் இருந்துவிட்டு வரவேண்டும்'' என்று

கடலழகன்

அலுத்துப் போயிற்று. பசுமையைக் கண் நிறையப் பார்த்து மனம் குளிர, உடல் குளிர, இயற்கையை அனுபவித்து உற்சாகத்தைப் புதுப்பித்துக் கொண்டு வரவேண்டும். கார்ச் சத்தம், இரயில் சத்தம், தார்ரோடு, வெயில், காதைப் பிளக்கும் கலகலப்பு - இவற்றையெல்லாம் முழுக்க முழுக்க மறக்க வேண்டும்.

விடுமுறையைக் கழிப்பதற்கும், வெயில் காலத்துக்கும், ஏற்ற கோடைக்கானலிலேயே நண்பர் சிவசிதம்பரம் இருக்கும்போது போகாமல் இருப்பேனா? நிலப்பகுதி ஊர்களில் வெப்பம் அரசு செலுத்திக் கொண்டிருக்கும் அந்த மூன்று மாதங்களும் கோடைக்கானல் சொர்க்கந்தான். பதினைந்து நாட்கள் ஓய்வாகத் தங்கி விட்டு வரும் நோக்கத்தோடு சிவசிதம்பரத்துக்கு முன்கடிதமும் எழுதிப் போட்டு விட்டுப் புறப்பட்டேன்.

சிவசிதம்பரம் ஆவலோடு வரவேற்றார். ஆகா! கோடைக்கானல் கோடைக்கானல் தான்! எத்தனை உயரமான மலைச்சிகரங்கள்! எவ்வளவு அருவிகள், பல வண்ணமலர்கள், செடிகள், கொடிகள், எப்போதும் பாலாவி போல் மெல்லிய மேகங்கள் மூட்டமிட்டுக் குளிர்ச்சியாக இருக்கும் சூழ்நிலை.

''சிவசிதம்பரம்! இந்த ஊரில் இருக்கிற வரையில் நீர் கொடுத்து வைத்தவர்தான் ஐயா!'' என்று வியந்து கூறினேன். சிவசிதம்பரம் அலட்சியமாகத் தோள் கொட்டி விட்டுச் சிரித்தார்.

''கொடுப்பதாவது, வைப்பதாவது? போலீஸ் உத்தியோகத்திலிருப்பவனுக்கு எந்த இடத்தில் இருந்தாலும் ஒரே மாதிரித்தான். எங்கள் வேலை துன்பம் நிறைந்தது. துன்பத்தைத் தேடிக்கொண்டு போவது. சில சமயத்தில் மட்டும் துன்பத்தைப் போக்குவது'' என்று அலுத்துக் கொண்டார் அவர்.

''என்ன ஐயா இது? பணத்தைப் பணமென்று பாராமல் செலவழித்துக் கொண்டு 'சீஸனை' அனுபவிப்பதற்கு எங்கிருந்தெல்லாமோ இங்கே வருகிறார்கள்! நீரோ இந்த இடத்திலேயே இருந்துகொண்டு அலுத்துக் கொள்கிறீரே.''

''உங்களை மாதிரி ஒரு வாரம், இரண்டு வாரம் வந்து தங்கிவிட்டுப் போகிறவர்களுக்கு எல்லாம் சுகம்தான். மலையையும் பசுமையையும் பார்த்து மனம் நிறையலாம். நாங்கள் இங்கே வந்தாலும், திருடனையும், கொலைகாரனையும் தானே பார்த்துத் தேடிப் போக வேண்டியிருக்கிறது.''

''யாரை வேண்டுமானாலும் தேடிக்கொண்டு போங்கள். நான் ஊருக்குப் போனபின் அதையெல்லாம் வைத்துக் கொள்ளலாம். சுற்றிப் பார்க்க வந்த இடத்தில் என்னைத் தனியாக விட்டுவிட்டு எங்கேயாவது கிளம்பிப் போய் விடாதீர்'' என்று பீடிகை போட்டுக் கொண்டேன் நான்.

கோடைக்கானலில் சிவசிதம்பரம் குடியிருந்த வீடு 'கோக்கர்ஸ்வாக்' என்ற பகுதியை ஒட்டி ஒரு மேட்டில் அமைந்திருந்தது. வீட்டைச் சுற்றி யூகலிப்டஸ் மரங்கள். பச்சைப் புல்வெளி. அதில் சித்திரக்காரன் அள்ளித் தெளித்த வர்ணங்கள் போல் பல நிற மலர்ச்செடிகள். தூரத்தில் மலைப்பள்ளத்தாக்கினிடையே இயற்கை பதித்து வைத்த பெரிய கண்ணாடியைப் போல் ஏரி. அப்பால் கண்ணுக்கெட்டிய தூரம் வீறுகொண்டு புடைத்தெழுந்த இயற்கையின் பசுமை வீக்கம் போல் மேகம் படிந்த மலைகள். மலைச் சரிவுகளில் படிப்படியாகப் பாத்தி எடுத்துக் காய்கறிகள் பயிர் செய்திருந்தார்கள். மரங்கள் அடர்ந்து தெரிந்த பகுதிகளெல்லாம் சில பேருடைய தலையில் அடர்ந்து 'கர்லிங்' விழுந்த மயிர்ச் சுருள்கள் போல் தெரிந்தன. ஒருவேளை மலைமகளின் கருங்குழற் சுருளோ அந்த அடர்த்தி?

''வெந்நீர் தயாராயிருக்கிறது! உள்ளே போய்க் குளித்துவிட்டு வாருங்கள். சாப்பாட்டை முடித்துக்கொண்டு ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பலாம். ஜீப் எடுத்துக் கொண்டு வரச் சொல்லி ஸ்டேஷனுக்குச் சொல்லிவிட்டிருக்கிறேன்'' என்று சிவசிதம்பரம் துரிதப்படுத்தினார்.

''வாத்தியார் மாமா வந்திருக்கிறார்'' என்று கூச்சலிட்டுக்கொண்டு வந்து சூழ்ந்து கொண்ட சிவசிதம்பரத்தின் குழந்தைகளுக்கு உரிய பொருள்களைக் கொடுத்து அனுப்பிய பின் குளிக்கக் கிளம்பினேன். கோடைக்கானலின் குளிரில் ஆவி பறக்க உலைநீர்போல் கொதித்த வெந்நீர்கூட ஒரு சூடாக உடம்பில் உறைக்கவில்லை.

சாப்பாடு முடிந்ததும் ஜீப்பில் சுற்றிக் காட்டுவதற்காக என்னை அழைத்துக்கொண்டு கிளம்பினார் நண்பர். காலையில் பத்துப் பதினொருமணி இருக்கும் அப்போது. நண்பகல் இரண்டு மணிக்குள் கோடைக்கானலின் கிழக்குப் பகுதி முழுவதும் நாங்கள் சுற்றிப் பார்த்து விட்டோம்.

சில்வர்காஸ்கேட் அருவி, செண்பகனூர் பெருமாள் மலைச்சிகரம், குறிஞ்சி ஆண்டவர் கோவில், ஒவ்வொரு இடத்தையும் பார்க்கும்போதும், உலகத்து ஓசைகளே இல்லாத அந்த மலைச் சாலைகளில் சுற்றும்போதும் எத்தனை இன்பமாக இருக்கிறது.

''சிவசிதம்பரம்! மண்ணுலகத்துத் துன்பங்களே தெரியாமல் வாழ வேண்டுமானால் இந்த மலைத்தொடர்களில் எங்கேயாவது ஒரு வீடு கட்டிக்கொண்டு ஒதுங்கி வாழ வேண்டும். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன். அவர் மெல்லச் சிரித்தார்.

''இதுவும் மண்ணுலகம்தான்! இங்கும் மண்ணுலகத்துக் கவலைகள், மோசடிகள், சூது, வாது, கொலை, கொள்ளை எல்லாம் உண்டு. என்னோடு இரண்டு நாட்கள் இருந்தால் தெரியும்'' என்றார்.

''சே! சே! இந்தப் போலீஸ் ஆட்களுக்கு இயற்கையழகை அனுபவிக்கவே தெரியாதா? எங்கு போனாலும், எதைப் பார்த்தாலும் கொலை, கொள்ளை, மோசடிதானா? நல்ல ஆள் ஐயா! உம்மோடு சுற்றிப் பார்க்க வந்தேனே?'' என்று பொய்க் கோபத்தோடு அவருக்குச் சூடு கொடுத்தேன் நான். அவர் பதில் சொல்லாமல் சிரித்தார்.

வீட்டுக்குப் போய்ச் சிற்றுண்டி காப்பியை முடித்துக்கொண்டு மறுபடியும் ஜீப்பில் புறப்பட்டோம்.

ஏரிக் கரையில் போட் கிளப்புக்கு அருகே ஏழு ரோடுகள் பிரியுமிடத்தில் ஜீப் நின்றது.

படகுத்துறைக்கு அருகில் அழைத்துப்போய் ஏரியைக் காட்டினார் சிவசிதம்பரம்.

அங்கே வைரமும், தங்கமுமாக இழைத்துப் பூட்டியிருந்தாற்போல் ஏராளமான நகைகளை அணிந்து கொண்டு பட்டுப் பூச்சிகள்போல் இரண்டு அழகிய இளம் பெண்கள் அப்போது தான் ஒரு படகில் கிளம்பிக் கொண்டிருந்தனர். முப்பது முப்பத்திரண்டு வயது மதிக்கத்தக்க மனிதர் ஒருவர் மேனாட்டு முறையில் நாகரிகமாக உடையணிந்து அந்தப் படகின் துடுப்பை வலித்துச் செலுத்திக் கொண்டிருந்தார். அந்தப் பெண்களில் ஒருத்தி அவருடைய மனைவியாகவும், மற்றொருத்தி அவருடைய சகோதரியாகவும் இருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது.

''சிவசிதம்பரம்! கோடைக்கானலில் என்ன மாதிரி அனுபவிக்கிறார்கள் பார்த்தீர்களா? இப்படிக் குடும்பத்தோடு இயற்கையை அனுபவிக்கப் புறப்படும் மனோபாவம் நம் நாட்டில் மத்தியதரக் குடும்பங்களில் இன்னும் பரவவே இல்லை. பெரும்பாலோருக்கு அழகுணர்ச்சி இல்லாமல் இருப்பதற்கும், நோய்களின் பெருக்கத்துக்கும் இதுதான் காரணம்.''

சிவசிதம்பரம் முன்போலவே சிரித்தார். ''அது சரி! அவர்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார்.

''ஏன்? ஒன்றாக ஒரே படகில் போவதைப் பார்த்தாலே தெரியவில்லையா?''

''ஓகோ!'' அவர் முறுவல் பூத்தார்.

''போம் ஐயா! போலீஸ் மனத்தோடு, போலீஸ் கண்களால் பார்த்தால் உலகமே அயோக்கியத்தனமாகத்தான் தெரியும்.'' என் கோபத்தை அவரைத் தாக்கிப் பேசித் தீர்த்துக் கொண்டேன்.

அவர் சிரித்துக் கொண்டே பேசாமல் இருந்து விட்டார்.

''பாரும், ஐயா! நன்றாகக் கண்களைத்திறந்து பாரும். அந்தப் பெண்களை உட்கார்த்தி அந்த மனிதன் சிரமப்பட்டுப் படகைச் செலுத்துகிறான். சரளமாகச் சிரித்துப் பேசிக் கொண்டு போகிறான். ஒரே குடும்ப மென்பதற்கு வேறென்ன சான்று வேண்டும்?''

''நண்பரே! பதினைந்து ஆண்டுகளாக இந்தக் காக்கி உடுப்புக்களில் புகுந்துகொண்டு உலகத்தைப் பார்த்து வருகிறவன் நான். என் கண் பார்வைக்குப் படுகிறமாதிரி உங்கள் பார்வையில் எதுவும் படமுடியாது.''

''அதெப்படி முடியும்? உங்கள் கண் பார்வைக்கு எதுவுமே நியாயமாகப்பட முடியாதே!'' நான் குதர்க்கம் பேசினேன்.

''சரி! இப்போது நமக்கெதற்கு இந்த வீண் விவாதம்? நாம் மேற்கொண்டு சுற்றிப் பார்க்கப் போகலாம், வாருங்கள்'' என்று கூறி, என்னை அங்கிருந்து அழைத்துக்கொண்டு புறப்பட்டார் இன்ஸ்பெக்டர்.

மூனூறு டாப் ஸ்டேஷன் ரோட்டில் திரும்பி 'பில்லர் ராக்ஸ்' போகிற வழியில் ஜீப் சென்றது. வானிலை ஆராய்ச்சி நிலையம், பெய்ரிபால்ஸ், காப்லிங்க்ஸ்-எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தோம். மனித நடமாட்டமே இல்லாத மலைப்பகுதிகள் அத்தனையும். எனக்கு நிம்மதியாக இருந்தது.



''கண்டக்டர்! எனக்கு எப்படியாவது வண்டியிலே இடம் கொடுங்க! சீக்கிரம் போகணும்!''

''என் தலையிலேதான் காலி இடம் இருக்கு. அதிலேதான் நீங்க உட்காரணும்!''

---

மணி ஐந்தரைக்கு மேலானதும் இருட்டியது போல் மூடுபனி வந்து கவிந்து கொண்டது.

''இன்றைக்குப் போதும்! மற்ற இடங்கள் நகரிலிருந்து சில மைல்கள் தள்ளிச் சுற்றுப் புறத்தில் இருக்கின்றன. நாளைக்குக் காலையில் மறுபடியும் புறப்படுவோம்'' என்று கூறினார் சிவசிதம்பரம். திரும்பி விட்டோம்.

கடுங்குளிரோடு மூடுபனியின் மங்கலில் ஒளி மழுங்கிய மின்சார விளக்குகள் அங்கங்கே மினுக்கின. அப்போது அந்த அந்தி நேரத்தில் கோடைக்கானல் பூப்பு நீராடி முடித்த கன்னிகைபோல் மிக அழகாக இருப்பதாக ஒரு கற்பனை உதயமாயிற்று எனக்கு.

வீட்டுக்குத் திரும்பியதும் கோக்கர்ஸ்வாக் மலையிலிருந்து கீழே பள்ளத்தில் இருக்கும் ஊர்களை வேடிக்கை காண்பித்தார் நண்பர். இரவில் அந்த ஊர்களின் விளக்குகள் மின் மினிப் பூச்சிகளாகத் தெரிந்தன.

ஏழு, ஏழரை மணிக்கெல்லாம் ஊரடங்கி விட்டது. குளிர் தாங்க முடியவில்லை. மூச்சுப் பலமாக விட்டால் மூக்கிலிருந்து புகை வருவது மாதிரித் தெரிந்தது.

சூடான இரவு உணவு வாய்க்கு ருசியாக இருந்தது. சாப்பாடு முடிந்து வெற்றிலை போட்டுக் கொண்டதும், ''பேப்பர் பாருங்கள்'' என்று நாலைந்து இனசரிகளைக் கொண்டு வந்து என் முன்னால் போட்டார் அவர்.

''ஐயோ! பத்துப் பதினைந்து நாட்களுக்கு இந்தச் சனியன்களை என் கண்ணில் காட்டாதீர்கள். இவைகளைப் பார்க்கக் கூடாதென்று தான் இங்கு வந்திருக்கிறேன்'' என்று வெறுப்போடு அவற்றை மடித்துத் தூக்கி எறிந்தேன். சிவசிதம்பரம் சிரித்துக் கொண்டே அவற்றை

எடுத்து நிதானமாக ஒவ்வொன்றுகப் பாராயணம் செய்வது போல் படித்த பின்புதான் என் பக்கம் திரும்பினர்.

"ஏன் ஐயா, உம்மால் எப்படி இவற்றைப் பொறுமையாகப் படிக்க முடிகிறது? பக்கத்துக்குப் பக்கம், வரிக்கு வரி கொலை, கொள்ளை, மோசடி, சோரம் போனவள், தவிர வேறு ஏதாவது நல்ல சமாசாரம் இவற்றில் இருக்கிறதா?" என்று அவரைக் கேட்டேன் நான். பதில் சொல்லாமல் எல்லா உண்மைகளும் புரிந்த வேதாந்தியைப் போல் அந்தப் பழைய சிரிப்பைக் காட்டினர் அவர்.

காலையில் நான் எழுந்திருக்கும் போது ஏழரை மணி. எனக்கும் முன்பே எழுந்திருந்து உத்தியோக உடையுடன் எங்கோ புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தார் சிவசிதம்பரம்.

"என்ன? எங்கோ கிளம்புகிற் போலிருக்கிறதே?" என்றேன்.

"ஸ்டேஷனிலிருந்து அவசரமாக ஜீப் வந்திருக்கிறது. நான் போக வேண்டும். நீங்களும் பல் விளக்கிக் காப்பியைக் குடித்து விட்டு உடன் வாருங்கள். அப்படியே ஸ்டேஷனிலிருந்து நாம் சுற்றிப் பார்க்கக் கிளம்பலாம்" என்றார் அவர்.

நானும் அவசர அவசரமாகப் பல் விளக்கிக் காப்பி சாப்பிட்டு விட்டு அவரோடு புறப்பட்டேன். ஜீப் போலீஸ் ஸ்டேஷன் வாசலில் நின்றது. ஹெட் கான்ஸ்டேபிள் வந்து சலாம் வைத்தார். "சார்! 'லேக் வியூ லாட்ஜி'லிருந்து அவசரமாகப் போன் செய்தார்கள்" என்று கூறினர் அவர்.

ஜீப்பில் இரண்டு கான்ஸ்டேபிள்களையும் ஏற்றிக் கொண்டு லேக்வியூ லாட்ஜுக்கு விடச் சொன்னர் சிவசிதம்பரம். பத்தே நிமிடங்களில் கார் லேக்வியூ லாட்ஜின் வாசலில் போய் நின்றது. லாட்ஜின் முதலாளி பரபரப்போடும் பதற்றத்தோடும் இன்ஸ்பெக்டரை வரவேற்றார். நானும் சிவசிதம்பரத்தோடு கூடவே சென்றேன். மூன்றுவது மாடியில் பதின்மூன்றும் நம்பர் அறைக்கு எங்களை அழைத்துச் சென்றார் லாட்ஜ் சொந்தக்காரர். அறை வாசலில் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இரண்டு இளம் பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். அருகில் நெருங்கியதும் அவர்கள் இன்னரென்று எனக்குத் தெரிந்து விட்டது. முதல் நாள் மாலை ஏரிக்கரையில் படகில் பார்த்த பெண்கள்தான் அவர்கள். லாட்ஜ் முதலாளி இன்ஸ்பெக்டர் காதருகில் சென்று ஏதோ கூறினர்.

இன்ஸ்பெக்டர் அந்தப் பெண்களுக்கருகில் போய் நின்று கொண்டு பதவியின் கடுமையோடு அவர்களைப் பற்றி விசாரித்தார்.

அந்தப் பெண்கள் மதுரையில் ஒரு பெரிய கண்ணியமான குடும்பத்தைச் சேர்ந்தவர்களென்றும், கல்லூரியில் படிப்பதாகவும் தகவல் கிடைத்தது.

"எதற்காக இங்கே வந்தீர்கள்? யாரோடு வந்தீர்கள்?"

அந்தப் பெண்கள் ஒன்றும் பதில் கூருமல் ஒரு ஆங்கிலத் தினசரியின் 'கட்டிங்'கை எடுத்து வந்து அவரிடம் நீட்டினர்கள்.

அது ஒரு விளம்பரம். அதில் சினிமாவில் நடிக்கப் படிப்பும், புதுமைக் கொள்கைகளுமுள்ள அழகான புது முகங்கள் தேவையென்றும், விருப்பமுள்ளவர்கள் கீழ்க்கண்ட முகவரியில் தங்கியிருக்கும் எமது புரொட்யூசரையும், டைரக்டரையும் நேரில் சந்திக்க வேண்டியது என்றும் குறிப்பிட்டுக் கோடைக்கானலில் அந்த லாட்ஜின் விலாசத்தோடு ரூம் நம்பரும் குறித்திருந்தது.

"அட பைத்தியங்களா? படித்திருக்கிறீர்களே? இதை நம்பிக்கொண்டு வந்தீர்களா? நீங்கள் என்று இங்கு வந்தீர்கள்? வரும்போது யார் இங்கு இருந்தார்கள்?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"நேற்றுக் காலையில்தான் இங்கு வந்தோம். ஒரே ஒரு நடுத்தர வயது மனிதர் 13-ம் நம்பர் அறையில் இருந்தார். அவரை லாட்ஜ் காரியருக்கும் தெரியும். தான் அந்தச் சினிமாக் கம்பெனியின் டைரக்டர் என்றும் புரொட்யூசர் இரண்டு நாட்களில் மதராஸிலிருந்து வந்துவிடுவாரென்றும் கூறி, எங்களுக்குத் தங்க வசதி செய்து கொடுத்தார் அவர்."

"அப்புறம் என்ன நடந்தது?"

"நேற்று மாலை பூராவும் அவரோடு ஊர் சுற்றிப் பார்த்தோம்."

"அப்புறம்?"

"இன்று காலையில் எங்கள் நகைகளையும் காணவில்லை; அவரையும் காணவில்லை."

"எவ்வளவு பெறுமானமுள்ள நகைகள்?"

"இரண்டு பேருடையதும் சேர்த்துப் பத்தாயிரத்துக்குத் தேறும்! இங்கே திருட்டுப் பயம் அதிகம் என்றும் நகைகளைக் கழற்றி வைத்து விட்டுப் படுத்துக்கொள்ள வேண்டுமென்றும் நேற்றிரவு அவர்தான் சொன்னர்."

"அதை வேத வாக்காக நம்பினீர்கள், இல்லையா?" இன்ஸ்பெக்டர் இரைந்தார்.

"ஸ்டேஷனுக்கு வந்து விரிவாக ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுங்கள். உங்கள் பெற்றேர் விலாசம் இப்போது வேண்டும்" என்று எழுதி வாங்கிக் கொண்டார்.

"என்ன ஐயா? பார்த்துக் கொண்டீரா?" சிவசிதம்பரம் என் பக்கமாகத் திரும்பிக் கேட்டு விட்டுச் சிரித்தார். அந்தச் சிரிப்பைச் சிரிக்கும்போது அவர் சாதாரணப் போலீஸ் இன்ஸ்பெக்டர் மாதிரித் தெரியவில்லை. துன்பங்களைக் கேட்டுப் பார்த்து மரத்துப்போன வேதாந்தியாகவே தோன்றினர்.

லாட்ஜின் வாசலில் இறங்கி நடந்தபோது முதல்நாள் பூப்பு நீராடிய கன்னிகை மாதிரித் தோன்றிய கோடைக்கானலின் இயற்கை வனப்பு ஒரு குஷ்டரோகம் பிடித்த கிழவியைப் பார்த்த மாதிரி அருவருப்பாக இருந்தது.

உலகத்தில் மோசடி, ஏமாற்று இல்லாத இடமே கிடையாது போலும். மனிதக் காலடி படுகிற இடமெல்லாம் அவையும் இருக்கின்றன.

"சிவசிதம்பரம்! நான் சாயங்காலம் கடைசிக் காருக்கு ஊர் திரும்ப வேண்டும்!"

"ஏன்? பதினைந்து நாட்கள் இருக்கப் போவதாக அல்லவா சொன்னீர்கள்?"

"இல்லை! ஊரில் கொஞ்சம் வேலை இருக்கிறது!"

அவர் சிரித்தார். எத்தனையோ உலகியல் உண்மைகளைச் சீரணித்து அனுபவப்பட்ட சிரிப்பு அது.

## ஜீவசக்தி நிரம்பியது ...



மைவிடல் குடும்பத்தினர் அனை வருக்கும் அதிக உற்சாகம் தருகின் றது. அநேக வைடமின் சத்துக்களுடன் கூடிய மைவிடல் ஸிரப் குழந்தை களின் வைடமின் சத்துக்குறைபாடு களை நீக்கி குழந்தைகள் ஆரோக்ய முடன் வளர உதவுகிறது.

# மைவிடல்




சாரயப் பொருள் சேராதது

அநேகவைடமின் கூடிய ஸிரப்

டிரேட் ITL மார்க்

ஸ்ரீ காமகூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிட்., பெங்களூர்-3.

BOMAS-334 A-TM

---

# கால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

## வீரிய குளோரோபிலின் பூரணநன்மைகளை




*வீரிய குளோரோபில்தான் உங்களுக்கு நன்மை தரவல்லது!*

வாயில் தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்குப் புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தை யாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப் படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளை பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTP/4/3



**விளையாட்டாகச் சிபாரிசு செய்தான் ராமானந்தன். அந்தச் சிபாரிசின் விளைவு உலகத்தில் உண்மை நன்றியுள்ள மனிதன் ஒருவனை உண்டாக்கியது.**

"மண்ணைப் பொன்னாக்கும் மாய வித்தை என்ன? இரசவாதமா? இல்லை. உழைப்புத்தான் சரீரத்தைச் சாறுகப் பிழியும். நெற்றி வேர்வை நிலத்தில் வழிந்தோட உழைக்கும் உழைப்புத்தான் மண்ணைப் பொன்னாக்கும் மாய வித்தை."

இந்த மொழிகள் என்னுடைய இன்னுயிர் நண்பன் - பள்ளித் தோழன் ஒரு சந்தர்ப்பத்தில் உரைத்தவை.

ஒரு சமயம் சேலம் ஜில்லா வழியாகக் கோயமுத்தூரை நோக்கி வேகமாகக் காரில் போய்க் கொண்டிருந்தேன். போகும் வழியின் இருமருங்கிலும் அங்கங்கே வெறும் பாசனத்தினால் வறண்ட மேட்டு நிலத்தையும் சோலைவனமாகிய தோப்புக்களையும் துரவுகளையும் கண்டபொழுது ராமானந்தன்; வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. ஓர் இடத்தில் உட்கார்ந்து உழைத்து உருப்படியாக ஒன்றும் செய்யாத நண்பன் ராமானந்தன். இந்த வார்த்தைகளைப் புகன்றான் என்று நினைத்தபோது சிரிப்பும் வந்தது. அப்போது எதிர்பாராத விதமாய் வேகமாகப் போய்க் கொண்டிருந்த என்னுடைய கார் திடீரென்று வேகம் தளர்ந்து பாதையின் ஓரமாகப் போய் நின்றது.

"ஏனப்பா நிறுத்துகிறாய்? நாம் ஆறு மணிக்குக் கோயமுத்தூரில் இருக்க வேண்டுமே. இப்போதே மணி நாலரையாகி விட்டதே" என்றேன் டிரைவரிடம்.

"இல்லீங்க ஏதோ கோளாறு" என்று முணுமுணுத்துக் கொண்டு காரை விட்டு இறங்கிப் பழுது பார்க்க ஆரம்பித்தான். பின்பு "சரிதான் நான் நினைச்சதுபோலவே ஆயிட்டுதுங்க. அந்தப் பார்ட்டை நேத்தே மாத்தாமல் போனது தப்புங்க. கோயமுத்தூர் வேலை முடிஞ்சதும் மாத்தலாம் என்று நினைச்சேன். ஆனால் இப்ப......" என்று இழுத்தான்.

"சரி! சரி! இப்போது காரைக் கிளப்ப வழிபாரு" என்றேன்.

"இல்லீங்க. புதுசாப் போட்டாத்தான் முடியும் போல் இருக்கிறது!" என்று சொல்லிவிட்டு, மேலும் தீவிரமாகச் சரிபார்க்க ஆரம்பித்தான்.

எனக்கு அதற்குமேல் அவனை ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. கடந்த பதினைந்து வருஷ காலம் என்னிடம் உண்மையாக உழைத்துக் கொண்டிருப்பவனை என்னத்தைச் சொல்வது?

காரில் கொஞ்ச நேரம் இருந்தேன். பின்பு காரை விட்டு இறங்கிக் கொஞ்ச தூரம் நடந்தேன். பொழுது தலைகுப்புறச் சாய்ந்து பொன்னிறக் கதிர்களை எங்கும் பரப்பிக் கொண்டிருந்த காட்சி மனத்துக்கு ஒருவித மகிழ்ச்சியை ஊட்டியது. கண்ணுக்கு எட்டிய தூரம் குப்பல் குப்பலாகப் பச்சைப் பசேலென்ற காட்சிகள் தெரிந்தன.

சுமார் அரை மைல் தூரம் இவ்வாறு போய்த் திரும்பி வந்தேன். இன்னும் சொக்கலிங்கம் பழுது பார்ப்பதை நிறுத்தவில்லை. 'சரிதான் இன்று இரவு இங்கேதான் வாசம்' என்று மனத்தில் பட்டது.

அப்போது அங்கு வந்த இருகிராம மக்களில் ஒருவன் என்னிடம் வந்து, "கார் பழுதாய்ப் போச்சோ?" என்று இரக்கத்தோடு கேட்டான்.

"ஆமாம் எதிர்பாராமல் இப்படி ஆய்விட்டது. டிரைவர் சேலத்துக்குப் போய் அதை வாங்கி வந்தால்தான் முடியும்."

"இங்கே பக்கத்திலே ராமானந்தன் பண்ணை இருக்குதுங்க. அவரு காரு வைச்சிருக்காரு. அவருக்கிட்டே இருந்தாலும் இருக்கும்னு நினைச்சேன். கேட்டுப் பார்க்கலாமுங்க."

'ராமானந்தன் பண்ணை' என்று கேட்ட மாத்திரத்தில் எனக்கு ஒருவித மயக்கம் ஏற்பட்டது. ஆனால் அதை நான் காட்டிக் கொள்ளவில்லை. என்னுடைய வாழ்க்கையில் ராமானந்தன் என்ற பெயர் என்னுடைய நண்பனின் பெயர். வேறு எந்த வகையிலும் அப்படிப்பட்ட பெயரை நான் கேட்டதில்லை. ஆனால் இன்று "ராமானந்தன் பண்ணை" என்று கேட்ட

மாத்திரத்தில் என்னையறியாமல் ஒரு வித அதிர்ச்சி உண்டாயிற்று.

"இங்கிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கும் அந்த இடம்?" என்று அக்கிராமவாசியைக் கேட்டேன்.

"முக்கால்கல் தூரம் இருக்குமுங்க."

இதற்குள் டிரைவரும் வந்த ஒரு பஸ்ஸை நிறுத்தி அதில் ஏறிச் சேலம் போய் விட்டான். நான் தனியாக நின்றேன். அதோடு காரை அங்கே தனியே விட்டு விட்டு முக்கால் மைல் தூரத்திலுள்ள இடத்துக்குப் போக வேண்டும்.

என்னுடைய மலைப்பைக் கண்டு அவர்களில் ஒருவன், "நான் போய்ப் பண்ணை முதலாளியைக் கண்டு விசயத்தைச் சொல்றேனுங்க. உடனே அவர் தம்முடைய காரை எடுத்துக்கிட்டு இங்கே ஓடியாந்திடுவாரு" என்றான்.

ஆனால் நான் அந்த இடத்துக்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற துடிப்பை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. நண்பன் ராமானந்தன்தான் அந்தப் பண்ணையை அங்கு ஏற்படுத்தி இருக்க வேண்டும் என்று என்னுள் ஏதோ நிச்சயமாய்ச் சொல்லிற்று. ஆதியிலிருந்தே அவன் விநோதப் பேர்வழி. எந்த நிமிஷத்தில் எங்கிருப்பான், எதைச் செய்வான் என்று யாராலும் சொல்ல முடியாது. அவனுடைய சரித்திரத்தை எண்ணிய போது என் மனத்தில் என்னென்ன கற்பனைகளோ ஓடின. அப்படியானால் கடைசியாகக் கல்கத்தாவிலிருந்துவந்த கடிதம்? அவன் இன்னும் இந்த உலகத்தில் இருக்கிறானா? அதுவும் இந்த எட்டு வருஷ காலமாக...

அப்புறம் நானாகவே என் எண்ணத்தைத் திருத்திக் கொண்டேன். ராமானந்தன் என்று வேறு யாராவது இருக்கக் கூடாதா?...கட்டாயம் இருக்கும். ஆனாலும் சட்டென்று அந்த எண்ணம் மீண்டும் அவன் சார்பிலேயே திரும்பியது. நிச்சயம் இது என் நண்பன் ராமானந்தன்தான். அவன் மனத்தில் இந்த மாதிரி திட்டங்களெல்லாம் அடிக்கடி உருவாவது உண்டு.

புத்தி குழம்பியது. சரி என்னவானாலும் நேரில் போய் அந்தப் பண்ணையைப் பார்த்து விடத் தீர்மானித்தேன்.



வி. எஸ். எஸ்.

காரை ரோட்டை விட்டுப் பத்திரமான இடத்தில் நிறுத்திவிட்டு, நானும் அந்தக் கிராமத்து ஆளில் ஒருவனும் ராமானந்தன் பண்ணையை நோக்கி நடக்கலானோம்.

• • •

ராமானந்தனின் நினைவாகவே பண்ணையை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். எனக்கு என்னமோ, இதெல்லாம் ராமானந்தன் வேலையாகத்தான் இருக்கவேண்டும் என்று தோன்றியது. என்னைக் கண்டதும் அவனுக்குப் பெரிய வியப்பு ஏற்பட்டு அதை அடுத்து ஒரு பெரிய கதையும் சொல்லப் போகிறான் என்று பட்டது. அவனை உயிரோடு பார்க்கப் போகிறோம் என்று நினைத்த மாத்திரத்தில் என் உடலும் புல்லரித்தது.

ஒரே ஊரில் பிறந்து, ஒன்றாய் விளையாடி, ஒன்றாய்ப் படித்து வளர்ந்த நண்பன் அவன். பள்ளி நாட்களை விடப் பள்ளியை விட்டபிறகு தான் எங்கள் நட்பு முதிர்ந்தது. நாடோடியான அவன் மீது எங்கள் குடும்பத்தில் எல்லோருக்குமே ஒரு தனியான பற்று.

ஆனால் வந்த கடிதம் கல்கத்தா ஆஸ்பத்திரி ஒன்றிலிருந்து வந்திருந்தது. ஆனால் அது உண்மையான கடிதந்தானா, ராமானந்தனின் பல திருவிளையாடல்களில் அதுவும் ஒன்றா என்று பலத்த சந்தேகமும் ஆச்சரியமும் உண்டாயிற்று.

பள்ளி நாட்களிலேயே அவனுடைய செயல் எல்லாம் மிகவும் வேடிக்கையாகவும் விநோதமாகவும் இருக்கும். சர்க்கார் உத்தியோகத்திலிருந்த தந்தை தம்முடைய ஒரேமகனின் செலவுக்கென்று அனுப்பும் பணத்தை யெல்லாம் நண்பர்களுக்காக அனாயாசமாய்ச் செலவழிப்பது அவன் வழக்கம். எதிர்பாராத விதமாய்ப் பள்ளிக்கூடத்துக்கு வராமல் எங்கேயாவது போய் விடுவான். அதிகம் படிப்பது இல்லை. இருந்தாலும் இயற்கையாக இருந்த புத்திக் கூர்மையால் எங்களை யெல்லாம் விட அதிகமான மார்க்குகள் வாங்குவான்.

பத்தாவது வகுப்பு முடிந்ததும் நான் படிப்பை நிறுத்திவிட்டு என் தந்தையோடு வியாபாரத்தில் ஈடுபட்டேன். ராமானந்தன் பட்டணத்துக்கு மேல்படிப்புக்குப் போனான். அங்கேயும் அப்படித்தான் என்று கேள்வி. அவன் பட்டப் படிப்பு முடிந்ததும் அப்பா அவன் கல்யாணத்துக்காக ஏற்பாடுகள் செய்தார். அவன் ஒரேயடியாக மறுத்துவிட்டான்.

இதற்குப் பின்னர்தான் அவனுடைய தந்தை அவனைப் பற்றிக் கவலையடையலானார். பல இடங்களில் அநாவசியமாகச் சுற்றிக் கொண்டிருக்கும் அவனைப் பற்றி என்னிடம் அவர் சொன்னது இன்றும் என் மனத்தில் பசுமையாக இருக்கிறது.

ஒருநாள் மாலை நேரத்தில் ராமானந்தனின் தந்தை எங்கள் கடைக்கு வந்தார். நான் மட்டும்தான் கடையில் இருந்தேன். '' உன்னைப் பார்க்கத்தான் வந்தேன், சோமு !'' என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்தார்.

'' என்ன விஷயம் ?'' என்றேன்.

'' என்ன விஷயம் இருக்கிறது? எல்லாம் உன் கூட்டாளியைப் பற்றித்தான். இவனை என்ன வழியில் செலுத்தலாம் என்று தெரியவில்லை, சோமு. நீயாவது சொல்லக் கூடாதா? எனக்கு முன்னைப்போல் இல்லை. அவனுக்கும் இப்போது அடிக்கடி நோய் வந்து விடுகிறது. நானாவது வாய்விட்டுச் சொல்லுகிறேன். அவள் உள்ளேயே வைத்துக்கொண்டு உருகுகிறாள். போகாத கோயிலுக்கெல்லாம்போய்ப் பெற்ற பிள்ளை, இம்மாதிரி ஊர் சுற்றிக் கொண்டிருக்கிறான். பொறுப்பு இல்லை.'' அவருடைய கண்களில் ஈரம் தோய்ந்தது. மேல் துண்டினால் துடைத்துக் கொண்டார்.

'' அதெல்லாம் ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள். எல்லாம் சரியாகப் போய்விடுவான். என்னிடம் அதை விட்டுவிடுங்கள்.''

'' அதுதானப்பா வேணும். உன் கூடப் பிறந்தவனைப் போல் அவனை எண்ணிக் கொள் '' என்றார்.

அந்த வார்த்தைகளை நான் மறக்கவில்லை. இன்று அவரும் இல்லை. அவருடைய மனைவியாரும் இல்லை. பிள்ளையைப் பற்றிய கவலையே அவர்களைச் சீக்கிரத்தில் கொண்டு போய் விட்டது.

பட்டினத்தாரது கதையைக் கேட்டிருக்கிறோம். இந்த ராமானந்தன் அவரைப்போல் அப்பா இறந்ததற்கும் அம்மா இறந்ததற்கும் வந்தான். நானே கூட இருந்து ஆறுதல் எல்லாம் சொன்னேன். ஆனால் அவன் நாடோடிப் பழக்கத்தை விடவில்லை. அப்பா தாசில்தாரராக இருந்து ஒரே மகனுக்கென்று சேர்த்து வைத்த சொத்தை நொடியில் கரைத்து விட்டான்.

நான் கிராமத்தை விட்டு மதுரைக்கு வந்து என் சாயம், வர்ணம் வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டேன். ஒரு நாள் திடீரென்று ராமானந்தன் வந்து என் முன் தோன்றினான்.

ஐந்து வருடங்களாகக் கல்கத்தாவில் இருந்ததாகச் சொன்னான். என்ன வேலை? யாருக்கும் தெரியாது. கிழிந்த சொக்காய். அதை மறைக்கப் பழைய கோட்டு. முழு நிஜார்.

அதே பழைய தோரணைதான். ஏதேதோ தன் அனுபவங்களைக் கூறினான். எங்கேயோ ஊர் சுற்றும் ஏஜண்டாக இருந்தானாம். இப்போது அந்த வேலையில் போதிய வரும்படி இல்லை என்று விட்டானாம்.

'' சரி, இப்போதாவது என்ன செய்வதாக உத்தேசம்?''

'' இப்போது ஒரு மாதம் உன்னோடு இருந்து விட்டுத் திரும்பவும் கல்கத்தாவுக்குப் போகப் போகிறேன்.''

'' ஒரு மாதமில்லை. எவ்வளவு நாட்கள் வேணுமானாலும் இரு, ராமு. ஆனால் ஒரே இடத்தில் குடும்பம் குடித்தனம் என்று இருக்க வேண்டாமா ?'' என்றேன்.

'' கல்கத்தாவிலே ஒரு வங்காளிப் பெண்ணைக் கட்டிக் கொள்ள உத்தேசம். அவள் ஒரு இளம் விதவைதான். ஆனால் நல்லவள்.''

'' சரி, யாரையாவது சீக்கிரம் கட்டிக் கொள். இந்த ஊருக்கே வந்தால் நான் ஏதாவது ஒரு வியாபாரத்தில் நுழைத்து விடுகிறேன்.''

''வியாபாரம் எல்லாம் நமக்குச் சரிப்பட்டு வருமா?'' என்றான்.

அவனிடம் என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை.

# பின்னியின் லஸ்டலின்

## பல சலவைகளுக்குப் பின்பும் புதியதாகவே விளங்குகிறது

ஷர்ட்டுகள் தைத்தவுடனே மட்டும் புதியதாக விளங்கினால் போதாது. பல சலவைகள் ஆன பின்பும் அவற்றின் புதிய தோற்றம் நீடிக்க வேண்டும். பின்னியின் லஸ்டலின் என்றும் புதியதாக விளங்குவதோடு பல சலவைகளுக்கும் பின்பும் நீடித்து உழைக்கிறது.



BINNY'S Lustalin

பின்னியின் லஸ்டலின்

'ஸான்போரைஸ்ட்'



BY 402a




சார்! சார்!

சரியாக ஒரு மாதம் கழித்ததும் புறப்பட்டு விட்டான். கல்கத்தாவுக்கு டிக்கட்டும் மேற்கொண்டு ரூபாய் நூறும் கொடுத்தேன்.

அப்புறம் இரண்டு வருஷங்கள் கழித்து ஒரு நாள் தோன்றினான். இப்போது கையில் ஒரு சூட்கேஸ் இருந்தது. யாரோ ஒரு சுதேச மன்னருக்கு அந்தரங்கக் காரியதரிசி என்றான். ''என்ன அப்பா சுதேச மன்னர்என்கிறாய்? ஒரு காரில் வந்து இறங்கவேண்டாமா?''

''இவர் அவ்வளவு பெரிய மன்னரில்லை. இப்போது லண்டனுக்குப் போயிருக்கிறார். எனக்கும் விடுமுறை. பார்க்க வந்தேன்.''




இந்தத் தடவையும் நான்தான் டில்லிக்கு டிக்கட்டுக்குப் பணம் கொடுத்தேன். கையிலும் செலவுக்கு ஏதோ கொடுத்தேன்.

மூன்றாவது தடவை அவன் வந்த போது நான் பட்டணத்துக்கு ஒரு முக்கிய காரியமாகப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.

இருவரும்பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போய்ச் 'சொப்பன உலகம்' ஓட்டலில் தங்கினோம். சென்னையில் உள்ள நவநாகரிக வசதிகள் உள்ள ஓட்டல்களில் இது மிகவும் பிரசித்தம். நான் தனியாக ஒரு 'குடில்' அமர்த்திக் கொண்டு அங்கே, என் வியாபார விஷயங்களைக் கவனித்தேன். ராமானந்தன் யார்யாருக்கெல்லாமோ இந்தியாவில் பல இடங்களுக்குக் கடிதம் எழுதினான். ஏதோ பெரிய திட்டம் ஒன்று வைத்திருப்பதாகவும் அதற்கு ஐந்து லட்ச ரூபாய் மட்டும் தேவை என்றும், தான் எண்ணுகிறபடி பணம் பிரிந்தால் என்னிடமும் ஒரு குறிப்பிட்ட தொகையைவசூலிக்கத் திட்டமென்றும் கூறினான்.

இதில் நான் அதிக அக்கறை காட்டவில்லை. காரணம் ராமானந்தன் இப்படிப் போட்ட திட்டங்கள் எத்தனை எத்தனையோ. அவை எல்லாம் ஆகாயக் கோட்டைகள்; அசாதாரணக் கற்பனைகள். நடைமுறைக்கு லவலேசமும் ஒத்து வராதவை.

ஆனால் இன்று நான் காணப்போகும் இந்த ராமானந்தன் பண்ணை அப்படிப்பட்ட அவனுடைய திட்டங்களில் ஒன்றா? அவனே அதை மேற்பார்வை பார்த்துக் கொண்டிருக்கிறானா? அல்லது அவனுடைய மேற்பார்வையாளர் யாராவது இருக்கிறார்களா? ஆனால் என்னதான்இருந்தாலும் என்னிடம் அவனுடைய திட்டத்தை மறைக்கக் காரணமில்லையே. தான் இறந்து விட்டதாக எனக்குச் செய்தி கிடைக்க ஒரு வழி செய்து கொண்டு தன் திட்டங்களை மறைப்பானேன்; என்று உருப்படி இல்லாத பல்வேறு சிந்தனைகளை என் மனம் நூற்றுக் கொண்டிருந்தது.



* * *

பண்ணை வாசலில் பெரிய வளைவில் ''ராமானந்தன் பண்ணை'' என்று அழகாக எழுதி அது இரவிலும் நன்றாகத் தெரியும்படி மின்சார விளக்குப் பொருத்தப்பட்டிருந்தது. உள்ளே பலவிதமான மரங்கள். வேலியை ஒட்டிக் கமுகு, தென்னை போன்ற மரங்கள். நான் அதை வியந்து பார்த்த வண்ணம் நின்றேன். என்னை அழைத்து வந்த கிராமத்து நண்பன், உள்ளே சென்று சற்று நேரத்துக்கெல்லாம் நன்றாக உடையணிந்த ஒருவரோடுவெளியில் வந்தான்.




அவர் தான் பண்ணை முதலாளி என்று அவர் குரலே அறிமுகப் படுத்தியது. அந்த முதலாளி, ''ஏன் வெளியி



லேயே நின்று விட்டார்கள். உள்ளே தாராளமாக வரலாமே. நம் ஜீப்பையே அனுப்பி டவுனிலிருந்து வேண்டிய கார் சாமான்களை வாங்கி யிருக்கலாமே'' என்று உபசரித்தார்.

அவர் என்னை வரவேற்ற முறையும் எனக்கு ஆறுதல் சொன்ன வகையும் என் மனத்தைக் கவர்ந்தன. நான் வியப்பு மேலிடப் பேச்சைத் தொடங்கினேன்.

''ஆமாம்! இந்த இடத்தில் இவ்வளவு பெரிய பண்ணை இவ்வளவு செழிப்பாக இருப்பதற்கு உங்களுடைய உழைப்புத்தான் காரணமாக இருக்க வேண்டும். இல்லையா?''

''உழைப்புத்தானுங்க. உழைப்புத்தானே எல்லாத்துக்கும் முக்கியம். ஆனால் உழைப்போடு ஊக்கமும் அக்கறையும் வேண்டாமா?''

''நிச்சயம். ஊக்கம் அக்கறை இல்லாவிட்டால் எதுதான் செம்மையடையும்? சுமார் எவ்வளவு வருஷங்கள் இருக்கும் இந்தப் பண்ணை ஏற்பட்டு?'' என்றுகேட்டேன்.

''அது ரொம்பக் காலம் இருக்கும். ஆனால் என் கைக்கு வந்து இப்போ ஆறு வருஷம் ஆகிறது. ஏதோ ஒரு பெரிய மனுஷர் புண்ணியத்தினாலே என் கையில் கொஞ்சம் பணம் வகையாகச் சிக்கிற்று. அப்படியே இந்த இடத்துக்கு வந்து முதலில் இந்த இடத்தை வாங்கினேன். அப்புறம் பக்கத்திலே உண்டான காடுகளையும் எனக்கே விற்றுவிட்டாங்க. ஏதோ இந்த இடத்திலே இருந்து பாடுபடுகிறோம். ஒன்றும் குறைவில்லீங்க, அந்தப் பெரியவர் புண்ணியத்தினாலே.''

எனக்கு இப்போது அந்தப் பண்ணை முதலாளியை எங்கேயோ பார்த்த ஞாபகம்.

''உங்களை நான் எங்கேயோ பார்த்த ஞாபகமாக இருக்கிறது. எந்த இடத்தில் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை. சென்னையில் 'சொப்பன உலகம்' என்று ஒரு ஓட்டல் இருக்கிறதே. அங்கே பார்த்திருப்போமோ என்று...?''

''அங்கே பார்த்திருக்க மாட்டீங்க. நான் ஐந்து வருஷ காலம் சினிமாவில் ஒரு 'காமிக்' நடிகனாக இருந்தேன். பதினைந்து படங்களில் நடித்திருக்கிறேன். ஏதாவது படத்தில் பார்த்திருப்பீங்க!'' என்றான்.

''அப்படியா?'' என்றேன். அதே சமயத்தில் அவனை நான் 'சொப்பன உலகில்' ராமானந்தனோடு பார்த்த ஞாபகம் சட்டென்று வந்தது.

எட்டு வருஷங்களுக்கு முன் ராமானந்தனோடு 'சொப்பன உலகில்' தங்கியிருந்தேன்.

ஒருநாள் மாலை சுமார் நாலரை மணிக்கு ஹோட்டலுக்குச் சென்று, பலகாரம் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். ராமானந்தன் வழக்கத்துக்குமாறுகப்பட்டுக்கரைவேஷ்டியும், மெல்லிய ஜிப்பாவும் விசிறி மடிப்பு அங்கவஸ்திரமும் அணிந்திருந்தான். எல்லாம் என்னுடைய துணிகள்தான்! நான் முழுக்கால் சட்டையும் ஷர்ட்டும் போட்டுக் கொண்டிருந்தேன்.

அந்தச் சமயத்தில் இதோ பண்ணை முதலாளியாக இருக்கிறானே இவன் அங்கே பரிதாபகரமான தோற்றத்துடன் வந்து ராமானந்தனுக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டான்.

''யாரப்பா நீ?'' என்றான் ராமானந்தன்.

''ஒரு ஏழை நடிகனுங்க'' என்றான்.

''என்ன வேணும்?''

''வேலை வேணுமுங்க!''

''சரி. முதலில் அப்படி உட்கார்ந்து சாப்பிடு'' என்று சொல்லி விட்டு, பரிமாறுகிறவரைக் கூப்பிட்டு அவனுக்கும் பலகாரம் கொடுக்கச் சொன்னான்.

நான் மௌனமாக இருந்தேன். ஒன்றும் சொல்லவில்லை. எல்லாருக்கும் பணம் கொடுக்கப் போகிறது நான்தான். இருந்தாலும் ராமானந்தன் பண்ணும் வேடிக்கை பிரமிக்கத்தக்கதாக இருக்கும்!

காப்பி வந்ததும் சாப்பிட்டு விட்டு எழுந்தோம். அந்த 'நடிகனும்' எழுந்து எங்களைப் பின்தொடர்ந்தான்.

''சாப்பிட்டாச்சா, அப்பா?''

''ஆமாங்க.''

''வேறே என்ன வேணும்?''

''உங்க படத்திலே ஒரு சின்ன 'சான்ஸ்' கொடுங்க. உங்க சாப்பாட்டை எப்போதும் கொடுங்க'' என்றான்.

ராமானந்தன் என்னை அர்த்தத்தோடு பார்த்தான். பிறகு, ''நான் நேரடியாகப் படம் எடுக்கிறதை எல்லாம் இப்பொழுது விட்டு விட்டேன்!'' என்றான்.

''அப்படிச்சொல்லாதீங்க, எசமான்! எப்படியும் உதவி செய்ய வேணும். ஊரில் மழை, தண்ணீர் இல்லே. பட்டணத்துக்கு வந்து நாலு பொன் சேர்த்துக் கொண்டு ஊருக்கு ஓடிப் போகலாம்னு ஆசையால் வந்தேனுங்க. வந்த இடத்தில் என் கைப்பணமும் போச்சுங்க'' என்றான் அவன் தைரியமாக.

''நாலு பொன் சேர்க்க வந்திருக்கிறாயா? பொன் சேர்க்கப் படத்திலே நீ நடிக்கப் போகிறாய். ஆனால் அதுதான் பொன் சேர்க்கும் வழியா அப்பா?''

இவ்வாறு கூறிய ராமானந்தன் மேலும் பேசினான்:

''மண்ணைப் பொன்னாக்கும் மாய வித்தை என்ன? படத்தில் நடிப்பதா? கொள்ளை அடிப்பதா - வியாபாரம் செய்வதா? வட்டிக்குக் கடன் ஒட்டிக்கு இரட்டி என்று கொடுப்பதா? இல்லை. இரசவாதமா?-இல்லை உழைப்புத்தான். சரீரத்தைச் சாறாகப் பிழியும்-நெற்றி வேர்வை நிலத்தில் வழிந்தோட உழைக்கும் உழைப்புத்தான் மண்ணைப் பொன்னாக்கும் மாயவித்தை.''

இதைக் கேட்ட நான் அயர்ந்து போனேன்.

''இந்தாப்பா. உன்பேர் என்ன சொன்னாய்? ஆறுமுகமா? ஆறுமுகம்! இந்தா, ஐந்து ரூபாய் தருகிறேன். ஊருக்குப் போய் நிலத்திலே நீயும் உன் மனைவியும் பாடுபடுங்கள். அந்த வேர்வை நிலத்தில் விழட்டும். பொன் காய்க்கும்'' என்றான் ராமானந்தன்.

''ஆனால் நிலம் இல்லீங்களே. நிலம் இருந்தால்தானே நான் பாடுபட முடியும்? உங்களுக்குத் தெரிந்த படடைரக்டர் யாருக்காவது ஒரு கடிதாசி கொடுங்க. என் கையில் நாலு காசு சேர்ந்ததும் ஊருக்குப் போய்ப் பாடுபடுகிறேனுங்க'' என்றான் அவன்.

ராமானந்தன் மேலும் கொஞ்சம் தன்னுடைய நாடகத்தை நீட்டினான்.

என் பேர் அச்சடித்த காகிதம் ஒன்றை எடுத்து 'ராமானந்தன்' சோமசுந்தரம் மேற்பார்வை, சொப்பன உலகம்' என்று போட்டு விட்டு மடமடவென்று எழுதி என் கையில் கொடுத்தான். அதைப் படித்த எனக்குச் சிரிப்பு ஒரு பக்கம்; துக்கம் ஒரு பக்கம்.

அந்தக் கடிதம், அப்போது பிரபல டைரக்டராக இருந்த ராம்மோகனுக்கு எழுதியது.

''அன்புள்ள ராம்மோகன்,

என்னை ஞாபகம் இருக்கிறதா? உன் பள்ளித் தோழன் ராமானந்தன். பலகாலம் வட இந்தியாவில் சுற்றிவிட்டு அவசர காரியமாய் நேற்று விமானத்தில் வந்தேன். இன்றிரவு திரும்பவும் விமானத்தில் டில்லி போகிறேன். ஆகையால் நேரில் வந்து உன்னைப் பார்த்து நேரிலேயே பாராட்டுதல்களைத் தெரிவிக்க முடியவில்லை. உன் கடைசிப் படத்தின் இந்தி மொழிபெயர்ப்பைப் பார்க்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. வெகு ஜோர். நீ என்னிடம் பல தடவைகள் சிறு வயதில் சொன்ன யுக்திகளையெல்லாம் கையாண்டிருக்கிறாய். விடாதே. உன் படத்துக்கு ஒரு இன்டர்நாஷனல் பரிசு என்று கிடைக்கப் போகிறதோ அன்றுதான் எனக்குப் பூரண திருப்தி. எங்கிருந்தாலும் உன் படங்களின் முன்னேற்றத்தை நான் கவனித்துக் கொண்டிருப்பேன்.

நிற்க. இந்தக் கடிதம் கொண்டு வரும் ஆறுமுகம் ஒரு சிறந்த நடிகன் என்று என் நண்பர் என்னிடம் சொல்லி எனக்குச் சிபாரிசு செய்யும்படி கேட்டுக் கொண்டார். மறுக்க முடியாத நண்பர். ஆகவே உன்னிடம் அனுப்புகிறேன். முதலில் ஒரு சிறிய பாகம் கொடுத்து முயன்று பார். அப்புறம் உன் இஷ்டம். உன் புகழ் மேன்மேலும் வளர விரும்பும்,—**ராமானந்தன்.**''

''யாரப்பா, இந்த ராம்மோகன்? உன் கல்லூரித் தோழனா?'' என்றேன் ஆச்சரியத்தோடு.

'' அப்புறம் சொல்லுகிறேன். இந்தா அப்பா ஆறுமுகம். இதைக் கொண்டு 'குழந்தை உள்ளம்' என்ற படத்தின் டைரக்டர் ராம்மோகனைப் பார். நான் இன்றிரவே டில்லிக்கு ஆகாய விமானத்தில் போகிறேன்'' என்று சொல்லி அந்தக் கடிதத்தைக் கொடுத்து அந்த ஏழை நடிகனை அனுப்பி வைத்தான்.

அவன் சென்றதும், '' யாரப்பா இந்த ராம்மோகன் ?'' என்று கேட்டேன்.

'' குழந்தை உள்ளம் டைரக்டர்.''

'' அது சரி. உன் கல்லூரித் தோழனா ?''

'' அது யாரோ? எல்லாம் நான் அப்போதுக்கப்போது இந்த சினிமாப் பத்திரிகைகளில் படிப்பதைச் சேர்த்து ஒரு கதை விட்டிருக்கிறேன். கடைசியாக வந்த 'திரை வானில்' டைரக்டர் பேட்டியில், அவனுடைய சிறு வயதில் தோன்றிய யுக்திகளைக் குழந்தை உள்ளம் என்ற படத்தில் சோதனை செய்து பார்த்ததாக எழுதியிருக்கிறான். குழந்தை உள்ளம் என்ற படம் இந்தியிலும் வந்திருக்கிறது. எல்லாவற்றையும் சேர்த்து மாமரத்தில் கல்லை எறிகிறேன். கல் விழுந்தால் விழட்டும். இல்லை, மாங்காய் விழுந்தாலும் சரி.''

'' அடபாவி! ஐந்து ரூபாய் வேறு என் மணிபர்சிலிருந்து அவனுக்கு எடுத்துக் கொடுத்து விட்டாயே!''

'' ராம்மோகனைப் பார்த்துவிட்டு ஊர் போய்ச் சேரட்டும் என்றுதான்'' என்றான்.

ராமானந்தன் என்னோடு மதுரைக்கு வரவில்லை. நானே டிக்கட் வாங்கிக் கொடுத்துக் கல்கத்தாவுக்கு அனுப்பினேன். இரண்டு மாதங்களுக்குள் ஒருநாள் எதிர்பாராதவிதமாய்க் கல்கத்தா டாக்டர் ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் ராமானந்தன் மரணச் செய்தியைச் சுமந்துகொண்டு வந்தது! கல்கத்தா ஆஸ்பத்திரி ஒன்றில் அவன் இறந்து விட்டதாகவும் அவனுடைய கடைசி விருப்பம் அவனுடைய மரணத்தைப் பற்றி எனக்கு அறிவிக்க வேண்டுமென்பதென்றும் சுருக்கமாய்க் குறிப்பிட்டிருந்தார்.

ராமானந்தன் என்ற அருமையான, பொறுப்பில்லாத — விளையாட்டுத்தனமான நண்பன்; கண்காணாத தேசத்தில் மறைந்து விட்டான். அவனால் யாருக்கு என்ன லாபம்? இருந்தும் இறந்தும் ஒன்றுதான் என்று எண்ணிக் கடிதத்தை எங்கேயோ போட்டேன்.

* *

**எ**ல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்த பொழுது இந்தப் பண்ணையார் அதே ஆறுமுகம் தான் என்பது எனக்குப் புலனாகியது. இருந்தாலும் மேலும் ஊர்ஜிதம் செய்து கொள்வதற்காக, 'ராமானந்தன் பண்ணை' என்று பேரிருக்கிறதே. அது ஏன்?'' என்றேன்.

'' அவர்தானுங்க, ஒரு கடிதம் கொடுத்து, என்னைச் சினிமாவில் சேர்த்துவிட்ட மகான். அவர் வடநாட்டில் பெரிய வியாபாரி. பட்டணத்தில் ஒரு இடத்தில் கண்டேன். அவர்தான் எனக்குப் புத்திமதி சொன்னார், நிலத்திலே பாடுபடுகிறதுதான் பெரிய தொழில் அப்படின்னு. அது என் மனசிலேயே இருந்தது. நாலு பொன் கையில் சேர்ந்ததும் இங்கே ஓடி வந்துட்டேனுங்க. நாலு நாள் பட்டினியில் எனக்குப் பலகாரம் வாங்கிக் கொடுத்து என் கையில் ஐந்து ரூபாய் பணமும் கொடுத்து, எனக்கு வேலை வாங்கிக் கொடுத்துப் புத்திமதியும் சொன்ன உத்தமருடைய நினைவுதானுங்க இந்தப் பண்ணை. அவரைத் திரும்பவும் நான் எப்போ பார்க்கப் போகிறேனோ?'' என்றான். அவன் உணர்ச்சியைப் புரிந்து கொண்டேன்.

அவனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்படும் பொழுது. அந்தப் பண்ணையையும், கம்பீரமான எழுத்துப் பலகை வளைவில் 'ராமானந்தன் பண்ணை' என்ற எழுத்தையும் ஒரு தடவை பார்த்தேன்.

இறந்த செய்தி வந்தபோது ஏற்படாத உணர்ச்சி என்னைப் பிடித்தது. இரண்டு சொட்டுக் கண்ணீர் என் கன்னத்தில் உருண்டு ஓடியது.

**Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10**
**Managing Editor: T. Sadasivam.**

உங்கள்
வேலையை
இலகுவா
க்குவதற்
கென்றே
தயாரிக்
கப்பட்டுள்ள
அற்புத
சோப்பவுடர்




## வெட்டவெளிச்சமான உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

ரின்ஸோ—வெண்மை யென்றால் உண்மையான வெண்மை! சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, நூலிழைகளில் மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டாம். வெள்ளைத் துணிகள் வெள்ளைவெளேரென்றும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமாகவும் ஆகிவிடும். புடவைகள் முதல் கைக்குட்டை வரை, குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது ரின்ஸோ!

TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



